உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முத்துக்குமாரசுவாமி முழுத்துறவி நற்சரிதம்



சுவாமிகள் சொற்படி
பல அன்பர்களைக்கொண்டு சுவாமிகளால்
வெளியிடப்பட்டது.



1960






புஸ்தகம் சுவாமிகள் வசிக்கும் இடம் கிடைக்கும்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முத்துக்குமாரசுவாமி முழுத்துறவி

## நற்சரிதம்

மாபெரும் சிவயோக ஜாதகனே என்பது வசிஷ்டர் சொல்



ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார

சுவாமிகள் சொற்படி

பல அன்பர்களைக்கொண்டு சுவாமிகளால்

வெளியிடப்பட்டது.

1960



புஸ்தகம் சுவாமிகள் வசிக்கும் இடம் கிடைக்கும்.

---

சுவாமிமலை சச்சிதானந்த சமாதி நிலையம்,

ரூ 3/-க்கு அமுதுபடி கொடுத்து அருள் பெறலாம்.

வெங்கடகிரியில் ஸேஷய்யா என்ற ஒருவர் பிறவிக் குருடராகயிருந்து வந்தார். ஸ்ரீ பிர்ம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் அவர்கள் வெங்கடகிரிக்கு வந் திருந்து ஸ்ரீ இராமலிங்கேஸ்வரன் கோயிலில் அபிஷேக ஆராதனை செய்து பல சிஷ்யர்களுக்கு உபதேசம் செய் யுங்காலை மேற்படி ஸேஷய்யா தனக்கு பஞ்சாக்ஷர உப தேசம் செய்யும்படி கேட்டுக்கொள்ள சுவாமிகள் மனம் இறங்கி அவ்வாறே பஞ்சாக்ஷர உபதேசம் செய்தனர். அதன் பயனாக ஸேஷய்யா என்பவர் தற்காலம் பெரிய பண்டிதராக விளங்குகின்றார். சமஸ்கிருதம், இங்கிலீஷ், ஹிந்தி, தெலுங்கு பாஷைகளில் விற்பன்னராகவும், கவிகள் இயற்றியும், பாடுவதிலும் சங்கீதத்திலும் தேர்ச்சி பெற்றவராயும், வீணை முதலிய வாத்தியங்களை வாசிப் பதிலும் திறமையுடையவராகவும், பிறரால் மதிக்கப்பட்டு அஸேஷானந்தராக விளங்குகின்றார்.

இது சுவாமிகள் செய்த அற்புதத்தில் ஒன்று. இது விஷயமாய் இங்கிலீஷில் வெங்கடகிரி ராஜா எஸ்டேட் காரியம் ஸ்ரீனிவாச நாயுடுவால் நற்சான்று கொடுக்கப் பெற்றது.

---

Swami ASESHANANDA,
(Blind Swami from Venkatagiri Town.)

Sishya of SRI BRAHMA MONA NIRVANA MUTHUKUMARA SWAMI. He was born blind. He was initiated (given Panchakshara Upadesa) by Sri Muthukumara Swami. After this upadesam, he became a great Pandit in Sanskrit in Hindi and English and other languages and in music, he became a poet; he sings well and plays harmonium and violin and is respected everywhere.

He attained to this greatness on account of the power of the upadesam which he received from the great elderly Muthukumara Swami in Sri Ramar Pooja Sri Ramalingeswaraswami Temple at Venkatagiri.

By
SRINIVASAN,
11—8—60. Karyam, Raja Estate, Venkatagiri.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பொருளடக்கம்

## முத்துக்குமார சுவாமிகள் சரித்திரம்

| நெ. | பொருள். | | பக்கம் |
|---|---|---|---|



---

[redacted]

## குரு நிந்தை

1 பெற்றிருந்தாரையும் பேணார் கயவர்க
ளுற்றிருந்தாரையுலை வன சொல்லுவர்
கற்றிருந்தார் வழியுற்றிருந்தாரவர்
பெற்றிருந்தா ரன்றியார் பெறும் பேறே

2 ஓரெழுத்தொரு பொருளுணரக் கூறிய
சீரெழுத்தாளரைச் சிதையச் செப்பினோ
ரூரிடைச் சுணங்களுய்ப் பிறந்தங் கோருகம்
பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே.

3 பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங்கலங்கச் சிதைவுகள் செய்தவ
ரத்தமுமா வியுமாண்டொன்றின் மாய்ந்திடுஞ்
சத்திய மீது சதா நந்தி தாளே!

4 மந்திரமோ ரெழுத்து ரைத்த மாதவர்
சிந்தையி னைந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்களுய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே

5 ஈசனடி யாரிதயங் கலங்கிடத்
தேசமு நாடுஞ்சிறப்பு மழிந்திடும்
வாசவன் பீடமுமா மன்னர் பீடமு
நாசமதாகுமே நம் நந்தியாணையே

6 சன்மார்க் கச்சற் குரு சந்நிதி பொய்வரி
னன் மார்க்க முங் குன்று ஞானமுந்தங்காது
தொன் மார்க்கமாய துறையு மறந்திட்டுப்
பன் மார்க்கமுங் கெட்டுப் பஞ்சமுமாமே

7 கைப்பட்ட மாமணிதானிடை கை விட்டு
வெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதி போன்றுங்
கைப்பட்ட நெய்பாற யிர் நிற்கத் தானறக்
கைப்பிட்டுண்பான் போன்றுங்கன்மி ஞானிக்கொப்பே.

உ

திருச்சிற்றம்பலம்

இஃது

நெரூர் சதாசிவ பிரம்மேந்திர பரம்பரை
சிவராமலிங்க பரமஹம்சர் அவர்களது சிஷ்யர்

ப்ரம்ம மோன நிர்வாண

# முத்துக்குமார சுவாமிகள்

# சுய சரிதம்

( பாராட்டுரைகளுடன் )

★

சுவாமிகளது அன்பர்கள் பொருளுதவிகொண்டு
வெளியிடப்பட்டது.

★



## ஞானப்பால் உண்ட குமாரதேவர் அருளிய ஞான அம்மானே.

---

என்ன வுணர்ந்ததன் இல்லென்பை யம்மானே
ஏற நோக்கா திளைமைதனி லம்மானே
பொய்யென விட்டுப் புறப்பட்டே னம்மானே
போதகுரு சாந்தன் பொன்னடிக் கம்மானே
வந்து துதித்து வணங்கினே னம்மானே
மலரடி யென் சென்னி வைத்துப்பின் னம்மானே
மூத்தி நெறியை மொழிந்துட னம்மானே
முதுகிரியிற்றவ முயலென்று னம்மானே
அவனுரைத்தபடி யங்கிருந்து தம்மானே
அல்லும் பகலு மசைவற வம்மானே
மேவிநின் றேதவ மேவினே னம்மானே
விருத்தவம்பிகை வந்து விளக்கினு ளம்மானே
அவன் விளக்க நன்று யனுபவ மம்மானே
ஐயந்திறிவற வறிந்தேன்கா னம்மானே.

மேலேகண்டது தன் சரிதையைத் தான் எழுதலாம் என்பதற்குச் சான்று.

---

*ஸ்ரீ கணேசாய நம :*

# ப்ரம்ம மோன நிர்வாண முத்துகுமார சுவாமிகள் ஜாதகம்.

---

ஸ்வஸ்திஸ்ரீ 14—5—1884 ஆங்கில வருஷம் தாரண நாமஸம்வத்ஸரம் உத்திராயணம் வஸந்தருது வைகாசி மாதம் 3-ம் தேதி புதவாரம் சூரிய உதயாதி நாழிகை 3, விநாடி 10 அளவில் பூராட நக்ஷத்திரம் முதல் பாதம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தி ஸாத்ய நாமயோகம் கூடிய சுபதினம் ரிஷப மத்திய திரேகாணத்தில் சுப ஜனனம்.

ஜனன காலம் வந்த சுக்ரமகாதிசை கெற்பச் சிஷ்டம் ஷூ 18, மீ 10, நாள் 15.

| | | | |
|---|---|---|---|
| கே. | | ல. சூ. பு. சனி | சு. |
| | ராசி | | கு. செ. மா. |
| | | | |
| சந். | | | ரு. |

| | | | |
|---|---|---|---|
| கே. செ. | பு. | | ல. சனி |
| சு. மா. | அம்சம் | | |
| சூ. | | | சந். |
| | | | கு. ரு. |

நந்தி தன்னில் காரியுடன் கதிர்மாலும்
சுன் இரட்டை மேவ சுரகுருசேய் மாந்தி நண்டிலாட
கரும்பாம்பு கன்னி மதிவில் செம்பாம்பு மீன் மதிலுரைய
உடல் கொண்டுவரு சீவன் துரியன்.

*"தனக்கென வாழாப் பிறர்க்குறியாளன்; வைராக்யன் ஞானி; பல தீக்ஷையோடு சிவதீக்ஷை கொண்டோன்; சிவலோகநாதனும் நாடும் நடை யுடை பாவனையுடைத் தன்னழிந்தோன்; தனக்குக் கிட்டியதை கீழ் இரைத்து அணவருய்ய மனம்கொண்ட மாண் புள்ளோன்; மாபெரும் சிவயோக ஜாதகனே" என்பது வசிஷ்டர் சொல்.*

அன்னை அருள் கொண்டு அறிந்து
அன்னை ஆசியை அனைவரரிய
அறிமுகம் செய்து கொள்ளும்
அருள் தொண்டு செய் தொண்டர்
குழு தொண்டன் தேசிகன்.

பாட்டின்படி :

| | |
|---|---|
| நந்தி – ரிஷபம் | சேய் – செவ்வாய் |
| காரி – சனி | மாந்தி – குளிகன் |
| கதிர் – ரவி | நண்டு – கடகம் |
| மால் – புதன் | கரும்பாம்பு – ராகு |
| சுன் – சுக்ரன் | மதி – சந்திரன் |
| இரட்டை – மிதுனம் | வில் – தனுசு |
| சுரகுரு – குரு | செம்பாம்பு – கேது. |

---

பாக்கவே கேதுவுமே மூன்றுரோடு பதினொன்று
ஈராறுதன்னில் நின்றால்
தீர்க்கமாம் வாழ்வுமுண்டு விளைவுமுண்டு
தீங்குசெய்யும் சத்துருவும் நாசமாவார்
பூக்கவே லெக்ஷிமியின் அருளுமுண்டாம்
புகழாகும் தீர்த்தமொடு ஞானங்கிட்டும்
ஏற்கவே எத்திசையுங் கீர்த்தி ஓங்கும்
எழிலான அருந்தவமும் மோக்ஷமுண்டே.

கன்மநாயகன் தன்னோடு காக்ஷியாய் மூன்று
கோள்கள்
தன்மையில் கூடிநின்றால் சன்யாச
யோகமுண்டாம்
புன்மையில் ஒருக்கோள் கூடில்
பொருந்திய ஞானியாவான்
இன்மையில் குருகடாக்ஷத்தினிதறிந்து
உரைத்தல் வேண்டும்.

---

உ

திருச்சிற்றம்பலம்

ஆனைமுக னறுமுக னருளாந் தேவி
அனந்தகண வளவற்ற முனிவர் தேவர்
ஏனையுள நல்லன்பர் யாவ ராலும்
எப்பயனும் பெறவேண்டி யிதயத் தின்கண்
ஊனமற உபாசிக்கப் பட்டன் னோர்க்கந்
குகந்தபய னருள்கருணை மூர்த்தி யாகி
வானமென வகண்டசிதா காய மான
வத்துவதாம் பரசிவனை வணங்கல் செய்வாம்.

---

உ

# பாயிரம்.

---

## விநாயகர் துதி

---

வேழ முகத்து விநாயக னைத்தொழ
வாழ்வு மிகுத்து வரும்.

வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழத்
துள்ளி யோடும் தொடர்ந்த வினைகளே.

அப்பம் முப்பழம் அமுதுசெய் தருளிய
தொப்பை யப்பனைத் தொழவினை யறுமே.

சிந்தித் தவர்க்கருள் கணபதி ஜெயஜெய
சீரிய யானைக் கன்றே ஜெயஜெய
* அன்புடை யமரரைக் காப்பாய் ஜெயஜெய
ஆவித் துணையே கணபதி ஜெயஜெய

---

* விபரம் சுவாமிகள் சரித்திரத்திற் காண்க.

இண்டைச் சடைமுடி இறைவா ஜெயஜெய
ஈசன் தந்தருள் மகனே ஜெயஜெய
உன்னிய கருமம் முடிப்பாய் ஜெயஜெய
ஊர்நவ சந்தி யுகந்தாய் ஜெயஜெய
எம்பெரு மானே இறைவா ஜெயஜெய
ஏழுல கந்தொழ நின்ருய் ஜெயஜெய
ஐயா கணபதி நம்பியே ஜெயஜெய
ஒற்றை மருப்புடை வித்தகா ஜெயஜெய
ஓங்கிய யானைக் கன்றே ஜெயஜெய
ஔவிய மில்லா தருளே ஜெயஜெய
ஃற வத்து ஆனவா ஜெயஜெய
கணபதி என்வினை களைவாய் ஜெயஜெய
ஙப்போல் மழுவொன் றேந்தியே ஜெயஜெய
சங்கரன் மகனே சதுரா ஜெயஜெய
ஞயனம் பினர்பா லாடியே ஜெயஜெய
இடம்பட விக்கின விநாயக ஜெயஜெய
இணங்கிய பிள்ளைகள் தலைவா ஜெயஜெய
தத்துவ மறைதரு வித்தகா ஜெயஜெய
நன்னெறி விக்கின விநாயக ஜெயஜெய
பள்ளியி லுறைதரு பிள்ளாய் ஜெயஜெய
மன்றுள் ளாடும் மணியே ஜெயஜெய
இயங்கிய ஞானக் குன்றே ஜெயஜெய
அரவக் கிண்கிணி ஆர்ப்பாய் ஜெயஜெய
இலவக் கொம்பொன் றேந்தியே ஜெயஜெய
வஞ்சகம் பலவும் தீர்ப்பாய் ஜெயஜெய
அழகிய யானைக் கன்றே ஜெயஜெய
இளமத யானை முகத்தாய் ஜெயஜெய
றகுபதி விக்கின விநாயக ஜெயஜெய
அனந்தமோ டாதிநின் அடிதொழ அருளே.

---

உ
சிவமயம்

## ஞானப்பால் உண்ட குமார தேவர்
## ஒன்பதாவது சகசநிட்டை

சவிகற்பநிருவி கற்பத்தகநிட்டை யெனவு ரைக்கும்
இவிகற்ப மென்று மின்றி யிடைவிடாச் சகச நிட்டை
செவியதி னெனக்கு நீயுந் திருவுளஞ் செய்ய வேண்டும்
அவியமில் விருத்த வெற்பி லம்மையே யன்பர் வாழ்வே (1)

பொதுவுறத் தருமம் பண்ணிப் புகல்வினைச் சமம தாகி
அதுவிது வென்னுஞ் சித்த மமலமாய நித்த நித்தம்
இதுவென வுணர்ந்த நித்தத் திகபரத் திச்சை யற்ற
சதுரர்க ளிடத்திற் பாசந் தகர்ந்திடும் பத்தி தோன்றும்(2)

பத்திதான் பதிந்த காலைப் பகரங்கத் தலமடைந்து
சுத்தியா யங்க மந்தத் தொல்லருட் சத்தி யாகி
நித்தியா னந்த லிங்க நேரதாய்த் தரிக்கப் பட்டுத்
தித்தியா நின்ற வின்பந் திருத்தியிற் களிக்குமென்றும்(3)

சமரசம் பதிந்த காலைத் தலமயிக் கியத்த டைந்திங்
கமரங்க மானவான்மா வந்தச்சிற் சத்தி யாகி
விமலமா லிங்கந் தன்னை விளங்குநெஞ் சினிற்ற ரித்து
நிமலமாம் பரமா நந்த நிஜதிருத்தியிற்களிக்கும் (4)

ஆனந்தம் பதிந்த காலை யச்சர ணத்த டைந்து
வானந்தத் தங்க மாகு மகபரா சத்தி யாகித்
தானந்தப் பிரசா தத்தைத் தரித்துச்சோத் திரத்தி லென்றும்
ஊனந்த மில்லா வின்ப வோசையிற்களிக்கு மென்றும் (5)

அனுபவம் பதிந்த காலை யடைந்துநற் பிராண லிங்கத்
தெனுமங்க வாயு நின்றங் கெழிலாதி சத்தியாகி
உனுஞ்சர லிங்கந் தன்னை யொன்றுந்தொக் கினிற்ற ரித்துப்
பனுமந்தப் பரமா னந்த பரிசத்திற் களிக்கு மென்றும்(6)

அவதானம் பதிந்த காலே யடைந்தந்தப் பிரசா தத்தை
இவனுன தேயு வங்க மிச்சைநற் சத்தி யாகி
நவமான சிவலிங் கத்தை நயனமற் றதிற்ற ரித்திங்
குவமானமில்லா வின்ப வுருவினிற் களிக்கு மென்றும் (7)

நயிட்டியம் பதிந்த காலே நன்மயே சுரத்த டைந்து
சயித்திய சலமா மங்கந் தகுஞான சத்தி யாகி
வியப்புறுங் குருலிங் கத்தை மேவுநா வினிற்ற ரித்திங்
குயப்பெறு பரமா னந்த வுருசியிற் களிக்கு மென்றும் (8)

சற்பத்தி பதிந்த காலேத் தகும்பத்தத் தலம டைந்து
முற்பகர் தரையா மங்க மொய்யதாங் கிரியை யாகித்
தற்பரா சார லிங்கந் தரித்துநா சியினி லந்தச்
சிற்பரா னந்த கந்தந் தேர்ந்ததிற் களிக்கு மென்றும் (9)

ஒருபத்தி தானே யாரு யொருதலந் தானே யாருய்
ஒருவங்கந் தானே யாரு யொருமுகந் தானே யாருய்
ஒருலிங்கந் தானே யாரு யொருமுகந் தானே யாருய்
ஒருவின்பந்தானே யாரு யொன்றதாய்க்களிக்கு மென்றும்
(10)

அனுதியிற் சிவமே லிங்க மபினேயே யங்க மாகும்
அனுதியிவ் வபினே யேயிவ் வங்கம தாயிற்றென்ருல்
அனுதியச் சிவமே யந்த வங்கத்திற் புறம்புந் தோன்றும்
அனுதியக் குருவத் தீக்கைக் கருத்தமு மிவையே யாகும்
(11)

சகச நிட்டை முற்றிற்று.

—

ஓம்:
சிவமயம்

# முத்துக்குமார சுவாமிகள் வரலாற்று

## முகவுரை

### வெண்பா.

முத்துக் குமார சுவாமி முழுத்துறவி
சத்துவம் வாய்ந்த சரித்திரத்தை—அத்துறவி
வாய்க்கேட் டுணர்ந்தோர் வரைந்துவைத்த வாதிருத்தித்
தோய்க்கேன் முகவுரையாற் றுய்த்து.

(மருதாசல ஐயா)

நீர்மகள் ஆடைசூழ நிலவும் நிறைபொறுமைப் பார்மகள் புகழும் பதிபுண்ணியம் நிரம்பப்பெற்ற இந்திய மக்களுக்குள் முத்துக் குமார சுவாமிகள் ஒருவராவர். "திருவித வுலகத் தரிதொரு ஞானி" என்ற சாந்தலிங்க சுவாமிகள் வாசகத்திற்கு ஷிசுவாமிகள் வாச்சியராகத் திகழ்தலின், அன்னரது வரலாற்றினை எனது அறிவுக்கு எட்டிய அளவு ஒரு சிறிது ஆராய்ந்து ஒரு முகவுரை வகுக்கப் புகுகின்றேன்.

1. வரலாறு:— வரலாறு என்பது நூலினத்தில் ஒன்று. நூல் என்பது பலபொருள் ஒரு மொழி. நூல் என்னும் சொற்கு ஒன்பான்வகைப் பொருள் வழங்கினும், ஈண்டு நூல் என்பதற்குத் தனிப்பெருஞ் சிறப்புப் பொருள், அறிவினை விளக்குங் கருவி என்பதேயாம்.

நூல்கள் முதன் முதல் எல்லா மொழிகளிலும் செய்யுள் வடிவமாகவே எழுதப்பட்டன. நாளடைவிலே இலக்கிய நூல்கள் பெரும்பான்மையும், வரலாற்று நூல்கள்சிறுபான்மையும்செய்யுள் நடையிலும்வரையப்பட்டன. இக்காலத்திலோ, இலக்கிய நூல்கள் சிறுபான்மை செய்யுள் நடையிலும் பெரும்பான்மை உரை நடையிலும்,

வரலாற்று நூல்கள் அடியோடு உரைநடையிலும் இயற்றப்பட்டு வெளிவருகின்றன. எக்காலத்திலும் சாத்திர நூல்களையும், தோத்திரப் பிரபந்தங்களையும் சொற்பொருட்கட்டமைந்த செய்யுள் நடையில் அமைப்பதையும் அறிஞர் வரவேற்பர். அங்ஙனமே, செய்யுள் வடிவில் அமைந்த இசைநூல்களையும், நாடக நூல்களையும் அறிவுடையோர் கொண்டாடுவர். இயற்றமிழ் நூல்களில் பெரும்பாலான வற்றையும் காலத்திற்கேற்ற கோலமாக உரைநடை வடிவில் அமைந்து வெளிவருவதனையும் அறிவுசான்றவர் நன்கு வரவேற்பர். ஆதலின், செய்யுள் நடை நூல்களைவிட உரைநடை நூல்களே, இனி மிகுதியாக வேண்டப்படுவன.

2. வரலாறு ஒரு கண்ணாடி போன்றது; இலக்கியம் ஒரு உருப்பெருக்கிக் கண்ணாடி போன்றது. வரலாறு என்பது உள்ளதை உள்ளவாறே கூறும் இயற்கை நூல். இலக்கியம் அங்ஙனம் இல்லாத செயற்கை நூல். வரலாறு பொதுவாக நாடு, மொழி முதலியவற்றின் பண்டை நிகழ்ச்சிகளை வரிசை முறையாகக் கூறும் நூல். அதுபோலவே இலக்கியம் ஒரு நல்லாசிரியனால் பலதிறச் செய்திகளையும் கற்பித்து அறிவு நுணுக்கமாகச் சொற்பொருட் சுவைகள் நிரம்பக்கூறுவது. இவ்வாறு வரலாற்றுக்கும் இலக்கியத்திற்கும் ஒற்றுமையில் வேற்றுமையும் வேற்றுமையில் ஒற்றுமையும் காணலாகும்.

3. வரலாறுகள் பல உள: வரலாறுகள் தனித்தனி ஒவ்வொரு பொருளையும் பற்றியன. ஒரு மனிதன், விலங்கு, பறவை அல்லது நாடு, மொழி, கலை என்பன போன்ற யாதேனும் ஒரு பொருள் பற்றியும் வரலாறு எழுதல் உண்டு. வரலாறும் இலக்கியமும் ஓதியுணர்வதனால் இயற்கையறிவும் செயற்கையறிவும் ஒன்றோடொன்று பிணைந்து நின்று, வேலை செய்யும் ஆற்றல் ஏற்படும்.

4. வரலாற்று நூல்கள் :— வரலாறு நிரலாறு பெறுதல் வேண்டும். முத்தமிழ் வரலாறு, தேச வரலாறு, அரசியல் வரலாறு, அடியவர் வரலாறு முதலிய வரலாறுகள் அழுத்தமாக ஆராய்ந்து எழுதப்படல் வேண்டும். இந்நூல் முற்குறித்த அடியவர் வரலாறு என்னும் இனத்திணைச் சார்ந்ததாகும். தமிழ் குறித்துத் தமிழலங்காரம் கூறும். புலவர் வரலாறு குறித்துப் புலவர் புராணம் கூறும். சிவன் அடியார் வரலாறு குறித்துத் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் கூறும். விஷ்ணு பக்தர் வரலாறு குறித்துப் பக்த விஜயமும், பக்த மான்மியமும், நாலாயிர திவ்விய பிரபந்தமும், சீதா இராம ஆஞ்சினேயமும் கூறும்.

5. இவ்வரலாறு சுய சரிதையாகும்; ஒருவர் வரலாற்றை பிறர் எழுதலே பெரும்பான்மையும் வழக்கம். இத்தகைய வரலாறு ஆங்கிலத்தில் Biography எனப்படும். தன் சரித்திரத்தைத் தானே வகுத்தெழுதல் சிறுபான்மையாகக் காணலாகும். இதனைச் சுயசரிதம் என்பர். இவ்வினத்தை ஆங்கிலத்தில் Auto-Biography என்பர். முத்துக் குமார சுவாமிகள் பேனு, பணம் முதலியன தீண்டாத விரத சீலராதலால் ஷெ சுவாமிகள் வரலாற்றைச் சுவாமிகள் தமது திருக்கரத்தால் எழுதாவிடினும் சுவாமிகளே தமது வாக்கினுல் சொல்லச்சொல்ல அன்பர்களால் எழுதப்பட்டதாகும் இவ்வரலாறு. தானே சொல்வதற்கும் தானே வரைவதற்கும் வேற்றுமை அநேகமாக இராது; ஒற்றுமையே மிக்கிருக்கும்; எனவே. சுவாமிகள் வரலாறு சுயசரிதை என்னும் Auto-Biography எனத் தகும்.

1. பேர் முதலிய விபரம்: முத்துக் குமாரு என்பது சுவாமிகளது தீட்சா நாமம். இவரது பிள்ளைத்திருநாமம் முத்தையா என்பதாகும்.

2. சுவாமிகள் வரலாற்றுக்குச் சுவாமிகள் பிறப்பு வளர்ப்பு, ஊர், மரபு முதலியவை உலகியலுக்கு கொள்ளத்தக்கதாயினும், அவை சுவாமிகளது அருளியலுக்குத் தள்ளத்தக்கன.

**3. பேர் முன் அடைமொழிகள்:– சுவாமிகளை, பிர்ம்ம மோன நிர்வாண முத்துக் குமார சுவாமிகள் என்பர். இனி பிர்ம்ம, மோன, நிர்வாண என்னும் மூன்று அடைமொழி களைக் குறித்துச் சில அநுபூதி எடுத்துக்காட்டு விளக் கம் பகரப்படுகின்றது.**

1. பிர்ம்ம என்னும் அடையினுல் சுவாமிகள் பிர்ம்மா நுபூதிநிலை துலங்குகின்றது. "சும்மா இருசொல் லற வென்றலுமே, அம்மா பொருளொன் றுமறிந் திலனே" என்ற கந்தரநுபூதியினுலும்; "தாக்கு மனேலையந் தானே தருமெனைத் தன்வசத்தே, ஆக்கு மறுமுக வாசொல்லொ ணுதிந்த வானந்தமே" என்ற **கந்தரலங்காரத்தினுலும்;** "நீவேறெ ஞதிருக்க நான்வே றெனுதிருக்க நேரான ஞானமுத்தி-தரவேணும்" என்ற **திருப்புகழ் அடியாலும்** சுவாமிகளது பிர்ம்மாநுபூதி நிலையின் அருமையை அறி யலாம்.

2. மோன என்னும் அடையினுல் சுவாமிகள் மோன நிலை விளங்குகின்றது. "மவுனிக ளேகாந்தசு கந்தரு" என்ற தேவேந்திர சங்க வகுப்பின் வழியும், "இனிதினிது ஏகாந்த மினிது" என்ற **ஔவையார் திருவாக்கின் வழியும்,** "உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ வுள படியை யுணருமவ-ரநுபூதி யானதுவும்" என்ற **சீர்பாத** வகுப்பின் வழியும், "மோன மென்பது ஞான வரம்பு" என்ற **ஔவைப் பிராட்டியார் திருவாக்கின் வழியும்** சுவாமி களது மனமிறந்த மோன நிலையின் பெருமையைத் தெரி யலாம்.

3. **நிர்வாண** என்ற அடையினுல் சுவாமிகளது உடற் பற்றற்ற நிலை துலங்குகின்றது. "பார்க்கு மிடத்துப் பரமாயிருக்கு மதீதத்திலே" என்ற கந்தரலங்காரத்தின் படியும்; "ஆனைக்காவ லரனே பரனேயண்ணு மலையானே" என்ற **தேவாரத் திருமொழியின்படியும்** சுவாமிகளது அதீத அநுபூதி நிலையின் அருமை பெருமைகளைத் தெளியலாம்.

அன்றியும், நிர்வாண என்ற அடை சுவாமிகளது சரீரப் பற்றற்ற தன்மையோடு, கோவணமுங்கூடக் கொள்ளாத வாழ்க்கையினுல் சுவாமிகளது அவதூத நிலையின் காட்சி மாட்சிகளையும் பழுத்த அறிவு படைத்த சான்ரேர்க்கும் உள்ளங்கை நெல்லிக்கனி போல எடுத்துக் காட்டா நிற்கின்றது. சுவாமிகளின் இவ்வவதூத நிலை முற்றத் துறந்த பெரியோர்களும் போற்றுந் தகுதியினதாகும் என்பதற்கு யாதும் ஐயுறவில்லையே. மற்றும், இப்பெற்றி, மெய்யன்பர்களுக்கு வற்ருத இன்ப ஊற்ருகப் பெருகிப் பொங்கி வழிந்தோடுவதாகும்.

இவ்வரும்பெரும் பேற்றினுக்கு முக்கிய காரணங்கள் சுவாமிகளால் யவ்வனப் பருவந் தொட்டே கடைப்பிடித்து வரப்பட்ட மாதவத் துறுதிப்பாடும், தூய பிரமசரிய விரதமும், சாதுசங்கப் பயிற்சியும், பத்திவைராக்கிய ஞானமும், ஞானசாரியரது அருட்பெருங் கொடைத் திறமும், கரபாத்திரப் பிக்ஷைக்கடைப்பிடிப்பும், சர்வ சங்கப் பரித்தியாகமும், அளவு கடந்த குரு பக்தியும் ஆகும்.

4. சுவாமிகள் இட்ட கட்டளைப்படியே இவ்வரலாற்றுக்கு முகவுரை எழுதலாயினேன். கொங்கு நாட்டிற் சிறந்த மேலைச் சிதம்பரமென்னும் திருப்பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் திருமடாலயத்தின் கண்ணே சுவாமிகளை முதன் முதலாகக்கண்டு பழகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. 35ஆண்டுகட்குமுன் சுவாமிகள் சாந்தலிங்க சுவாமிகளின் பூசைப் பணிவிடையைத் திறம்பட நடத்தி வந்தனர். இடைவேளைகளில் சாத்திரப் பயிற்சியிலும் மனேலய சாதனத்திலும் அழுத்தம் திருத்தமான ஈடுபாடுடையவராக விளங்கிவந்தனர்.

5. கல்விப் பயிற்சி: சுவாமிகள் "இளமையிற் கல்" என்ற மூதாட்டியார் திருவாக்கின்படி கிராமப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயரிடத்தில் ஊர் வழக்கப்படி எழுத்தாணிப்பால் பெற்றுண்டு கல்வி பயின்றனர். தமிழ்,ஆரியம், கிரந்தம், மலையாளம் என்னும் பெருமொழிக்கல்விகளை

யும் பயின்றறிந்தனர். அப்பருவத்திலேயே, "எழுத்தறிவித் தவன் இறைவனுகும்" என வித்யா குருவின் திருவடி களில் விழுந்து வணங்கி அவரது ஆசிபெற்றுத் துற வறம் முயன்ருர். பள்ளிப்பருவத்திலேயே, சுவாமிகளுக்கு வயது வளர வளர கல்வியும், அறிவும், ஒழுக்கமும், உல கியலில் வெறுப்பும், அருளியலில் விருப்பும் உடன் வளர் வன வாயின. ஆயினும் சுவாமிகள் தமது தந்தையார் ஈமக்கிரியை முடித்து முற் பிறப்பின் முதிர்ந்த துறவு வாசனையினுல் தாயாரையும் சம்ஸ்கிருத குருவையும் வணங்கி ஆசி பெற்றுப் பிரமசரிய விரதமும் துறவாசிர மமும் மேற்கொண்டு, பல தல்யாத்திரை செய்தனர்; மடாச் சிரமங்கள் பெற்ற பெரியோர்களைக் கண்டு தெரி சித்து அவர்களின் தண்ணிய ஆசிமொழிகள் பெற்று மகிழ்ந்தனர்.

6. தல யாத்திரை: சுவாமிகள் இமய மலை முதல் இராமேஸ்வரம் வரையுள்ள பற்பல தல யாத்திரை புரிந் துளார். மூர்த்தி தலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கி யுள்ளார். சைவ, வைஷ்ணவ, சாக்தேய, காணுபத்திய, கௌமார, சௌர மூர்த்திகளையும், பேர் பெற்ற சைவ வைஷ்ணவ மடங்களிலுள்ள மடாதிபதிகளையும், ஆங் காங்கு மிளிர்ந்த ஒரு சில சுவாநுபூதிமான்களையும், மெய்யடியார்களையும் கண்டு வணங்கி அவ்வவர்களின் தண்ணிய ஆசி மொழிகளையும் பெற்ற நல் வினையா ளராவர்.

7. சாத்திரப் பயிற்சி: சிவப் பிரகாசக் கட்டளை கொத்து முதல், சாந்தலிங்கர் அருளிய கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத வுந்தி யார், குமாரதேவர் சாஸ்திரம் 17, கைவல்ய நவநீதம், ஞான வாசிட்டம், கீதைத் திரயம், ஒழிவிலொடுக்கம் வரையுள்ள பற்பல நூல்களையும் முறையாக பாடங் கேட்டுத் தெளிந்த சிந்தையராவர். சாத்திர நூல்களே யன்றிப் புராண இதிகாசங்களையும் பயின்றுளார். அவற் றுள் திருவிளையாடற் புராணம், பெரிய புராணம்,

புலவர் புராணம், பாகவதம், பாரதம், இராமாயணம், பக்த விஜயம் முதலியவை குறிப்பிடத்தக்கன. அல்லாமலும், இவர், வெறுங் கல்விப் பயிற்சி, சாத்திரப்பயிற்சி மட்டிலும் நின்றுவிடவில்லை; மனோலய சாதனத்தினால் பல மணி நேரம் மெய்ம்மறந்த பிர்ம நிஷ்டை சாதித்துயர்ந்த சான்றாண்மைப் பெருவாழ் வினரும் ஆவர்.

8. **ஞானோபதேசம் பெறல்:** இங்ஙனம் தீவிரதர பக்குவம் வாய்ந்த சுவாமிகளுக்குப்பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடாலயத்திலே திருநெல்வேலி ஜில்லா, வல்ல நாடு சிவமடம் **சிவராமலிங்க சுவாமிகள்** பஞ்சாக்ஷர மந்திரோபதேசமும், ஞான தீக்ஷையும் செய்து ஆட்கொண்டருளினர்; முத்துக் குமாரு என்ற தீட்சா நாமமும் வழங்கியருளினர். காலக்கிரமத்தில் சுவாமிகளுக்கு உருவேறத் திருவேறி வந்தது.

9. **ஞானக்கண்ணும் அற்புதங்களும்:** சுவாமிகள் மனோலய சாதனத்திலிருந்து சாத்திய நிலை எய்தலாயினர். அதனால் ஞானக்கண் என்னும் அகக்கண் பெற்று விளங்கினர். அப்பேற்றினால் "அகவிளக்கத்தில் அருவ தெரிசனமும் புறவிளக்கத்தில் உருவ தெரிசனமும் சிரேஷ்டமாதலின், இரண்டு தெரிசனமும் பெற்ற ஒருவனே உத்தமோத்தமமான தவசி யெனப் பேர் பெற்றுச் சித்தி முத்தி யென்னும் இரண்டிற்கும் உரியனுவான்" என்ற வண்ணச் சரப மகான் முருகதாஸ் என்னும் தண்டபாணி சுவாமிகள் அருளிய **சத்திய வாசகத்திற்கு** நமது முத்துக் குமார சுவாமிகள், **வாச்சியராகப் பொலிவுற்றனர்.** மேலும், சுவாமிகள் சகச நிட்டை பெற்றதனால் நடைசமாதியினர் ஆயினர். அவ்வாற்றால் "விழித்த கண் ஞானியாய்த் திரிவாராயினர்.

இப்பெற்றியினரான சுவாமிகள், எதிர்கால நிகழ்ச்சிகளை முன்னறிவித்தலும், வாக்குப் பலித சித்தியும், இருக்குமிடத்தில் இருந்து கொண்டே வேற்றூர்களிலுள்ள மெய்யடியவர்கட்குக் காட்சி வழங்கல், தீராப் பிணி தீர்த்

தல், உயிர்ப் பிச்சை வழங்கல் முதலிய பற்பல அற்புதங் களும் நிகழ்த்தி வந்தனர். சில எடுத்துக் காட்டுகள் வருமாறு:—

1. ஒரு நாள் வேதாரண்யத்தில் சுவாமிகள் யோக நிலையில் இருந்த போழ்து குரு சிவராமலிங்கர் சென்னை ஆனந்தாஸ்சிரமத்தில் சமாதியடைவதாகக் கண்டனர். நிட்டையிற் கண்டபடியே விரைவில் நிகழக் கண்டனர். 2. பின்னொரு நாள் சுவாமிகளின் அடியவர் ஒருவர் வேற்றூரில் ஒரு கோயில் மண்டபத்தின் மீதிலே கரண்ட் என்னும் மின்சாரப் பிடிப்புண்டனர். அக்கணத்திலே அவ்வன்பர் சுவாமிகளுக்கு அபயம் என முழக்கினர். முழக்கலும் தொலைவிலுள்ள விபத்து நிகழ்ந்த இடத்திலே தோன்றி, சுவாமிகள் அஞ்சலளித்துத் தமது தொண்டரை நொடிப் பொழுதில் பாதுகாத்தருளி மறைந்தனர். 3. வேறொரு நாள் அன்பரொருவர், சாமான் வண்டிச் சக்கரத்தில் சிக்குந் தறுவாயில், முத்துக் குமார சுவாமிகளுக்கு அபயம் என்றனர். உடனே சுவாமிகள் அவ்விடத்திற் சென்று வண்டியிழுத்துச் சென்ற மாட்டைப் பிடித்து நிறுத்தி அவ்வன்பரைக் காத்தருளினர். 4. பின்னும் சுவாமிகள் மதுமாமிச பட்சணம், கொலை, களவு, குடி முதலிய நெறியல்லா நெறிகளினின்று அனேகம் பேர்களை அருள் நெறிக்குத் திருப்புதல், புராண இதிகாசப் பிரசங்கம் செய்தல்-செய்வித்தல், பக்குவர்க்கு மந்திரோபதேசம், ஞானோபதேசம் பண்ணுதல் முதலிய நன்மைகளைச் செய்து வருங் காலத்தில், ஒரு பக்தர் யாத்திரை முடித்து வந்து சுவாமிகளின் திருவடிகளில் வணங்கி எழுந்து நின்று சுவாமிகள் காசித் திருத்தலத்தில் கங்கை நறுநீராடித் திருநீறணிந்து கொண்டு கரையேறக் கண்டு சுவாமிகளைக் கும்பிட்டு மகிழ்ந்ததாகச் சொல்லி அதிசயித்தனர். அதற்குச் சுவாமிகள் உபாசனை மூர்த்தியின் செயல் என்றனர். 5. அன்றியும், ஒரு குருக்களுக்குப் பட்சவாத நோயுற்றுச் சூரசம்காரத் திருவிழா நடத்த இயலாதிருக்கையில் முருகப் பெருமான் அக்குருக்கள் கனவிலே எழுந்தருளி வந்து "என தன்பன்

முத்துக் குமார சுவாமிகளிடம் திருநீறு பெற்றணிக; பிணியகலும்'' எனச் சொல்லி மறைந்தனர். அவ்வண் ணமே குருக்கள் சுவாமிகளிடம் வணக்க பூர்வமாகத் திருவெண்ணீறு பெற்றுப் பூசிக் கொண்டனர். அக் கணத்திலே குருக்கள் நோய் நீங்கித் திரு விழாவை இனிது நடத்தி இன்புற்றனர். இந் நிகழ்ச்சியைக் கண் டோர் யாவரும் வியப்புற்றுச் சுவாமிகளிடம் மிக்க பய பக்தி பூண்டு பொலிந்தனர்.

இவ்வாறு சுவாமிகள் இயற்றிய அற்புதங்கள் பற்பலவாகும்:- அவற்றின் விரிவை வாசகர்கள் இவ்வரலாற்றினுள்ளே பயின்றறிக. விரிவஞ்சி ஒரு சிலவற்றை மட்டும் ஈண்டு சுட்டிக் காட்டலாயிற்று. இங்ஙனம் சுவாமிகள் நிகழ்ச்சி பற்பல அற்புதங்களைக் கண்ணுரக் கண்ட அன்பர் பலர் சுவாமிகள் மாட்டு முன்னிலும் மிகமிகப் பயபக்தியுடன் நடந்து வரலாயினர். இவ்வாற்ருலும் குருவருள் நிரம்பப் பெற்றதான சுவாமிகளைக் குருவுக்கு மிஞ்சிய சிஷ்யன் என்று கூறுவர்.

முற்கூறியபடி சுவாமிகள் நிகழ்த்திய பலவிதத் தெய் வீகச் செயல்களால் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நிலைகளில் தமது மெய்யடியார்களை நின்றுய்யும் படி செய்தும், சில அன்பர்களுக்குப் பெரும் பொருட் செல்வம் வாய்க்கும்படி செய்தும், தான தருமங்கள் செய்து நலம் பெறுமாறு சிலரை இயக்கியும், மூர்த்தி தலந்தீர்த்தங்களிலும், பக்திவைராக்கிய ஞானங்களிலும் பற்று வளரச் செய்தும், கண்ணுற் கண்டு வாயாற் பேசி யும், மனத்தால் நினைந்தும், வெண்டிருநீறு வழங்கியும் பலர்க்கும் பலவிதமாக அருள் வழங்கி வருகின்றனர். விளக்கம் இவ்வரலாற்றின் ஊடே ஆங்காங்கு கண்டு தெளிக.

10. முடிப்புரை:- சுவாமிகள் கல்வி கேள்விகளாகிய அபர ஞானத்திலும், மனேலய சித்தியாகிய பர ஞானத் திலும் வல்லவர். இளையான் அடக்கமே அடக்கம் என்ற

படி தக்க வாலிபத்திலேயே பிரமசரிய விரதம் பூண்டொழுகியவர். கரபாத்திரத்திற் பிக்ஷை யேற்றுண்ணும் நியமந் தவருதவர். மண் பெண் பொன் என்ற முப்பற்றும் அற்றவர். கீளொடு கோவணமும், காவியாடையும் முண்டிதத் தலையும், நெற்றியில் பூசிய திருநீறும் துறவின் துவக்கத்திற் கொண்டு பிறங்கியவர். பின் முற்றத் துறந்த நிலையில் சடை முடி, திருநீறு, யோக தண்டு, நிர்வாண நிலை, மௌன விரதம், கரபாத்திரப் பிக்ஷைக் கடைப் பிடிப்பு, இவற்றைக் கொண்ட பழுத்த அகத் துறவினராய் மிளிர்ந்தனர். நிட்டையிலே சாத்திய நிலை கைவரப் பெற்றதனுல் மனமடங்கக் கற்றவர்; சினமடங்க கற்றவர்; சித்தி யெல்லாம் பெற்றவர். இவரை ஞான சூரியன்; கருணை முழுமதி; மும்மலம் நீற்ற மோனக்கினி என்னலாம். "மும்மதமாப் போலு முழுஞான வீரனம்மா"! "நின்றநிலை சோரா நிசத்துறவோர் சேகரனும்" என்ற புலவர் புராண இலக்கணத்திற்கு இலக்கியராகத் திகழ்பவர் முத்துக் குமார சுவாமிகள் என்பதன் உண்மை. என் போன்று சுவாமிகளிடம் நெருங்கிப் பழகினவர்களுக்கும், சுவாமிகளின் கனிந்த தொண்டர்களுக்கும், சுவாமிகள் வரலாற்றை ஊன்றிப் படிப்பவர்களுக்கும் எளிதிலே விளங்கும் என்பது திண்ணம்.

11. **நூற்பயன்:** முத்துக் குமார சுவாமிகள் வரலாற்றை உள்ளன்புடன் படிப்பவர் அறவோர்க்களித்தல் துறவோர்க்கெதிரல், விருந்தோம்பல், குருபக்தி, தெய்வ பக்தி, அடியார் பக்தி, சரியை முன் நான்கிலும் பற்று, பக்தி முன் மூன்றிலும் கடைப் பிடிப்பு, இன்னோரன்ன நலங்கள் கைவரப் பெறுவர். சுருங்கச் சொல்லின் இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப் பெரும் பேறும் வாய்க்கப் பெற்று நீடு வாழ்வர் என்பது உறுதி.

நலங்கள் யாவும் எய்துக! வாழ்க!! வாழ்க!!!

விளாங்குறிச்சி போஸ்ட்,
(வயா) கணபதி
கோயமுத்தூர் தாலுக்கா,
2—4—1958.

இங்ஙனம்,
அன்புக்குரிய
**வி. நா. மருதாசலம்,**
நூலாசிரியர்.

# சாற்றுக் கவிகள்.

---

**சிதம்பரம்**
**ஸ்ரீ மௌன சுவாமிகள் மடத்தின் தலைவர், பிரமச்சாரி**
**ஸ்ரீலஸ்ரீ சபாபதி சுவாமி அவர்கள் இயற்றியது.**

**வெண்பா.**

மோன நிருவாண முத்துக் குமார முனி
ஞானக் குருபரனை நாடியதும் – ஊனமின்றி
வாழ்ந்ததுவு மாஞ்சரிதம் வாய்மொழியாற் கேட்டச்சிட்
டீந்தனர் நல்லன்பரினிது.

---

உ
சிவமயம்.
ஸ்ரீமந் நடராஜமூர்த்தி துணை.

**சிதம்பரம்**
**ஸரஸகவிராஜ, கவிமார்த்தாண்ட**
**பிர்மஸ்ரீ N. S. சிதம்பரேச்வர தீக்ஷிதர் எழுதியளித்த சிறப்புரை.**

திருவுங் கல்வியும் நிறைந்த இந்தியப் பெருமக்களே! பிரும்ம மோன நிர்வாண முத்துக் குமார சுவாமிகள் அவர்களின் சுயசரிதையாகிய இந்நூலைச்சிஷ்யர்களுடன் ஸ்வாமிகளே எனது சிதம்பரம், கீழ வீதி நெ. 49 இல்லத்திற்கு வந்து காட்டப்படித்து மகிழ்ந்தேன். அன்பு நிறைந்த அவர்களின் அபிப்ராயப்படி ஆங்காங்கு சில அக்ஷரப் பிழை திருத்தமும் செய்தளித்து, இச்சிறப்புரையையும் ஸ்ரீமதானந்த நடராஜப் பெருமானின் அருளும் நிறைந்த எனது ஆசியும் கலந்து அளிக்கிறேன். நிரம்பக் கல்வி கற்றும் மகான்களிடம் மந்திர உபதேசங்களும் பெற்ற இந்த ஸ்வாமிகள் பிறந்தது முதல் இணையற்ற பரிசுத்த பிரம்மச்சரிய விருதமும் பணத்தையோ,

பேறு முதலிய பொருள்களேயோ தீண்டாது இறைவன் திருவடி மலரிணையையே சதா தியானித்து யோகநிஷ்டை யிலிருந்தும் அதி அற்புதங்களை அனைவரும் ஆச்சர்யப் படும்படி நிகழ்த்தியும் இருக்கிறார் என்பதும் இந்நூலை வாசிப்பவர்களுக்கு நன்கு விளங்கும்.

சமயாசாரியார்களாகிய திருஞான ஸம்பந்தர் முதலானவர்களைப் போல, சிதம்பரநாதரிடம் அனவரதமும் பக்தியும், தில்லை வாழந்தணர்தம்அடியார்க்கும் அடியேன் என்று சிறப்பாகத்திருவாரூர் ஸ்ரீதியாகராஜப்பெருமானே திரு. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுக்கு திருத்தொண்டர் தொகை பாடுவதற்கு அடியெடுத்துக் கொடுக்கும் அளவு கடந்த பெருமையுடைய தில்லை வாழந்தணர்களாகிய தில்லை தீக்ஷிதர்களிடம் மிகவும் அன்பும், மரியாதையும் பணிவும் உடைய இவர்கள், முன் தில்லைத் தீக்ஷிதர் வீடுகள் தோறும் அந்தத்தீக்ஷித தம்பதிகளை ஸ்ரீமத் சிவகாமஸுந்தரீ ஸமேத ஸ்ரீ நடராஜப்பெருமானாகவே தரிசனம் செய்து ஆனந்தம் கொண்ட சைவ சமயாச்சாரியரின் புனரவதாரமாகவே இவர்களைக் கூறுவது மிகையாகாது.

இந்த நூலைப் படிப்பவர்களுக்கு அவர்களை அறியாமலேயே இந்தக்காலத்திற்கு எல்லோருக்கும் விசேஷமாக எதிர்கால சுகவாழ்வை விரும்பும் மாணவி மாணவர்களுக்கும் ஆசிரியர்களிடம் அன்பு வணக்கம் ஆதரவு விஸ்வாசங்களும் பெற்றோர் பால் பேரன்புப் பெருக்கும் தாம் எதிர்காலத்தில் என்னாளும் இன்பமடைய வேண்டி நமக்கு இன்னல் விளைவிப்பவர்களிடத்திலும் இணையற்ற பொறுமையும் சிவனடியார் முதலான எல்லாதேவதா பக்தர்களிடத்தும் நல்லெண்ணமும் தர்ம குணமும் உண்டாகும் என்பதும் இப்பேற்றால் வாழ்க்கையில் ஸகல க்ஷேமங்களும் பெருகுமென்பதும் திண்ணம்.

இக்காலத்தில் சிலர் தனது வரலாறு எழுதுவது போல பொய்யை-மெய்யாகவோ, மெய்யை-பொய்யாவோ

விளம்பரமாகவோ, பிற நிந்தையாகவோ ஒன்றும் எழுதாமல் உள்ளது உள்ளபடியே ஒழுங்காக எழுதப்பெற்ற இந்த நூல் சீக்கிரமே இனிது அச்சாகவும் அனுக்ரஹம் செய்தும், இதற்கு நன்கொடையளித்து ஆதரவு தந்து ஒத்துழைப்போர் அனைவருக்கும் ஸகல நலங்களும் பெருகவும். முற்காலத்துச் சிரஞ்ஜீவிகள் பலர் இன்றும் இருப்பதாகப் பல நூல்கள் பகருவது போல், இக்காலத்திலும் இந்தியாவில் அதுவும் சிதம்பரத்தில் ஒரு சிறந்த சாந்த சிரஞ்ஜீவி இருக்கிறார் என்று உலகத்திற்கு எடுத்துக்காட்டாகவும் எல்லா கண்டத்தினரும் இந்தியாவை வியந்து பேசும்படி இந்த ப்ரம்ம மோன ஞான நிர்வாண முத்துக் குமார ஸ்வாமிகள் என்னும் ஸத்ஜனங்களுக்குத் தனது ஸித்திகளால் ஸமயோசித உகந்த உதவிகள் அளித்துக்கொண்டு அரோகதிடகாத்ர சிரஞ்ஜீவியாய் என்றும் உலகில் வாழ்ந்து வர அருள்புரியுமாறும் ஆண்டவனை ப்ரார்த்தித்தும், எமது குலாசாரப்படி ஆசீர்வதித்தும் இச் சிறப்புரையை மனமுவந்தளிக்கிறேன்.

இப்படிக்கு,

**நீ. செ. சிதம்பரேச்வர தீக்ஷிதர்.**

---

உ

சிவமயம்.

**"அடியார் போற்ற அருள் வான் சிவநெறியே"**

திருநெல்வேலி ஜில்லா வல்லநாடு ப்ரம்ம சிவராம லிங்கப் பரமஹம்சர் சிஷ்ய சுவாமிகளை அடியார் நல் பய பக்தி கொண்டு வாழும் சைவ வேளாளர் நிறைந்த குண மங்கலத்திற்கு வந்திருந்த போது 1924-ல் சந்தித்தேன். அடியேன் கோடை விடுமுறைக்கு அங்கு அம்மான் வீட்டிற்குச் சென்றிருந்தேன். அன்று பெற்றோர்கள் தவப் பயனால் சுவாமிகளுக்கு கரத்தில் சாம்பார் சாதம் போடும் வாய்ப்புப் பெற்றேன். சாதம் சூடாயிருந்ததால் வாயால்

ஊதி அன்னமிட முற்பட்டேன். சுவாமிகள் ஜாடையால் வாயால் ஊதக்கூடாது என்று சுட்டிக் காட்டிய சுகாதார விதியை என்றும் உணவு உட்கொள்ளப் போகும்போது நினைவுக்கு வருவதுண்டு. ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகளை மீண்டும் 1942ல் நிர்வாண நிலையில் விருத்தாசலத்தில் சந்தித்தேன். சுவாமிகள் அளவு கடந்த பொறுமையைக் கையாண்டு வந்ததைக் காண மிகவும் ஆச்சரியமாகவேயிருந்தது. இவ்வூரிலுள்ள சில பெரிய மனிதர்கள் சுவாமிகளுக்குச் சொல்லொணு உபத்ரவம் கொடுத்தும் சுவாமிகள் அவர்களை அன்போடு நடத்தியது ஒரு அசாதாரண செயலாகும். சுவாமிகளின் காக்ஷி ஜடா முடியுடன் தோற்றம் அளிக்கும் சிவபெருமானையே நினைவுறுத்தியது. அதுகாலை விருத்தாசலத்திற்கு விஜயம் செய்திருந்த கலெக்டரிடம் கூறி மணிமுத்தா நதிக்குக் கரைபோடும்படி செய்தது ஊருக்குப் பெரிதும் பயன் கொடுத்து வருகிறது. ரூபாய் இருபத்துமூவாயிரம் செலவு ஆயிற்று. இன்னும் சுருங்கக்கூறில் ஸ்ரீமத் சுவாமிகளின் அதீதப்ரம்மக்ஞான நிலையை ஸ்ரீ மெய்கண்ட சாஸ்திர ஞானக்கருத்தைத்தெளிந்தோரே உள்ளபடி எடுத்துக் கூறக்கூடுமே அன்றி பிறரால் கூறுதல் எளிதல்ல.

சிவனடியார்க்கு எளியேன்,

**கி. நாராயணசாமி**, B.A., B.L.,

வழக்கறிஞர்,

விருத்தாசலம்.

---

Swami A. S. SAHAJANANDA, M. L. A.,
The Founder Supervisor of Sri Nandanar Institutions,
Madathipathi of Sri Nandanar Mutt,
The General Secretary of Sri Nandanar Kalvi Kalagam,
Chidambaram,
The member of Annamalai University Senate,
Provincial Harijan Welfare Committee,
Hindu Religious Endowment Board, South & North Arcot,
The President of the Madras State Depressed Class League·

Nandanar Mutt,
Chidambaram, 3-5-1958.

ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் வரலாற்றைப் படிக்கக் கேட்டேன். சுவாமி அவர்களுடன் கடந்த இருபது ஆண்டுகளாக பழகி இருக்கிறேன். அந்த பேருக்கேற்றபடி ப்ரம்மம், * மற்ற சாஸ்திரங்களும் அடியார் பக்தி முதலியன நிறைந்து விளங்குகின்றனர். சுவாமிகளது வாழ்க்கைச் சரித்திரம் யாவும் முற்றிலும் உண்மை. ஸ்ரீலஸ்ரீ சுவாமிஜீ அவர்களின் வாழ்க்கைச் சரித்திரம் கூடிய விரைவில் அச்சிடப்பட்டு வெளியிடப் படும் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு,
*பிரமச்சாரி* அ. **சிவப்பிரகாச சகஜாநந்தம்,**
சிதம்பரம்.

---

அருண்மொழி அரசு,
**திருமுருக. கிருபானந்தவாரியார் அவர்கள் இயற்றியது.**
**வெண்பா.**

---

முத்துக் குமார முழுத்துறவி வரலாறு
வித்தகமா யின்று வெளிப்பட்ட – தித்தரையோர்
வாசித்து நல்ல வளம்பெறுக மாதவத்தால்
நேசித்து நிற்க நிலைத்து.

---

* பிள்ளாய் பிள்ளாய் பெயருடையீர்
ப்ரம்மம் என்னும் பெயருடையீர்.
—ஔவையார் வாக்கு.

துன்முகி வருஷம் ஐப்பசிமீ 30உ
15—11—56.

ஸ்ரீ ஆண்டபிள்ளையார் அப்பூதியடிகள் துணை - முருகா

நெரூர் சதாசிவப் ப்ரம்மேந்திர சுவாமிகள் பரம்பரை, ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் நள ஆண்டு, தைத்திங்கள் சுக்கிரவாரத்தன்று புறப்பட்டு, கோயம்புத்தூர் ஜில்லா, மேலைச்சிதம்பரம் என்னும் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடத்தில் ஸ்ரீ சிவராமலிங்க சுவாமிகள் அனுக்கிரஹத்தின் பேரில் துறவு பூண்டு, மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்க் கண்டு மூழ்கியும், திருவருள் நிரம்பப் பெற்று, காசி, ஹ்ருஷீகேசம் முதலிய தலங்களில் பன்னாள் தங்கியும் வழிபட்டும், மேலும் வடநாட்டிலுள்ள பல தலங்களையும் கண்டு, பெரியோர்களையும் மூர்த்திகளையும் தரிசித்தும், தென்னாட்டிலும் சிதம்பரம், சீரங்கம், சிராப்பள்ளி, பழனி, மதுரை, நெல்லை, திருச்செந்தூர், இராமேசுவரம், திருப்பரங்குன்றம், சீகாளத்தி, திருப்பதி, திருத்தணி, காஞ்சி, சீர்காழி, வைத்தீஸ்வரன்கோயில் தருமபுரம், ஆடுதுறை, திருவாரூர், தஞ்சை முதலிய பல தலங்களையும் கண்டு, மூர்த்திகளையும் தரிசித்தும், திருவிளையாடல், தேவாரம், திருவாசகம், திருப்புகழ் இன்னும் பல தமிழ் நூல்களையும் இலக்கணங்களையும் பெரியோர்களுடன் பயின்றும், நூல் வல்லோரிடம் பொருள் கேட்டும், வட மொழியிலும் நூல்கள் கற்றும், திருக்குடந்தைக்கு, தாரண ஆண்டு வந்து, சிலகாலம் தங்கிச்சென்று பின் சில ஆண்டுகள் செல்ல, நிர்வாண நிலையில் மகாமகக் கூட்டத்திற்குக் கும்பகோணம் அடைந்து, மகாதளம் பேட்டை, செட்டி நடுத் தெருவின், தென் கோடியிலுள்ள ஸ்ரீ கற்பக விநாயகர் ஆலயத்தில் தங்கினர்கள். தம் குருவான ஸ்ரீ சிவராமலிங்க சுவாமிகள் குருபூஜை நாள் வர அது செவ்வனே நடைபெற வேண்டுமே என சுவாமிகள் எண்ணுங்காலை, குறிப்பறிந்த மெய்யன்பர் பலரின் ஒத்துழைப்பால், குருபூஜை விழா, குடந்தை ஸ்ரீ நாகேசர்

பெருமான் சந்நிதியில் நடைபெற்றது. அன்பர்கள் பலர் உதவியதன் காரணமாக, ஸ்ரீ நாகேசப் பெருமானுக்கும் ஸ்ரீ பெரியநாயகி அம்மைக்கும், ஸ்ரீ நடராஜப் பெருமானுக்கும், மற்றுமுள்ள பரிவாரங்களுக்கும் அபிஷேகம், ஆராதனைகள், செய்விக்கப்பெற்று சுவாமிகளும் உடனிருந்து, மாலைவரை, மகேஸ்வர பூஜையும் நடத்தி, ஆலய வழி பாட்டைப்பற்றியும், ஸ்ரீ அப்பூதி அடிகள் பெருமையைப் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். ஔவை பாடிய நூலினையும் மக்களுக்கு விசேட உரைகள் கூறியும், பின்னும் அருள்வாக்கு வரகவி, வேங்கிடதாசர் அவர்களால் இயற்றப்பெற்ற ஸ்ரீ மகாபக்தவிஜயத்தை அன்பர்களிடம் கொடுத்துத் தானுமிருந்து அதைப் பக்தியுடனும் அன்புடனும் படிக்கச்செய்தும், பொருள் நயங்களைச் சொல்லியும், இல்லங்களில் சென்று கரபாத்திர பிக்ஷை யேற்று உண்டும், இல்லற தர்மங்களை உணர்த்தியும், கடமைகளை அவரவர்களை உணரச்செய்தும், ஜீவகாருண்யம், தானம், தவம், இவைகள் மக்களுக்கு இன்றியமையாதிருக்க வேண்டும் என்பதையும் இவற்றால் அழியாப்புகழ் பெற்று, உன்னத நிலையை அடையலாம் என்பதையும் கூறினார்கள். இத்தலத்தில் இருக்கும் சமயம் சுவாமிகளின் மாணவராய் சீகாளத்தியில் யோக விநாயகர், குகைக் கோயிலில் சாஸ்திர விதிப்படி, சமயத்தீக்ஷை பெற்று பஞ்சாக்ஷரமும் உபதேசிக்கப்பெற்ற சிவபழனிச்சுவாமி வடதிசை யாத்திரைபோய் பூமிப்பிரதட்சிணம் வந்து, விருத்தாசலத்தில் தாத்தா சுவாமி ஆலயத்தில் கணபதி லிங்கம், நந்தி, பலிபீடம் முதலானவை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் முடித்தும் விருத்தாசலம் ஆழத்துப் பிள்ளையாருக்கு லக்ஷார்ச்சனை செய்தும் சிவராமலிங்க சுவாமிகள் குருபூஜை நட்சத்திரத்தில் ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமாரசுவாமி முன்னிலையில் ஸ்ரீகும்பேசர், காசி விஸ்வேசர், நாகேஸ்வரர், பாணபுரீஸ்வரர், முதலிய ஆலயங்களில் சந்நியாசிகளுடன் யானையின்மேல் திருமுறைகளையும், திருவாய்மொழி பக்தவிஜயம், கந்தபுராணம், திருப்புகழ் முதலிய நூல்

களை ஆரோகணிக்கச்செய்து மகாமகக்குளம், நகர்வலம் வந்து, பின்னர் மறுவருடங்களில், சுவாமிமலை திரு வலஞ்சுழி, தேவதச்சன் சிருஷ்டி வெள்ளைப்பிள்ளையார் கோயிலில் முன்சொல்லியது போலவே, கும்பகோணம் திருக்கூட்டத்தாருடன், அ. சு. கனகசபைசெட்டியார் ஈசான்ய சிவாச்சாரியார்,குமாரசாமிசெட்டியார் முதலியவர் களுடன் அபிஷேக ஆராதனைகள் வெகு சிறப்புடன் நடத்தி வந்திருக்கிறார்கள். விரிக்கிற் பெருகும்.

இங்ஙனம்,

கும்பகோணம், 15—11—56.

M. C. S. ரத்தினசபாபதி செட்டியார், B. A., மிருசுதார் & Merchant

---

உ
சிவமயம்

ஸ்ரீ சிவராமலிங்கப் பரமஹம்சர், அவர்களின் சிஷ்ய ராய, ப்ரம்ம, மோன, நிர்வாண, முத்துக்குமார சுவாமி கள் கும்பகோணத்தில் தங்கிவந்த காலங்களில் அவர் களால் நடத்தப்பட்ட கைங்கர்யங்கள்.

சுவாமிகள் அவர்கள், முதல் முதலாகக் கும்பகோ ணத்திற்கு 1921ல் மகாமகத்துக்கு வந்திருந்தார்கள். பிறகு, அடிக்கடி வந்துபோகின்றார்கள். அவர்கள், தன் னுடைய குரு சிவராமலிங்கபரமஹம்சரின் திருநக்ஷத்ர தினத்தில் எந்தெந்த இடத்தில் தங்கியிருக்கின்றார்களோ அந்த அந்த இடத்தில் உள்ள யாதாமொரு ஸ்தலத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்து அடியார்களுக்கு அமுது அளிக்கும் வழக்கத்தை ஒட்டி, கும்பகோணத்தில் ஸ்ரீ நாகேஸ்வரர் கோயில், ஸ்ரீ காசி விஸ்வநாதர் கோயில், ஸ்ரீ பாணபுரீஸ்வரர் கோயில், ஸ்ரீ ராமசுவாமி கோயில், இவைகளில் மேற்கண்ட குருபூஜையை விசேஷமாக நடத்தியிருக்கிறார்கள். கும்பகோணத்துக்கு வந்திருக்கும் காலங்களில் பெரும்பாலும் செட்டி நடுத்தெருவிலுள்ள ஸ்ரீ கற்பகவிநாயகர் கோயிலில் தங்குவார்கள். அங்கே பல

பிரமுகர்களும் அடியார்களும் ப்ரமச்சாரி தத்துவத்தி லுள்ள சுவாமிகளைத் தெரிசித்து ப்ரசாதமும் அநுக்ரஹ மும் பெற்றுச் செல்வார்கள். அவர்கள் உச்சி வேளை யில் கரபிக்ஷை வாங்கி அமுதுண்ணுவார்கள். மேற் கண்ட குருபூசை முதலிய கைங்கர்யங்களைப் பற்றிச் சுவாமிகள் அவர்கள், வெளியூர்களிலும், உள்ளூரிலு முள்ள தன்னுடைய அடியார்கட்கும் தெரிவிப்பார்கள். அதை அறிந்து கைங்கர்யம் நடப்பதற்கு வேண்டிய தொகைகளோ பண்டங்களோ அனுப்பிவைப்பார்கள். அவைகளைக்கொண்டு குருபூசை விழாவை உள்ளூரி லுள்ள தொண்டர்களின் உதவியால் நடத்தியபின், தொகைகளோ பண்டங்களோ மீதிப்பட்டால் அவைக ளைக் கொண்டு வேறு ஒரு கைங்கரியம் நடத்திவைப்பார் கள். ஸ்ரீ ஆதிகும்பேசுவரர் கோயிலில் விநாயகருக்கு லெக்ஷார்ச்சனை நடத்திவைத்தது அவ்வாறுதான் சுவாமி கள் பணத்தையோ பண்டங்களையோ தன் கையால் தொடுகிற வழக்கமில்லை. சுவாமிகளுக்கு பற்கள் கரைந்து போய்விட்டதை முன்னிட்டு இரண்டு தடவைகளில் அடி யார்களிடமிருந்து தொகைகள் ரூ. 350 வரையில் M. O. மூலமாகவும், நேராகவும் சேர்ப்பிக்கப்பட்ட தொகைகளில், தொழிலாளர்கள் கேட்ட தொகைகளுக்கு மேலாகவே கொடுத்து சீர் செய்து கொண்ட செலவுகள் போக மீதி யிருந்த தொகைகளில் வல்லநாடு சிவகுமாரானந்த சுவா மிகள் மூலஸ்தானம் அறிவானந்த லிங்கத்துக்கு கும்பா பிஷேகம் நடந்த செலவுகளுக்கு ரூ. 50ம், ரூ. 15க்கு பக்த விஜயம் என்ற புஸ்தகங்களை வாங்கி தேவங்குடி, வீரமாங்குடி முதலிய இடங்களிலுள்ள பக்தர்களுக்கு உப கரித்திருக்கிறார்கள். சுவாமிகளிடம் உபதேச அனுக்கிர கம் பெற்றவர்கள் இகலோக சாதகங்கள் பெற்றுள்ளார் கள். எடுத்துக் காட்டாக மூன்று மனைவிகள் கொண்டும் மகப்பேறு பெருமல் குறையுற்றிருந்த அண்ணல் அக்கிர காரம் பட்டாமணியம் திரு இரத்தினம் பிள்ளை, என் பவர் சுவாமிகள் உத்திரவுப்படி ஸ்ரீ காசிவிசுவநாதர் கோயிலில் சிவாச்சாரியார் மூலம் அபிஷேக ஆராதனை

யாகக்கிரியைகள் செய்வித்து சுவாமிகள் உபதேசம் அருளியதன் மூலமாக ஒரு ஆண் மகவும் இரண்டு பெண் மக்களும் அடைந்து இன்புற்றூர்கள். சுவாமிகளை நிந்திப்பவர்களும் பரிகசிப்பவர்களும் மடமை காரணத்தால் செய்வதாகக்கொண்டு சுவாமிகள் அவர்களை மன்னிப்பார்களேயன்றி சினங்கொண்டு சீறுவதில்லை. இந்தப் பெருந்தன்மையையும் கருணையையும் பெருநோக்கையும் அறியாமல் தொடர்ந்து பிழை செய்தவர்களில் சிலர் துன்புற்று வருந்தியுமுள்ளார்கள். சுவாமிகள் வடமொழியிலும் தென்மொழியிலும் பயிற்சியுள்ளவர்கள். அடியார்கள் சுவாமிகளிடம் தங்களுடைய சந்தேகங்களை கூசாமல் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். பக்தவிஜயம் என்ற உயரிய நூலை வெளிப்படுத்தி அதை பல தொண்டர்கள் படித்து பலனடையும்படி செய்த பெருங்கருணை சுவாமிகளுடையதாகும்.

கும்பகோணம்,
20—2—1957. } (ஒப்பம்) D. சொக்கலிங்க செட்டியார் B.A.,B.L.,
அட்வகேட்.

---

உ
சிவமயம்

ஸ்ரீ ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகளின் வரலாற்றைப் படித்துப்பார்த்தேன். சுவாமிகள் அவர்களை சுமார் பத்து ஆண்டுகட்குமேல் தெரியும். உண்மையான சாது, பிரம்மச்சாரி, கைப்பிட்சை ஏற்று, மண்-பெண்- பொருளாசையின்றி இருக்கும் உண்மை உள்ளம் படைத்தவர். சுவாமிகள் சரித்திரம் அச்சியற்றி விரைவில் வெளிவரப் பலரும் உதவிபுரிய வேண்டியது மிகவும் அவசியம். இதற்குத் திருவருள் முன்னிற்பதாக.

இப்படிக்கு,
முத்த. வெ. சொக்கலிங்க செட்டியார்,
ரைஸ்மில், கும்பகோணம்.

பா. ஏகநாததேசிகர் சுவாமிமலை
ஸ்ரீ சுவாமிநாதஸ்வாமி தேவஸ்தான
தேவாரபாராயணம்

3—11—53ல் தேவன்குடியிலிருந்து ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் சுவாமிமலைக்கு வந்து சுவாமிநாதஸ்வாமியை தரிசனம் செய்து கொண்டு, பிரகாரம் வரும்பொழுது சண்முகப்பெருமான் சந்நிதிக்கு நேரே, ச. பாலசுப்பிரமணிய தேசிகர் முதலாயினோர் தேவார பாராயணம் செய்துகொண்டிருந்த இடத்தில் சுவாமிகள் வந்து அமர்ந்து தேவன்குடி தேவாரப் பண்ணைப் பாடும்படி வாக்குக் கொடுத்தது. தேவார கோஷ்டியார் அங்ஙனமே தேவாரப்பதிகம் பாடினர். சுவாமிகளும் மிகவும் நன்ருக இருக்கிறது என்று சொல்லி சந்தோஷத்துடன் தேவன்குடிக்குச் சென்ருர்கள். மறுநாளும் சுவாமிகள் கோயிலுக்கு வந்து தேவாரப் பண் கேட்க அமர்ந்தார்கள். அந்தப் பண்ணை சுவாமிகள் பாடும்படி சொல்ல, முதல் இரண்டு பாட்டுக்களும் கடைசிப் பாட்டும் ஆக மூன்று பாட்டும் பாடி முடித்தோம். பதிகம் முழுவதும் பாடுங்களென்றனர் சுவாமிகள். எங்களுக்கு மேற்சொன்ன பாட்டுகள்தான் பாராயணம் என்று தெரிவித்தோம். சுவாமிகள் அவர்களிடத்தில் நேற்றையதினம் பதிகம் முழுவதும் பாடி முடித்தீர்களே என்ருர்கள். அதற்கு பா. ஏகநாததேசிகர் முதலாயினோர், தங்களுடைய திருநோக்கத்தாலும் சண்முகப்பெருமானுடைய சந்நிதி விசேஷத்தாலும் எங்கள் நாவிலிருந்து பாடப்பெற்றது என்று சொல்லி முடித்தார்கள். இது மிகவும் முத்துக்குமாரு உபாசன மூர்த்தியின் தபோபலம் என்பது சொல்லாமலே விளங்கும்.

செருமரு தண்துவத் தேரமண் ணுதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் முரைகொளேல்
திருமரு வும்பொய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன வடிகள்வே டங்களே.

"நலமல்கு சிந்தையராகி நன்னெறி
யெய்துவர் தாமே"

சென்னிமலைவேலவர்க்குச் சேர்ந்தகொம்பு இரண்டுண்டு
கன்னிகுற வள்ளிக்குக் காலில்லை - அன்புடையீர்
ஆனைக்குக் கொம்பில்லை ஆட்டுக்குக் காலில்லைப்
பாட்டுக்குள் ளாராய்ந்து பார்.

சேடர்*தே வன்குடித் தேவர் தேவன்றனை
மாடமோங் கும்பொழில் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன
பாடல் பத்தும் வல்லார்க்கில்லையாம் பாவமே.

---

உ
சிவமயம்

ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகளின்
திருவிளையாடல்கள்

சுவாமிமலையில் குருபூஜைகள் செய்தும் பல அன்பர்கட்குப் பஞ்சாக்ஷர உபதேசமும், ஸ்ரீலஸ்ரீ சச்சிதாநந்த மடாலயத்தில் ஸ்ரீ வித்தக விநாயகக் கடவுள் பிரதிஷ்டை, இன்னும் விசேஷ உற்சவங்கள், விநாயகசதுர்த்தி விமரிசையாகப் பூசை செய்தும், பல க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை புரிந்தும் வந்துள்ளார்கள். கும்பகோணத்தில் மழவராயர் வண்டியில் ஏறி வருங்கால், சுவாமிகள், வெய்யில் நேரத்தில் நடந்துவரும்போது, ஸ்வாமிமலைக்குக் குதிரைவண்டியில் ஏறச் சொன்னதற்கு, வண்டியிலேறும் வழக்கமில்லையென்று கூறிச்சென்றூர்கள். குதிரைவண்டி வேகமாய் வந்து, சச்சிதாநந்த மடத்தில் மழவராயர் இறங்கும்போது சுவாமிமலையில் எதிரே தெரிசனம் கொடுத்தது மிகவும் உபாசனுமூர்த்தியின் அருள்.

சுவாமிகள் சுவாமிமலையிலிருந்து யாத்திரை போன பின்பு மடத்துக்கு அருகில் மழவராயர் இருக்கிறபடியால் சாம நேரத்தில் தீபம் தெரிகிறது; போய்ப் பார்த்தால் தீபம் இல்லை - இப்படி அநேகதரம் ஜோதி காண்பித்த துண்டு என்று மழவராயர் கூறினர். சுவாமிகள் ஷி

* தேவன்குடி திருவையார் சமீபம் உள்ளது.

மடத்துக்கொல்லையில் தென்னை மரங்களின் குத்தகை தாரரை இளநீர் கேட்க, முற்றின காயைப் போட்டு, மரத்தில் இளநீர் நிரம்ப இருக்க, இல்லையென்று சொன்னதும், அன்று முதல் மரம் காய்க்கவில்லை. ஷை குத்தகைதார் இனிமேல் மரம் காய்த்தால் சுவாமிக்கு உபயோகப் படுத்துவதாக மழவராயரிடம் சொன்னதன் பேரில், மிளகாயும், வேப்பந்தழையும் இடித்து வண்டு கடித்த மரத்தின் குருத்தில் ஊற்றிய பிறகு மரங்கள் நிரம்பக் காய்த்தன; ஸ்வாமிகளுக்கு உபயோகமாயிருந்தது. சிவசுப்ரமண்யபிள்ளை என்ற அடியேன் சுவாமிக்குப்பாத பூஜை செய்துகொண்டிருக்கும்போது விருந்துக்கு வந்த உத்தியோகஸ்தர் வந்தனம்செய்து விபூதிபெற, அன்னுருக்கு உத்தியோக உயர்வு கிடைத்தது. சுவாமிகளை நினைத்து அநேக பக்தர்கள் கனவில் தெரிசித்து, சுவாமிகளின் அருள் பெற்று மகிழ்ச்சியடைந்துள்ளார்கள். சுவாமிகளின் திருவிளையாடல்கள் இங்ஙனமாக விரிக்கிற் பெருகும்.

அன்பர்கள்
சிவசுப்ரமண்ய ஐயர்,
சிவசுப்ரமணிய பிள்ளை,
நடேச மழவராயர்.

திருமஞ்சனவீதி
ஸ்வாமிமலை.

---

உ
சிவமயம்

மோன நிர்வாண ஸ்ரீ முத்துக்குமார சுவாமிகளைத் தெரிசித்தோம். பழுத்த சிவமே ஓர் உருவெடுத்தது போன்று உள்ள திருமேனியைப்பார்ப்பவர்கள் எவர்க்கும் நடையுடை பக்தி பரவசமுமாய் நடக்கவேண்டுமென்ற எண்ணமும் உண்டாகிறது. சுவாமிகளது சரித்திரத்தை இரண்டு தினங்களாகப் படித்துப் பார்த்தோம். அதில் கண்ட திருவிளையாடல்கள் எங்களை மெய்மறக்கச் செய்கின்றன.

ஸ்வாமிகளின் பக்தர்கள்,
இராமசாமி ஐயர்,
S. தண்டபாணிக் குருக்கள்,
திருப்புறம்பயம்.

உ
சிவமயம்

ப்ரம்ம மோன நிர்வாண ஸ்ரீ முத்துக்குமார சுவாமிகளை வடலூரிலிருந்து வளையமாதேவி P. O. ரோட்டில் வரும்போது மகாதவசியென்றறிந்து ஸ்ரீ பாலசுப்ரமண்ய பிள்ளை, தர்மநல்லூருக்கு அழைத்து வந்து பக்தர்கள் யாவரும் கூடி பக்தி சிரத்தையுடன் பாதபூஜை கரபாத்ர பிக்ஷை செய்வித்தோம். அதன்பயனுகப் பதினெரு வருஷ காலமாகத் தருமநல்லூரில் புத்திரோற்பத்தி இல்லாத குறைவு நீங்கிப் புத்திரப்பேறுகள் தழைத்து ஊரார் சுகமாக வாழ்ந்து வருகின்ருேம். முத்துக்குமார சுவாமியை பக்தி சிரத்தையுடன் நினைக்கத் தெரிசனம்கொடுப்பார்கள்.

பக்தர்கள்,
பாலசுப்ரமண்யம்,
ராஜகோபால்,
தருமநல்லூர்.

---

உ
சிவமயம்

திருப்புன்கூர் P. O. கன்னியாகுடி கிராமத்தில் உள்ள சு. இராசுப்பிள்ளை, ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார சுவாமிகள் கரபாத்ர பிக்ஷை யெடுத்துண்ணும்போது கேட்க, அன்னத்தை வாங்கி என் மாமன் பேத்திப் பெண்கள் இரண்டு பேர்கட்கும் கொடுத்த காரணத்தால் அநேக வருஷங்களாக மகப்பேறு இல்லாமல் இருந்தவர்கட்கு கருத்தரித்து, ஆண், பெண் குழந்தைகளும் பிறந்து செளக்கியமாக வாழ்ந்து வருகிருேம். பெரியோரின் பிரசாதத்தின் மஹிமை விளங்கிற்று.

பக்தன்
இராசுப் பிள்ளை,
ரா. இராமசாமிப் பிள்ளை,
கன்னியாகுடி.

சில வருஷங்கட்கு முன் திருப்புன்கூர் வந்த முத்துக் குமார சுவாமிகளைத் தெரிசித்து சைக்கிளில் ஏறிக் கன்னியாகுடி என்ற கிராமத்துச் சிவன்கோயிலுக்கு நான் விரைவாகப் போனேன். கன்னியாகுடிக் கோயிலில் சைக்கிளைவிட்டு இறங்கும்போது சுவாமிகளை எதிரில் நிற்கக் கண்டேன்; ஆச்சரியப்பட்டேன்.

**ஞானியை நம்பினுல் நல்லது விளங்கும்.**

பக்தன்
பாலசுப்ரமண்ய சிவாச்சாரியார்,
திருப்புன்கூர்.

---

உ
சிவமயம்

விருத்தாசலமெனும், முத்தி க்ஷேத்திரத்தில் மிளிரும், ஸ்ரீ தாத்தாசுவாமிகளின் ஆலயத்தில், ஸ்ரீ முத்துக்குமார சுவாமி தங்கியிருக்கும்போது, 20 மைல் தூரமுள்ள வடலூரைச் சார்ந்த சித்திவளாகம் மேல்திசையிலுள்ள கோட்டகங் கிராமம் சிவராஜாங்கம் என்ற பெயருடைய நான் தீக்ஷைபெற்று, ஊர் வந்து, பூசித்துவரும் நாளில் ஒருநாள் (9--9--45ல்) மங்களவாரம் காலை சுமார் ஒன்பது மணிக்கு என் ஊர் குளத்தின் ஸ்நாந கட்டத்தில் கண்ட குருவுருவ அருட்காக்ஷி விவரம் :

விருத்தாசலம் சமாதிநிலயத்தில் சுவாமிகள் இரண்டு கொத்தன்மார்களைக்கொண்டுசீர்திருத்தஞ்செய்துகொண்டிருப்பதும், வலது தோளில் காவி வஸ்திரமும், இடது கரத்தில் பிரிந்து கிடந்த புதிய துடைப்பமும், வலது கரத்தில் அதைக் கட்டும் கயிறும் வைத்துக்கொண்டிருந்த அருட் காக்ஷியைக் கண்ணுற்றுப் பேரானந்தமடைந்தேன். மற்றும் பல காலங்களிலும் அநேகவகையில் திருவருட் காக்ஷிகள் பெற்றுப் பேரின்பம் எய்தினேன்.

சுவாமிகள், அடியார்கள் நினைத்தபொழுதெல்லாம் எதிரில் தோன்றி ஆசீர்வசனம் கூறுகிறார்கள். என்னே அவர்களது மகிமை!

பக்தன்
**சிவராஜாங்கப் படையாச்சி,**
**கோட்டகம்.**

---

உ
சற்குரு பாதம் துணை.

ஸ்ரீ-ல-ஸ்ரீ ப்ரம்ம மோன நிர்வாண முத்துக் குமார சுவாமிகளை எங்களுக்கு சுமார் 25 வருஷங்களாகத் தெரியும். அப்போது சுவாமிகள் மொட்டைத் தலையோடும், கோவணத்தோடும், தண்டு கமண்டலத்தோடும், தவத் திருமேனியோடும் எங்களுக்குத் தரிசனம்கொடுத்தார்கள். அப்படியே எங்கள் ஊர் வாசிகளும் நாங்களும் பஜனையோடு சுவாமிகளைத் திருவுரு எடுத்து அப்படத்தை வைத்து வீடுகள் தோறும் தினமும் பூஜித்து வருகிறோம். அப்போது சுவாமிகள் பிரசாரம் செய்து எங்களை, மாபாதகமாகிய சூதாட்டம் இவைகள் அறவே கூடாது என்று சத்தியம் வாங்கிக்கொண்டு ருத்திராக்ஷ தாரணம் செய்து பஞ்சாக்ஷர உபதேசம்செய்து சைவத்தை தழைக்க வைத்தார்கள். அது முதற்கொண்டு அவ்வழியே நாங்கள் நடந்துவருகிறோம். சுகமாயிருக்கிறோம். அதை விட்ட சிலர் நாஸ்தியாய்ப் போய்விட்டார்கள். எங்கள் ஊரில் து. கிருஷ்ணசாமி பிள்ளையும், அவர் மனைவியும் நிரம்பவும் பக்தி பண்ணிக் குழந்தைப்பேறு அடைந்து பூரண சௌக்கியத்தோடு இரண்டு ஆண், இரண்டு பெண் ஆக 4, குழந்தைகளோடு பெருவாழ்வு வாழ்ந்து வருகிறார்கள். பக்கத்தில் 2 மைல் தூரத்தில் வட ஆலத்தூர் பட்டாமணியக்காரர் வீட்டுத் தெருக் கொட்டகைப் பந்தலில் இருபது வருஷங்களுக்கு முன்பு இரவு சுமார் 8 மணிக்கு நூற்றுக் கணக்கான சைவர்கள் கூடிச் சுவாமிகளை ஜீவகாருண்ய நற்குணங்கள் போதிக்கும்படி வேண்டிக்கொள்ள சுவாமிகள் நற்குணங்களைச் சொல்லி

வரும்போது இடையில் சுவாமிகள் நீங்கள் சைவர்கள், உங்கள் சைவம் ஜீவகாருண்ய பக்தியானது, உங்கள் முன்பாக ஒரு சர்ப்பம் தோன்றினால் தெரியுமென்று திருவாக்கால் சொன்னவுடனே தோன்ற அங்கிருந்தவர்கள் பயந்து எழுந்து ஓடினார்கள். சர்ப்பத்தை அடிக்க சிலர் தடிதேடினார்கள். சுவாமிகள் ஊத்துக்காடு கோயிலில் போய்த் தங்கினார்கள். மறுநாள் காலையில் அடியார்கள் சுவாமிகளிடம் வந்து பயப்படும் படியாகச் சர்ப்பத்தைத் தோற்றுவித்ததேயல்லாமல் சர்ப்பத்தைக் காணவில்லையே என்று சொல்லிச் சுவாமிகளை வணங்கினார்கள்.

நான் சென்ற வருஷம் ஆனி மாதம் வெண்ணாற்றில் நீந்திச் செல்லுகையில் நடு ஆற்றில் கைசோர்ந்து இனி ஆற்றுக்குத்தான் இரை என்று நினைத்து மனங்கலங்கி குருநாதனை நினைத்தேன். உடனே மணல் திட்டு காலுக்குப் புலப்பட்டது. மேலும் எனது மனைவி இறந்து 15 வருஷங்கள் ஆகிறது. அது முதல் குருநாதன கிருபையினால்தான் பிரம்மசரியத்தை அனுட்டித்து வருகிறேன். பொதுவாகச் சிலர் சுவாமிகளை தூஷித்தார்கள். அவர்கள் துன்புறுவதைக் கண்ணாரக் கண்டிருக்கிறேன். மேலும் சுவாமிகளை முதன் முதலாகத் தரிசித்தபோதே சுமார் 25 வருஷங்களுக்கு முன்னிருந்தே சுவாமிகள் காசு பணங்களைத் தொட்டதில்லை. உள்ளபடியே பற்றற்ற மூர்த்தி. காளஹஸ்தியில் ஒரு குகை ஆச்ரமத்தில் வெகு நாள் தவம் செய்தும், விருத்தாசலத்தில் ஒரு குகை ஆச்ரமத்திலும், சுவாமிமலையில் ஸ்ரீ கனகசபை செட்டியாரால் கட்டிக் கொடுக்கப்பட்ட குகையிலும், கும்பகோணத்திலும், திருவிசயமங்கை, திருவைகாவூர், திருப்புறம்பயம் இந்த க்ஷேத்திரங்களில் வெகுநாள் தங்கி தவம் இயற்றியதையும் அடியேன் கண்டு தரிசித்திருக்கிறேன். சுவாமிகள் தேவாயலங்களில் தங்குவார். கையைத் தட்டி வீடுகள்தோறும் சென்று பிக்ஷை ஏற்பதை அந்த நாள் முதற்கொண்டு இந்த நாள் வரையில் பார்த்திருக்கிறேன். சென்ற கார்த்திகை-மீ சுந்தரப்பெருமாள் கோவிலுக்கு

சுவாமிகள் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு நானும் இன்னுமொரு அடியாரும் மறுநாள் காலையில் போக நிச்சயித்து இருந்தோம. நாங்கள் நினைத்திருந்த காலையில் சுவாமிகளே எங்கள் ஊருக்கு வந்து தரிசனம் அளித்தார்கள். அது எங்களுக்கு நிரம்பவும் வியப்பாயிருந்தது. சுந்தரப்பெருமாள் கோயிலில் சுமார் 4, 5 வருஷங்களுக்கு முன் நானும் இன்னுமொரு அடியாரும் சுவாமிகளைத் தரிசிக்கப் போனபோது சுவாமிகளும் எங்களைப்பற்றி வேறு ஒருவரோடு பேசிக்கொண்டிருந்தார்கள். அதுவும் எங்களுக்கு ஆச்சரியமாயிருந்தது. எங்கள் ஊரில் இருந்த சந்நியாசி ஒருவர் சுவாமிகளை 25 வருஷங்களுக்குமுன் முதல் தடவையாக சுவாமிகள் வந்தபோது, சுவாமிகளை நிரம்பவும் பக்தி பண்ணிக் காஷாயம் வாங்கிக்கொண்டு உபதேசம் பெற்றுச் சில சாஸ்திரங்களையும் கற்றுக்கொண்டு பல ஊர்களுக்குச் சுவாமிகளோடு போய், நல்ல பெயரைப்பெருக்கிக்கொண்டு உத்தம சந்நியாசி போல் பெரியோர் பெயரைச் சொல்லி (ரூ. 50,000) வரையில் சம்பாதித்துக்கொண்டு பிறகு சுவாமிகளை நிந்தித்து அவமதித்துவிட்டார். அதுமுதற்கொண்டு அவர் தேடிய பொருளுக்கு ஹானியும் சரீர சுகக்குறைவும் விருப்புக்கொண்டிருந்தஜனங்கள் வெறுப்புக்கொண்டும் வருகிறார்கள். எல்லாத் தாவர சொத்துக்களையும் விற்றுவிடப் பார்க்கிறார்; ஒருவரும் வாங்கிக்கொள்ளாது சொத்துக்கள் அழியவும் தரிசாய்க்கிடக்கவும் ஏற்பட்டிருக்கிறது.

எல்லாவற்றாலும் எங்கள் சற்குரு மூர்த்திகள் மிக உண்மை மூர்த்திகள். என்றும் நம்பினவர்களுக்கு நல்லதை அளிக்கும் மூர்த்திகள் என்றும், பரசுராமபிள்ளை ஆகிய நான் சத்தியமாகச் சொல்லி, சரித்திரம் விரிவுபடும் என்று நிறுத்திக்கொள்ளுகிறேன்.

ஒன்பத்துவேலி, }
மன்மத-தை-6. }

பக்தன்
பரசுராம பிள்ளை.

---

ஓம்
சற்குருவே துணை

பரம சற்குருமூர்த்தி சுவாமிகளுடைய திருவடித் தாமரைகட்கு அனந்தகோடி நமஸ்காரம் நினைந்து தெரிவித்துக்கொண்டது.

அடியார்க்கு அடியாள் ஜானவிநாயகம் முதலில் சுமார் 20, 21 வருஷத்திற்கு முன் வையம்பாளையத்துக்குக் கிழக்கு ரோட்டில் ஸ்ரீ சற்குருமூர்த்தி சுவாமிகளை தரிசித்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தேன். அவ்வூரிலும், அதற்கு இரண்டு மைல் மேற்கில் உள்ள அத்திப்பாளையத்திலும் குழந்தைகளை சீதாராம் சொல்லச் சொல்லியும் பக்தவிஜயம் பெருமாள் கோயிலில் படிக்கச் சொல்லியும் சில நாட்கள் தங்கி இருந்தார்கள். ஒரு சமயம் நாயக்கனூரில் தங்கியபோது அடியார்களும் போயிருந்தோம். சுவாமிகள் விநாயகர் கோயிலில் தங்கியிருந்தார்கள். சில பேர்கள் வந்து கடவுளைக் காட்டுங்கள் என்று கேட்க, கண்களை மூடிக்கொண்டு உட்காருங்கள் காட்டுகிறேன் என்றார். அதேபோல் சுமார் பதினைந்துபேர்கள் உட்கார்ந்திருக்க, ஒருவருக்குக் காக்ஷியும், ஒருவர் பயப்படும்படியாயும், சிலருக்கு வேடிக்கையாகவும் பலவிதமாக ஸ்ரீ கணேச மூர்த்தி தோன்றியதாகக் கூறினார்கள். அது முதல் யாவரும் பயபக்தியுடன் நடக்கலானார்கள்.

வையம்பாளையத்தில் எனக்கு வயிற்றுவலி வந்து ஆஸ்பத்ரியில் சிகிச்சை பெறுங்காலே கனவில் சுவாமிகள் தோன்றி விபூதி வழங்க என் நோய் மாயமாய் மறைந்தது.

துளசிநயனத்துக்கு :

சீகாளத்தியில் சுவாமிகளிடம் உபதேசம் பெற்று கோயமுத்தூரில் வீட்டில் ஜெபம் செய்துவரும்போது ஸ்வாமி அசரீரியாய் பெட்டியில் ரூபாய் உள்ளது. எடுத்துப் புடவை வாங்கிக்கொள் என்றார். இவ்வசரீரி கேட்டுப் பெட்டியைத் திறந்து பார்க்க, ஒரு ரூபாயுடன் ஐந்து ரூபாய் கூடியிருக்கக்கண்டு இது சற்குருவின் அருள் என்று உணர்ந்தாள்.

புதுப்பாளையம் குமரன்மில் கிருஷ்ண நாயக்கர் தம்பதியுடன் சுவாமிகளுக்கு பாதபூசை செய்து பிக்ஷை போட்டார்கள். பின்பு, சோபாவில் உட்கார்ந்திருந்த போது சுவாமிகள் இரண்டு வாழைப்பழம் ஜன்னலில் தந்ததாக சுவாமிகளிடம் கொடுக்க சுவாமிகள் அப்பழங்களை அவிடம் உள்ளவர்களுக்கு விநியோகம் செய்தார்கள். அப்பழங்கள் இன்ன ஜாதி பழம் என்று மதிப்பிட முடியாததாக இருந்தது. இவர் மறுநாள் வந்து சுவாமிகளை சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தவர் பகல் 1½ மணியிலிருந்து இரவு 10 மணிக்கு எழுந்தார்.

ஷியூரில் இடிகரையிலும் நரசிம்மபாளையம் ஆகிய ஊர்களில் நமஸ்காரம் செய்தவர்கள் மணிக்கணக்காக படுத்திருந்துதான் எழுவார்கள். இப்படிப் பல திருவிளையாடல்கள் நடந்தன.

**ஜானவிஞயகம்,**
**வையம்பாளையம் P. O.**

---

உ

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

திருநெல்வேலி கண்ணப்பர் சிவ. சு. நல்லகண்ணுப்பிள்ளை
வல்லநாடு சிவமடம்

ஸ்ரீமத் சிவராமலிங்க ஞானதேசிகன் அவர்கள் பேரில்

# பாடிய பாமாலை

---

அறுசீர் நெடிலாசிரிய விருத்தம்

சீர்தரும் வல்லநாடு திகழ் சிவமடத்தினின்றும்
பார்புகழ் நெல்லை கண்ணப்பர் பணியினையடியேற்கீந்தும்
ஓர் மனத்தொழுகு மன்பர் உளங்கவர்ந்தருள் பாதம்
சேர் சிவராமலிங்க தேசிகன் பதங்கள் போற்றி. (1)

அறுசீர் விருத்தம்

குற்றாலம் போய் வணங்கி யுங்கெழுந்தருள
மாசதனைக் குறைக்க வேண்டி
பற்றுய கண்ணப்பர் திருமடத்தில்
வருவனென பகர்ந்து போன
வற்றுவுன் வரவெங்கே சிவராம
லிங்க குருமணியே நேரும்
கற்றுவின் பிரிவதனுக் கிரங்கியாடும்
கன்றதுபோல் கரைகின்றேமே. (2)

*ஸ்ரீ குருமணிதன் தாள் வாழ்க.*

நெல்லை கண்ணப்பர் திருமடம் திருவடித்தொண்டன்,

**சிவ. சு. நல்லகண்ணுப்பிள்ளை.**

---

ஓம்.
சிவமயம்

## உபதேச கலை

கோயம்புத்தூர் ஜில்லாவிலிருந்து கொண்டயம் பாளையம் P. O. தாயம்மாள், தம் பந்துக்களுடன் திருப்பதி போய் முடியிறக்குங் கிரியைகள் செய்து சுந்தரவேடந் தரித்து பாபநாச புண்ணிய தீர்த்தமாடி, வெங்கடாசல பதியைத் திருப்தியாகத் தெரிசனம் செய்துகொண்டு, தாஸர்கள் சேவை செய்து அவர்கள் அருள் பெற்று, ரயிலேறி சீகாளாத்திக்குப்போய், யோக விநாயகர் குகைக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் ப்ரம்மமோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகளைத் தெரிசித்தார்கள்.

சற்சீடர், குறிகள் :—

வேர்க்கும் கண்ணீர்த்ததும்புங் கம்பிக்கு மெய்ந்நடுங்கும்
வார்த்தை நழுவு மனம்பதறும்—கார்க்கதமாய்க்
காந்து முரோ மாஞ்சலியாகுங் காதலித்தார்க்
கேய்ந்த குணங்கா ணிவையெட்டும்.

சாதன சம்பத்துக்கள் அவ்வம்மையாரிடம் காணப் பட்டன. சுவாமிகள் பக்குவம் நோக்கி ஆதிசைவக் குருக்களை அழைத்து தாயம்மாள் உடன் வந்த ஒன்பது பேருக்கும் யாக யக்ஞ கிரியைகள் செய்து சாஸ்திர விதிப்படி பஞ்சாக்ஷர உபதேசம் செய்து சுவாமிகளிடமும் குருக்களிடமும் விபூதி பிரசாதம் பெற்றுக்கொண்டு மறுநாள் பொன்முகலி நதியில் தீர்த்தமாடி சீகாளத்தீஸ்வரர், ஞானப்பூங்கோதை முதலான கடவுளரைத் தெரிசித்து மலைமேலுள்ள பராசர் தீர்த்தமாடி பராசர் திருவுருவம் தரிசித்து, கண்ணப்பர் லிங்கமும் பூசித்து, திரும்பி ரயிலேறி கொண்டயம்பாளையம் வந்து ஜெபதபம்செய்துகொண்டிருக்கும் சமயம் ஞானவிநயகம் தாயம்மாளிடம் போனபோது தன் பெயரிலுள்ள ரூ. 400/- P. N-ஐ சீகாளத்தி யோக விநாயகர் குகைக்கோயில் பூஜைக்காக கண்ணப்ப முதலியாருக்கு அனுப்பும்படி சொல்லிவிட்டு, அன்றிரவில் ஜெபம் செய்துகொண்டிருக்கும்போது சற்குரு சுவாமிகள், உபதேசம்செய்த குருக்

கள் இருவருடைய வடிவங்களும் கண்முன் தோன்றி உடனே காளத்திக்கு வாரும் என்றழைக்க, இதோ வருகிறேன் என்று, சா. ரெங்கசாமி நாயடுவின் மனைவி அக்கம்மாளிடம் சென்று, நான் சீகாளத்திக்குப் புறப்படுகிறேன் என்னுடைய அண்டா, குண்டா,குடம் வெங்கலப் பாத்திரங்களை கொண்டயம்பாளையம் மாரியம்மன் கோயிலுக்கு உபயமாய்க்கொடுக்கும்படி, சொந்தமாயுள்ள பழனிச்சாமியை எடுத்துக்கொடுக்கும்படி சொல்லச் சொல்லியும் மற்றும், சீகாளத்திக்கு தாயம்மாள், வழியில் பிச்சையேற்று கால்நடையாகப் புறப்பட்டாள் என்று உடற்பொருள் ஆவி மூன்றையும் தண்ணீர் வார்த்து சத்தியம் செய்த, ஜானவினயகம், விட்டல ராமதாஸ், உபதேசம் கேட்ட சீனிவாசலு மூவரும் கடிதம் எழுதினார்கள். தபாலில் வந்த கடிதத்தைப் படிக்கக் கேட்ட சுவாமிகள், அவ்வம்மை ஐந்து ஆறு ஜில்லாக்கள் மலை காடு முதலியன கடந்து கால்நடையாக வருவது முன் செய்த புண்ணிய தபோபலம், அதிசயப்படத்தக்கது என்று பதில் தெரிவித்தார்கள். அடுத்த நாள் காலை 7½-மணி சுமாருக்கு தாயம்மாள் குகைக்கருகில் வருவதைப்பார்த்த சுவாமிகள் முன் மண்டபத்தில சிவத்தியானத்தில் இருக்க அவ்வம்மையார் வந்து பாதத்தாமரையைத் தொட்டதுபோல் தோன்றி இருவரும் மெய்மறந்து நிஷ்டையில் ஆழ்ந்தனர். பிற்பகல் சுமார் 1½-மணிக்கு சுவாமிகள் நிஷ்டை தெளிந்து தாயம்மாளைப் பார்க்கும்பொழுது சரீர ஸ்மரணையற்றிருந்தாள். சுவாமிகள் வெளியே வந்து விபூதி நெற்றியில் பூச நித்திரை தெளிந்ததுபோல் எழுந்து நின்றாள். கோயம்புத்தூர் ஜில்லாவிலிருந்து 30 காதவழி அறிந்து எவ்விதம் வந்தாய் எனக்கேட்க, அம்மையார் நீங்கள் வழி நடக்க நான் பின் நடந்து வந்தேன். என்னை அழைத்துக்கொண்டு வந்து இங்கு மடத்துச் சமீபத்தில் வந்தபோது நீங்கள் முன் வந்து அமர்ந்து கொண்டீர்கள் என்று சரீர உணர்ச்சியற்ற நிலையிலிருந்தாள். உணர்வு வந்தபோது உன்னுடைய குடும்ப வரலாற்றைக்கூறுக என்று கேட்க என்சரீரத்தை

ஈன்றெடுத்த தந்தை தாயாகவும் மந்திரோபதேசம் செய்த மனோன்மணி குருவாகவும் விளங்கியவர் தாங்களே என நாக்குழற பகர்ந்தாள். பக்குவம் நோக்கிய குரு,

அரை நோட்டஞ் சிந்தை பெருமூச்சறியாச்
சுரமூட்டமெல்லாந் துறத்த—லுரைதோற்று
மான மவுனம் விகள மறவைசா
வானவிவை பத்துமவத்தை,

உள்ள அதி பக்குவர்களுக்கு உடனே அனுக்கிரகம் செய்யாவிடில் சரீரத்தில் உயிர் நிலையாதென அறிந்து கருணை கூர்ந்து மனோ வாக்குக் காயத்தை தண்ணீர் வார்த்து சத்தியமாக அர்ப்பணம் செய்யச்சொல்லி வாங்கிக்கொண்டு திருவடி சூட்டி அஸ்தமஸ்த சையோகம் செய்து கிருபா வீக்ஷண்யம் வைத்து சாம்பவி முத்திரை கேசரி முத்திரை காட்டி,

" சத்தத்தினுள்ளே சதாசிவங்காட்டி
சித்தத்தினுள்ளே சிவலிங்கங்காட்டி
அஞ்சக்கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக்கருத்தின் நிலை அறிவித்து "

நிர்வாண தீக்ஷையும் சிவயோகத்தாயுமானர் என்ற தீக்ஷா நாமங் கொடுத்து பத்து தினங்கள் கண்மூடி மௌனியாகி இருக்கும்படி கட்டளையிட்டு, யோக வினயக குகை கோயிலிலிருந்து கிழக்கே ஆற்றுக்கு அக்கரை சுமார் 2 பர்லாங் தூரத்தில் இருக்கும் சீகாளத்திக்கு ஷை அம்மையார் எழுந்து செல்லும் போதும், திரும்பி வரும் போதும் சற்குரு சுவாமிகளின் உபாசனமூர்த்தி வித்தக வினயகர் கிருபையால் கோயம்புத்தூருக்கு அடுத்த வையம்பாளையத்தில் உள்ள ஜானவினயகம் கைபிடித்து வருவதாக போக்குவரவாயிருந்து பத்து நாள் கடந்து கண் விழித்து சுவாமிகளுக்கு பாதபூஜை செய்து பாத தீர்த்தம் உட்கொண்டு சரீர அபிமானமில்லாத நிலையில் சிவராமா சிவராமா என்ற நாமத்தைக்கூறிக்கொண்டு பிச்சை வாங்கி வந்து குருவுக்கும் கொடுத்தும் தானும் புசித்தும் வரும்நாளில் திருஞானசம்பந்தர் தேவாரத்தில்

"கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்" என்று சொன்ன அளவில் தாயம்மாள் எனக்கு படிக்கும்படி சொல்லிக் கொடுத்தால் தெரிந்து கொள்வேன் என்று பிரியமாய்ச் சொன்னுள். 12 உயிரெழுத்தும், ஆய்த எழுத்தும் உயிர் மெய்யெழுத்து 18-ம், ஒன்று இரண்டு என்று எண்ணிக் கையும், கேள்வி உத்திரத்தோடு அரிச்சுவடி எழுத்து 247-ம், சிரவணஞ் செய்து பெயர்ச்சுவடி, ஆத்திச்சுவடி, வேழமுகம், கொன்றைவேந்தன் முதலிய நூல்களையும் நான்கு, ஐந்து ஆண்டுகள் மனனம் செய்துகொண்டு ஜெபம், நிதித்தியாசனம் அனுஷ்டித்து வரும் நாளில் கொன்றைவேந்தனில் "தந்தை சொல் மிக்க மந்திர மில்லை" என்று வரும்போது இந்த மந்திரம்தான் இனிப் பாய் நன்ருயிருக்கிறது. மற்றது நஞ்சாய், கசப்பாய் இருக்கிறது என்று கூற அம்மையார் கையிலிருந்த புஸ்த கங்களை எல்லாம் மற்றவர்களுக்குப் படிப்பதற்குக் கொடுத்துவிட்டபின்னர் சமாதி அவஸ்தையிலிருந்தனர். வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் விழிப்பாயிருந்து பூமியில் எவ்விடத்திலும் சரீரம் மறந்தநிலையில் அமர்ந்து கொண்டு இருக்கவும் பார்த்த ஜனங்கள் சிவயோகத்தாய் மரணமடைந்தார்களோ என சந்தேகப்படக்கூடிய நிலையில் தவத்தில் இருந்தார்கள்.

ஒருநாள் இரவு 8-மணிக்கு பஜனை கோஷ்டியுடன் பாடி ஆடிக்கொண்டு சென்றபோது வழியில் கண்ணப்ப முதலியார் மெத்தை வீட்டிற்கு முன் பனைக்கல் போஸ்டு மெயின் ரோட்டின் அருகில் நிஷ்டைகூடி சரீர ஸ்மரணை யற்றபோது அதைப்பார்த்தவர்கள் மறுநாள் தூரத்தில் குகையிலுள்ள சுவாமிகளிடம் கூற பின் அவிடம் சென்று அம்மையார் நிஷ்டை கலைந்தபின் அழைத்துச்செல்வதா யினர். மற்றும் ஆற்றுக்கு அக்கரையிலுள்ள மரஞ்செடி கொடிகள் அடர்ந்த கானகத்தில் சிறுத்தை, புலி முதலான துஷ்ட மிருகங்கள் சஞ்சரிக்கும் இடத்தில் நிஷ்டையில் இருந்து இரண்டு மூன்று நாட்கள் அம்மையாரைக் காணுது சுவாமிகள் ஊருக்குள் தேடியபின் ஷை வனத்திற்

குள் இருப்பதாக கேள்விப்பட்டு அவ்விடம் சென்று பார்த்து வியப்படைந்தேன். பின், நிஷ்டை கலைந்தபின் அம்மையாரை அழைத்து வரும்பொழுது தைரியமாக நடந்து வருவதற்குக் காரணம் சுவாமிகள் மத்தியானம் கைபிச்சை ஏற்று உண்பது வழக்கம். சிவயோகத்தாய் கானகத்தில் நிஷ்டையிலிருக்கும்பொழுது சுவாமிகளுக்கு பசி தாகம் மிக உண்டாகி இரண்டு ஒரு வேளை பலகார பட்சணம் உட்கொண்டார். அப்போது சிவயோகத் தாயுமானூர் ஏப்பம் போட்டார்கள் என்ற இச்செய்தியை சுவாமிகளிடம் அம்மையாரே மடத்திற்கு அழைத்துவரும் பொழுது அவ்விடமிருந்தவர்கள் சொன்னார்கள். இப்படி ஜெபதபப் பண்ணிக்கொண்டிருக்கும் நாளில் பிராமசரி நோட்டு ரூ. 400—0--0-ஐ ஜானவிநயகம் அனுப்பி வைத்த தொகையை அன்னதானம், மஹேஸ்வர பூஜை செய்து இருக்குங்காலை சீகாளத்தி, யோகக்ஷேத்திரம், விருத்தாசல முக்தி க்ஷேத்திரமாகையால் அவிடம் தவம் செய்யப்போகலாம் என்று சுவாமிகளிடம் அவ்வம்மையார் கூற அன்று குப்புசாமி பிள்ளை சீகாளத்திக்கு வந்த போது சுவாமிகள் குப்புசாமி பிள்ளைக்கும் சிவயோகத் தாயுமானுருக்கும் விருத்தாசலத்திற்கு டிக்கெட் எடுத்துக் கொடுக்கும்படி கண்ணப்ப முதலியாரை அனுப்பி வைத்தார்கள்.

சிவயோகத்தாய் டிக்கெட் பணத்தை குப்புசாமியிடம் கொடுக்கும்படி சொல்லி தனக்கு திருப்பதிக்கு நாலணு டிக்கெட் வாங்கிக் குப்புசாமி விருத்தாசலம் போய் கடித மூலம் திருப்பதியில் சிவயோகததாய் ரயிலிலிருந்து இறங்கிவிட்டதாக தெரிவித்தார். அவ்விடம் இறங்கிய சிவயோகத்தாய் பின் விருத்தாசலத்தில் இருப்பதாக சிவப் பிரகாசம் பிள்ளை அவர்கள் அம்மையார் அழுத கண்ணீருடன் தெருவில் பிச்சையேற்று சரீர உணர்ச்சி மறந்து மனிதருக்குண்டான நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலிய நான்கு குணங்களின்றி முன் செய்த தவோ பலத்தினால்,

## XXXXI

"நகர்தனி லேகிப் பிச்சை நண்ணியே மனைக டோறும்
அகமகிழ்ந் தங்கை யேற்றே யவ்விடத் தருந்தி யாங்கே
செகமுளோர் பேயென் றெண்ணிச் சிரித்திட நாண மின்றி
இகபரத் திச்சை யற்றே யேகனு யுலாவ லுற்றான்"

என்ற பாசுரத்துக்கு சாட்சியாக உலாவிக்கொண்டிருப்பதாக காளத்தி யோக விநயகர் கோயிலிலிருக்கும் ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகளுக்கு கடிதமூலமாக சிவப்பிரகாசம் பிள்ளை விண்ணப்பித்துள்ளார். நிற்க, ஒரு நாள் விருத்தாசலத்திலிருந்த அம்மையார் காளத்தி தெருவில் பிச்சையேற்க வந்ததாகவும் ஆற்று மணலில் நீலகண்ட சாதுவினிடம் உரையாடியதாகவும் அவர் சுவாமிகளிடம்வந்து ஆற்று மணலில் சிவயோகத் தாய் வீற்றிருப்பதாகக்கூற சுவாமிகள் அவருடன் சென்று பார்க்கும் பொழுது மணலில் கால் அடிகளின் அடையாளங்கள் தெரிந்தன. மறுநாள் சில பெண்கள் காளத்தி தெருவிலிருந்து சுவாமிகளிடம் மடத்துக்கு வந்து சிவயோகத்தாய் தங்கள் தெருவிற்கு நேற்று பிச்சைக்கு வந்ததாகக்கூற இப்போது தாய் எங்கிருக்கிறார்கள் என மடத்தில் கேட்டார்கள். சிவயோகப் பெருமை இங்ஙனமிருக்க விருத்தாசலத்தருகில் உள்ள முகுந்தநல்லூர் சாத்துக்கூடல் P. O. சைவ நடேச உடையார் கனவில் சில வருடங்களுக்குமுன் ப்ரம மோன நிர்வாணமுத்துக்குமார சுவாமிகள் தோன்றி சீகாளாத்தியில் யோக விநயகர் குகைக்கோயில் என்று பெயரிட்டு மடம் கட்டுவிக்கும்படி உத்திரவிட அம்முறைப்படி கட்டி கும்பாபிஷேகம் செய்த பக்த சிரோன்மணி நடேச உடையார் சிவயோகத்தாயை மிகுந்த விருப்பத்துடன் விருத்தாசலத்திலிருந்து அடுத்த முகுந்தநல்லூருக்கு அழைத்துப்போயினர்.

செல்லுழிக் கண்ட சிதைவ லோடுங் கையும்
நல்ல கலமவரக்குந் தீபற
நாட்டிலேற்றுண்பதற்குந்தீபற.

— (அவிரோதவுந்தியார்)

" வீடுநமக்கு திருவாலங்காடு விமலர்தந்த
ஓடு நமக்குண்டு வற்ருத பாத்திர மோங்கு செல்வம்
நாடு நமக்குண்டு கேட்டவெல்லாந்தர நன்னெஞ்சமே
ஈடு நமக்குச் சொலவோ வொருவருமிங்கில்லையே "

ஏற்ப அம்மையார் வசித்து வந்தார்.

இவ்வாறு முகுந்தநல்லூரில் வசித்துவரும்போது குளக்கரைக்குச் சென்று தலை முழுகாமலும், சரீர முழுமையும் தண்ணீரில் மூழ்கும்படி காலை முதல் மாலை அளவில் சரீரம் சீதளம் ஏறி சூடில்லாதிருப்பதைக்கண்ட அன்பர்கள் கட்டில் கொண்டுவந்து அதன்மேல் சைவ நடேச உடையார் தெருவுக்கு எடுத்துப்போகும் வழியில் வைத்து இந்த அம்மையாரை குளத்துத் தண்ணீரிலிருந்து எடுத்துவந்த காரணத்தால் காளத்தி சுவாமிகளிடம் தான் எடுத்துப் போகவேண்டும் என்று தெருவாசிகள் பேசியதின் பேரில் உடனே எழுந்து உட்கார்ந்து, முத்துக்குமார சுவாமிகள் தான் தான் என்று சொன்னுர்கள். குருபுத்திரன் ஆனுல் எல்லா சித்தியும் உண்டாகும்.

பின்னும் நடேச உடையாருக்கு தெய்வத்தன்மை விநோதங்களை காண்பித்ததுண்டு. சீகாளாத்தியில் ரைஸ்மில்காரர் மாமியாராகிய பாப்பம்மாளுக்கும் முத்துக்குமாரசுவாமிகளின் உருவத்தில் சென்று சித்து விளையாடினுள். விரிக்கில் பெருகும். இதுபோல் பல விநோதங்களை விருத்தாசலத்திலும் நடத்தி விருத்தாசலத்திற்கு வடகீழ் புறமுள்ள ஆயியார் மடத்தில் சிவயோகத்தாயுமானுர் பதிமூன்று நாள் துரியாவஸ்தை அடைந்து சித்திர பானு வருஷம் ஐப்பசி-மீ 24உ (1942-ம்வு நவம்பர்-மீ 9உ) விசாக நக்ஷத்திரத்தில் பரிபூர்ண நிலை அடைந்தார்.

அங்குள்ள சாதுக்களும் ஏட்டையாநடேசன் முகுந்த நல்லூர் நடேச உடையாரும் பா. ராமசாமி ரெட்டியாரும் லோகநாயகி அம்மாளும் அவரைச் சார்ந்த மற்ற அன்பர்களும் விருத்தாசல வாசிகளும் சேர்ந்து அம்மையாருக்கு

ஞானி சரீரத்திற்குச் செய்யவேண்டிய கிரியைகள் செய்து திருமேனிக்கு புஷ்ப அலங்காரம் செய்து ஆயியார் மடத்தில் சமாதி அமைத்து வையம்பாளையம் ஜானவினுயகம் பஞ்சாக்ஷர படி கட்டி பூஜை முதலியன நடந்துவருகிறது.

என்னுணே யென்னுணே யென்னுணே யேகமி
ரண்டெண்ணுமற் சுமமா விருவென்ருன்
திருஞானசம்பந்தன் சீர்காழி நாட
னருளாளன் ஞானவினேதன்.

தந்த்ரகலே மந்த்ரகலே சார்பழுந்தச் சாற்றுமது
மந்தர சரியாதி மார்க்கமிது—முந்தைத்
தபதி விரத்தியரைச் சார்பழியச் சாற்று
முபதேச மென்றே யுணர்.

இத்திருவெண்பாவால் இந்நூல் உபதேசகலேயென்று அறிவித்தவாறு காண்க.

— முத்துக்குமார சுவாமிகள்

---

உ
சிவமயம்

திருநெல்வேலி ஜில்லா, வல்லநாடு
அறிவாநந்தர் சுவாமிகள் சிஷ்யர்
சிவராமலிங்க பரம ஹம்ஸர்

# சிவ மஹிம்ந ஸ்தோத்திரம்

ஒருகொம் பிருமதம் ஒண்முக்கண் நால்வாய்
கரமைந் தறுபதஞ்சேர் கண்ணி – உரமுந்
தெழுவயி றெண்குண மின்பப்பே ரூரன்
கழலிணை நெஞ்சே கருது.

மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தொடர்ந் தோருக்கு வார்த்தை சொல்லும் சற்குரு, சிவராமலிங்க பரமஹம்ஸர் "சாந்தலிங்க சுவாமிகள்" பேரில் வெண்பா, பதிகத் தோத்திரம், பக்தமான்மியம், 7000 பாக்களுக்கு சாற்றுக் கவிகள், சிவமஹிம்ந சுலோக வடமொழி தோத் திரத்திற்கு பதவுரை, விரிவுரை, கருத்துரை தமிழ் வசன மாய் எழுதியும், கல்கத்தா முதலிய இடங்களில் ஆங்கில முதலிய பாஷைகளில் உபந்நியாசங்கள் செய்தும் கைவல்ய நவநீதம், பகவத் கீதை, ஞானவாசிட்டம் முதலிய வேதாந்த தர்க்க வியாகர்ண கிரந்தங்களுக்கு தாத்பரியமும், வைராக்கிய சாதுக்களுக்கு பாடங் கிரம மாக உபதேசித்தும், கிரகஸ்தர்களுக்கு திருவிளையாடல் முதலிய பல புராணங்களுக்கு தாற்பரியம் சொல்லிக் கொடுத்தும், பக்தியாயுள்ள பலருக்கு பஞ்சாக்ஷரம், அஷ் டாக்ஷர உபதேசங்களும், பிறப்பறுக்கவந்த முமூக்ஷுக் களுக்கு ஆசானுய் உபதேச கிருபாவீக்ஷண்யம் செய்து, உலகின் உபகாரமாக நாட்களைக் கழித்து திருநெல் வேலிக்கடுத்த வல்ல நாட்டில் தமது குருவாகிய அறிவா னந்த சுவாமிகளின் சமாதி திருக்கோயிலின் முன், நந்தி யெம்பெருமானுக்குக் கீழ் சமாதி கொண்டுள்ளார்கள்.

ஸ்ரீலஸ்ரீ அ. சிவராமலிங்க பரமஹம்சர்களுடைய சிவமஹிம்ந 7-ம் ஸூத்திரத்திற்கு விளக்கவுரை.

அவதாரிகை :— இவ்விதம் பரமேஸ்வரனிடத்துப் புற நோக்குடையாரை மறுத்துச் சாஸ்திரம் அனைத்திற்கும் நேராகவோ அல்லது தொடர்பாகவோ (பரம்பரையாக) பரமேஸ்வரனிடத்திலேயே கருத்து என்று உரைக்கின்றார்.

त्रयी सांख्यं योगः पशुपतिमतं वैष्णवमिति
प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यमिति च ।
रुचीनां वैचित्र्यादृजुकुटिलनानापथजुषां
नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥

பதவுரை:— **त्रयी** - மூன்று வேதங்கள், **सांख्यं** - ஸாங்கிய சாஸ்திரம், **योगः** - யோக சாஸ்திரம், **पशुपतिमतं** - பாசுபதக் கொள்கை, **वैष्णवम्** - வைஷ்ணவ சாஸ்திரம் (பாஞ்சராத்திரம்), **इति** - என்னும், **प्रभिन्ने** - ஒன்றற்கொன்று மாறுபாடான, **प्रस्थाने** - சாஸ்திரங்களில், **रुचीनां वैचित्र्यात्** - இச்சைகளினது வேறுபாட்டால் (முற்பிறப்பின் வயத்தாலேற்பட்ட வாசனையின்வழி நாநாவகை விருப்பத்தால்), **इदं परं पथ्यं च** - இவ்வழியே (எல்லா வழிகட்கும்) மேலாயதும் நலமானதும், **अदः (परं पथ्यं) इति** - இம்மதமே மேலானதும் நலமானதும் என்று, **ऋजुकुटिल** - நேரான (அல்லது) வளைவான, **नानापथजुषां** - பற்பல மார்க்கங்களில் பயிலும், **नृणां** - (அதிகாரிகளாகிய) மனிதர்கட்கு, **ऋजुकुटिल - नानापथजुषां) पयसां** - நேராக அல்லது பரம்பரையாக நாநா வழியில் செல்லும் நதிகட்கு, **अर्णव इव** - (அடையுமிடம்) கடலைப்போல், **त्वं एकः** - பரமேஸ்வராகிய தேவரீர் ஒருவரே, **गम्यः असि** - அடையுமிடமாக இருக்கின்றீர்.

விரிவுரை :— கங்கை முதலிய நதிகள் நேராகவும், யமுனை முதலிய நதிகள் கங்கை முதலியவற்றில் கலந்து பரம்பரையாகவும் கடலையடைகின்றன. இங்ஙனமே வேதாந்தக் கேள்வி, மனன, நிஷ்டையுடையோர்கள் நேரே பரமேஸ்வரனை அடைகின்றனர். மற்றைய வழிகளில் முயன்று பழகுவோர்கள் மனத்தூய்மை யொருமைப்பாடுகளின் ஏற்றத்தாழ்வால் தொடர்பாகவே பரமேஸ்வரனை அடைகின்றனர். நேர்வழி விரைவில் பயன் தருவதாயினும், வாசனையால் நேரென்றும் தொடர்பென்றும் உறுதிகாண்டற்கு வல்லுனராகாமையின் தொடர் நெறியே நேர்நெறி என மயங்கி முயல்கின்றனர் என்பதாம். த்ரயீ என்பது பதினெட்டு வித்தைகட்கும் உபலக்ஷணமாம்.

இங்குக் கூறிய பதினெட்டு வித்தைகள், ஆஸ்திகர் கொண்டுள்ள சாஸ்திரமனைத்திற்கும் உபலக்ஷணமாம். அவையாவன:- இருக்கு யசுர், ஸாமம், அதர்வணம் என வேதம் நான்கும்; சிட்சை, கல்பம் வியாகரணம், நிருத்தம், சந்தசு, சோதிடம் என வேதாங்கங்கள் ஆறும்: நியாயம், மீமாம்சை, தரும சாஸ்திரம், புராணம் என உபாங்கங்கள் நான்குமாக வித்தைகள் பதினான்காம். இவற்றோடு ஆயுள்வேதம், தனுர்வேதம், கந்தர்வவேதம், அர்த்தவேதம் என உபவேதங்கள் நான்கும் சேர்த்துப் பதினெட்டு வித்தைகள் என்று வழங்கப்படுவனவாம். உபபுராணங்கள் புராணத்திலும்; வைஸேஷிகம் நியாயத்திலும்; வேதாந்தம் மீமாம்சையிலும்; பாதஞ்சலம், பாசுபதம், வைஷ்ணவ முதலிய சாஸ்திரங்கள் மஹாபாரத ராமாயண இதிகாசங்கள் தருமசாஸ்திரத்திலும் அடக்கமாம். மற்றைய ஏகதேசிகளின் சாஸ்திரங்களும் இவற்றினடங்குவனவாம். அங்ஙனங்கொள்ளின் மாத்தியமிகாதி நான்குவித சுகத மதத்தவரின் சாஸ்திரங்களும், திகம்பரரின் சாஸ்திர பேதங்களும் சார்வாகரின் சாஸ்திரமுமாக அறுவகை நாத்திகரின் சாஸ்திரங்களும், கூறப்படவில்லை எனின், இவைகள் வேதத்திற்குப் புறம்பானவை

யாதலின் பரம்பரையாகவேனும் புருஷார்த்தத்திற்கு உபயோகமின்மையின் கொள்ளத்தக்கவை யன்றாகும். இச்சுலோகத்திற்கு நேராகவும் தொடர்பாகவும் புருஷார்த்தத்திற்கும் வழியாய சாஸ்திரங்களே காட்டப்பட்டன. இவ்வித்தைகளின் பேதங்களும் பயனும் யாதெனில் சுருக்கிக் கூறப்படுகின்றன.

தருமத்தையும் பிரமத்தையும் உரைப்பதாயும் ஒருவரால் செய்யப்படாததாயும், பிரமாண வாக்கியமாயும் இருப்பது வேதமாம். இது மந்திரபாகம் பிராம்மண பாகம் என இருவகையினதாம். யாகத்திற்குக் காரண வடிவமான திரவியம் தேவதைகளைக் கூறுவன மந்திர பாகங்கள். இவை இருக்கு, யசுர், சாமம் என்று மூவகைப் படுவனவாம். பாதங்களால் சேர்க்கப்பட்டுக் காயத்திரி முதலிய சந்தங்களோடு கூடிய மந்திரங்கள் இருக்குகள். கீதத்தோடு கூடியவை சாமங்கள். இவ்விரண்டிலும் வேறாயவை யசுர் என்பனவாம்.

பிராம்மணமும் விதிவடிவம், அர்த்தவாதவடிவம், இவ்விரண்டின் வேறானது என மூவகையாம். இவ்விதியும் உற்பத்தி விதி, அதிகாரி விதி, விநியோக விதி, பிரயோக விதி என நான்கு பேதமாம். ஒன்றைப் புகழ்தல் அல்லது இகழ்தலாகிய வாக்கியம் அர்த்தவாதமாம். இவ்வர்த்தவாதமும் குணவாதம், அனுவாதம், பூதார்த்த வாதம் என முப்பிரிவாம்.

வேதாந்த வாக்கியமோ கருமத்தைக் கூறாமையின் விதியிலும்; விதிகளனைத்தையும் தனக்கு அங்கமாக்கிக் கொண்டு தானொன்றற்கும் அங்கமாகாமையின் அர்த்த வாதத்திலும் அடங்குவதன்று ஆதலால் இவ்விரண்டினும் வேறாயதாம்.

அதர்வணவேதம் யாகாதிகளுக்கு உபயோகமாகாவிடினும், சாந்திக, மாரண முதலிய கருமங்களைக் கூறுதலால், வேறான கருமத்திற்காம். இங்ஙனங் கருமகாண்ட,

பிரம்மகாண்ட வடிவவேதம், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்த காரணமாம்.

வேதமந்திரங்கட்குச் சுரம் வர்ணம் உச்சாரணம் வேண்டுவன. சுரமும் எழுத்தும் குறைவாக உச்சரிப்பின் பயனைக் கொடாததோடு மாறுபட்ட பொருள் பயத்தலால் கூறுபவர்க்குக் கேட்டை விளைவிக்கின்றது. ஆதலின் எடுத்தல் முதலிய சுரங்களோடு உயிர் முதலாய எழுத்துக் களை உணார்த்தும் சிக்ஷை வேதத்திற்கு அங்கமாம். இங் ஙனமே சப்தங்களின் குற்றமற்ற தன்மையை உணார்த்து வது வியாகரணமாம். வேதமந்திரங்களின் பொருளு ணார்ச்சியின் பொருட்டுச் செய்யப்பட்டது நிருத்தம். மந்திரங்களின் சப்தஞானத்தின் பொருட்டுச் செய்யப் பட்டது சந்தசு. கருமங்களைச் செய்ய காலத்தை உணார்த் துவது சோதிடம். இவை வெவ்வேறு முனிவரால் வேதத் திற்கு அங்கங்களாக விளம்பப்பட்டன. இலௌகிகத் திற்கும் இவை உரியனவாம். உபாங்கங்களுள் புராணம் என்பது. உலகங்களின் தோற்றம் ஒடுக்கம், அரசவம்சம், மன்வந்தரம், வம்சசரிதமாகிய ஐந்தையும் உணார்த்து வதாய், பிரம்ம முதலிய பதினெண்வகையாய் வியாச முனிவரால் கூறப்பட்டது. நியாயசாஸ்திரம் பிராமண முதலிய பதினறு பதார்த்தங்களைக் காட்டுவதாய்க் கௌ தமரால் செய்யப்பட்டது. இனி மீமாம்சா சாஸ்திரமும் கருமமீமாம்சை சாரீரகமீமாம்சை என இருவகைத்தாம் கருமமீமாம்சை பன்னிரண்டு அத்தியாயமாய்ச் ஜைமினி முனிவரால் உரைக்கப்பட்டது. இது தர்ம விசாரத்தை வலியுறுத்துவதாம். உபாசனையாகிய மனதின் கருமத் தைக் கூறுவதாய் நான்கு அத்தியாயம் உடைய தேவதா காண்டமும் இக்கருமமீமாம்சையில் அடங்குவதாகி ஜைமினி முனிவரானே மொழியப்பட்டது. சாரீரக மீமம் சையும் பகவான் வியாசரால் நான்கு அத்தியாயமுடைய தாகச் செய்யப்பட்டது முதலத்தியாயத்தில் உபநிஷத்து வாக்கியங்களாகிய வேதாந்தங்களனைத்திற்கும் நேராக அல்லது தொடர்பாக ஒரே பிரமத்திலே கருத்தென்று சமன்வயம் காட்டப்பட்டது.

இரண்டாம் அத்தியாயத்தில் இங்ஙனம் சமன்வயம் கூறுங்கால் மிருதி தருக்க முதலிய நூல்கட்கு மாறுபாடா தலை வினு விடையாக விரோதமின்மையை விளம்பு கின்றது. மூன்றும் அத்தியாயம் பிரம்மஞானத்திற்குப் புறச்சாதனமும் உட்சாதனமும் உணர்த்துகின்றது. நான்காவதில் சகுணப் பிரம்ம நிர்க்குணப் பிரம்ம ஞானங்களின் பலன் நவிலப்படுகின்றது இவ்வாறு ஜீவப்பிரம்ம விவேகத்துவ அனுபவ காரணமான விசா ரத்தை விளம்புவதாய்ச் சர்வ சாத்திரங்களையும் தனக்கு அங்கமாகக்கொண்டு, அவற்றின் உட்கருத்தை விளக்கிச் சிரசாய்த் திகழும் இச்சாரீரக மீமாம்சை முத்திவிருப்பின ரால் போற்றத்தக்கதாம். தரும சாத்திரங்கள் வருணச் சிரம இயல்புகளைக் காலம் தேசம் அதிகாரி தொழில் இவைகளை அறிந்து விதிப்பதாய், மனு, பராசர், நாரதாதி அனேக முனிவரான் மொழியப்பெற்றனவாம். இவ்வுபாங் கங்களில் கூறிய விடயத்தின் உணர்வே இவைகளின் பயனும்.

ஆயுள்வேதத்தைத் தன்வந்திரி முதலியோர் மொழிந் தனர். இதில் வியாதி, அதன் காரணம், வியாதிநீக்கம், அதன் காரணம் இவைகளை உரைப்பதால், ஊழாலன்றிச் செயற்கையான் வந்த வியாதியின் சிகிச்சை உணர்வும் வைராக்கியமும் இதற்குப் பயனும். காமநூலும் ஆயுள் வேதத்தில் அடக்கமாம் இந்நெறியினலும் விஷயங்களில் துக்கமே பேருதலின், விஷய வைராக்கியமே பயனும். தனுர்வேதம் நான்குபாதம் உடையதாய் விசுவாமித்திர முனிவரான் மொழியப்பட்டதாம். இது விடும் படை, விடாப்படை, விட்டுவிடாப்படை, இயந்திரப்படையென நான்குவித ஆயுதங்களின் பிரயோகம், மந்திரம், அதி தெய்வம் முதலியன தெரிந்து, அரசர்களும் அவர்களைச் சேர்ந்தோரும் தீக்ஷை ஆயுதப்பயிற்சி மந்திரசித்தி முதலியன ஆசிரியன் மூலமாய்ப் பெறுதலை உணர்த்து கின்றது. துஷ்டர், சத்துருக்கள், சோரர் முதலியோர்களி னின்றும் அரசர் தேசத்தைக் காத்தல் பயனும். பரதர்

செய்த காந்தர்வ வேதத்தில், நடனம் கீதம் வாத்தியம் முதலியன காட்டப்பட்டு, தேவதையின் வழிபாடும் சமாதியும் இதற்குப் பயனும். அர்த்த வேதம், நீதிசாத்திரம் பாகசாத்திரம் இந்திரஜாலம் முதலிய அறுபத்துநான்கு கலைகளுமாம்.

இவை நாநா முனிவரால் செய்யப்பட்டு, இலௌகிக வடிவம், அதனதன் பயன்களின் வேறுபாடு காணத்தக்கனவாம். இவ்வாறு வித்தைகளை, த்ரயீ என்னும் பதத்தாலுரைத்தார். இனி சாங்கிய சாத்திரம் கபில முனிவரால் கூறப்பெற்று மூவகைத் துக்கநீக்கமே புருஷார்த்தம் என்றும், இதற்குச் சாதனம் பிரகிருதி புருஷர்களின் விவேகஞானம் என்றும் உணர்த்துகின்றது. யோக சாத்திரம் பதஞ்சலி பகவானால் மொழியப்பெற்று; இயமாதி அஷ்டாங்க யோகங்களும் யோக விபூதிகளும் (சித்திகளும்) முத்தியும் தெரிவிப்பதாம். சித்தவிருத்தி நிரோதமாகிய நிதித்தியாசனம் பலனாகக் கொள்ளப்படுகின்றது. பாசுபத சாத்திரம் மகேசுரரால் பசுவினது பாச நீக்கத்தின் பொருட்டு உரைக்கப்பட்டது. இதில் ஜீவனாகிய பசு, பதியாகிய ஈசுரனிடம் சித்தத்தைச் சாவதானமாக்குதலாகிய யோகத்தால் துக்கநாசமாகிய முத்தி மொழியப்படுகிறது. வைஷ்ணவ சாத்திரமாகிய பாஞ்சராத்திரம் நாரதாதி முனிவர்களால் உரைக்கப்பட்டது. இதில் வாசுதேவர் சர்வகாரணர், இவரினின்றும் சங்கர்ஷணன் என்னும் சீவனுண்டாகி, யிவனினின்றும் மனம் என்னும் பிரத்யும்நன், இவனினின்றும் அநிருத்தன் என்னும் அகங்காரனும் உண்டாயினர். இவையெல்லாம் பகவானுடைய அம்சங்களே. அவரோடும் அபின்னமேயாமென்றும், வாசுதேவருடைய வழிபாட்டை முக்கரணங்களானும் இயற்றிக் கிருதகிருத்தியனாகின்றான் என்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. சைவமந்திர சாத்திரங்களும் வைஷ்ணவ மந்திர சாத்திரங்களும் முறையே பாசுபதம் பாஞ்சராத்திரங்களில் அடக்கமாம். இவ்வாறு சாத்திர வேறுபாடுகளிருக்கினும் ஆரம்பவாதம் பரிணாமவாதம்

விவர்த்தவாதம் என மூன்றில் அனைத்தும் அடக்கமாம். அவையாவன ; நான்கு பூதங்களின் பரமாணுக்கள் இரட்டையணு முதலிய முறையாக பிரமாண்டம் வரை உலகத்தை உண்டாக்குகின்றன. முன்னில்லாத அசத்தாகிய காரியம் உண்டாகின்றது, என தார்க்கிகரும் மீமாம்சகரும் ஆரம்பவாதத்தை அறைந்தனர். முக்குண வடிவப் பிரதானமே மகதத்துவ முதலாக உலகவடிவாய்ப் பரிணமிக்கின்றது. முன் சூக்குமமாயிருந்த சத்தாகிய காரியமே வெளிப்படுகின்றதென சாங்கிய யோக பாசுபதமதம் பற்றியவர் பரிணமவாதத்தைப் பகர்ந்தனர். வைஷ்ணவரும் பகவானிடத்தினின்றும் உலகம் பரிணமமாயிற்று என்பர். அத்விதீய பிரம்மம் மாயையினுல் பொய்யாக உலகத்தைக் கற்பிக்கின்றதென பிரம்ம வாதிகள் விவர்த்த பக்ஷத்தை விளம்பினர். வேதாந்த வ்ாக்கியங்களால் உரைப்பதும் விவர்த்த வாதத்தை முடிவாயுடையதுமாகிய ஏகபரமேஸ்வரரிடத்திலே நாநா நூலாசிரியராகிய எல்லா முனிவரர்களுக்கும் கருத்தாயினும், புறநோக்குடையோர் முதன் முதல் இக்கருத்தைக் கொள்ளின், இக்கருத்தில் நுழையாது நாஸ்திகத்தைப் பற்றுவர் என்னுங் கருத்து உட்கொண்டவர்களாய், இந் நாத்திகத்தை நீக்க அம்முனிவர் நாநாவகை நாட்டினர். ஆதலால் அவர்களின் உட்கருத்து அறியாத அவ்வச் சாத்திரங்கட்கு வேதவிருத்தக் கருத்தை விரித்து, அவ்வம் மதமே அந்தமாகக்கொண்டு பற்பல நெறியைப் பற்றுவர் என்றனர்.

ஓதரு பரம ஞானி யுண்டதெவ் வுலக முண்ட
தாதலால் அவனைப் பூசித் தவனுல கங்கள் மூன்றும்
கோதிலாச் சிவன்மா லோடு கூடவே குறைவில் பூசை
காதலாற் செய்தா னென்றே யருளினுன் கருணை வாரி.

———

உ

சிவமயம்

# தாத்தா சுவாமிகள் சரிதம்.

---

நடுநாட்டில் திருமுதுகுன்றெனும் விருத்தாசலத்தின்கண் 1936ம்-ஞு அநேக வருஷங்களாய் இன்ன ஊர், இன்ன வர்ணம் என்று தெரியாமல் திகம்பரராக உலகத்தோற்றமில்லாமல் பாலர், பித்தர், பைசாசர்போல உலாவிக்கொண்டிருந்த குணாதீதரும், முக்காலமும் உணர்ந்த வாக்குகள் வெளிப்படுவதும், ஓதாமல் உணர்ந்தவருமாகத் தெரிந்த முகுந்தநல்லூர் முதலிய கிராமவாசிகளாலும், பல்லோராலும் பூசிக்க உகந்த சித்தரும், பெரியவாள் தன்மை பொருந்தியவரும் யாவரையும் தாத்தா என்று கூப்பிட்ட காரணத்தால் 'தாத்தா சுவாமிகள்' எனப் பெயர் வழங்கப்பட்டவரும் உலகத்தோர் உய்ய வடிவுகொண்டவருமான சிவயோகியாகிய பிராமணனை அருள் நிறைந்த ஜீவன் முக்தரென்றுணர்ந்த விருத்தகிரி வாசிகளாகிய பக்தர்கள் பலர், ஆங்கிரஸ வருஷம் புரட்டாசி மாதம் 29உ வெள்ளிக்கிழமை பௌர்ணமி திதியில் சந்தோஷமாக விருத்தாசலத்தில் சுவாமிகளை புஷ்ப விமானத்தில் வைத்து தெய்வத்தைக் கொண்டாடுவது போல் 8 வீதியும் பட்டணபிரவேசத்துடன் பலபேர்களால் தாங்கப்பட்டு மேளவாத்தியத்தோடு தொண்டர் மடத்தில் புலித்தோல் ஆசனத்தில் சோர்ந்து தரிசித்தார்கள். சில சமயங்களில் இரண்டு மூன்று தினங்களுக்கு அதிகமாகவே அன்ன ஆகாரமின்றி யோக நித்திரையில் இருந்து எழுந்தபோது சிவராமலிங்க சுவாமிகள், முத்துகுமார் சாதுக்களாகிய மகான்களாலும் ச. காசிவிஸ்வநாத அய்யர் அவர்களாலும் வையாபுரி பா. இராமசாமி செட்டியார் முதலிய பல ஜில்லா புண்ணிய விவேகிகளாகிய அன்பர்களாலும் பூசிக்கப்பட்டு வசித்துவந்தார். பின்னர் சுவாமிகள் சுமார் 40-க்கு மேல் மதிக்கும் வயதில்

ஸ்ரீமுக-ஸு ஐப்பசி-மீ 23உ புதவாரம் புனர்பூச நட்சத்திரத்தில் தொண்டர் மடத்தில் விதேக முக்தியடைந்தார். அன்று சுவாமிகளின் திருவுருவத்தை ஞானிகள் சரீரத்துக்குச் செய்யவேண்டிய முறைப்படி அபிஷேகாதி பூஜைகள் செய்து அலங்காரத்தோடு கோவில் சகடையில் வைத்து தேரோடும் வீதியில் ரெத்தினவேலு சுவாமிகள் மற்றும் அன்பர்கள் தூபதீப கற்பூர தீபாராதனையுடன் மங்களகரமாக கோவிலை வலமாகக் கொண்டுபோய் திருவுளச் சீட்டின் உத்திரவுப்படியே மணிமுத்தா நதிக்கரையின் தென்பாகத்தில் சமாதி அமைத்து லிங்க முதலியவை வைத்து பூஜை நைவேத்தியம் நடந்து வருகிறது.

விருத்தகிரி வடிவான விறையவனும் வாழ்க
வினையனேற் கருள் விருத்தவம் பிகையும் வாழ்க
கருத்திலுற வெனக்கருளும் பிரணவமும் வாழ்க
காரணியை யடையுமடியாரு நனிவாழ்கத்
திருத்தமுடன் தலமுமிகச் சிறப்பதாய் வாழ்க
சேர்த்துறையு மியாவர்களுஞ் செல்வமுடன் வாழ்க
இருத்தியெனை யுமையருள யானுணர்ந்தபடியே
எல்லோரு முணர்ந்து வாடுதலறவே வாழ்க.

இஃது தீனதயாள நாயுடு குறிப்புப்படி இந்த சரித்திரம் ப்ரம்ம மோன முத்துக்குமார சுவாமி சுருக்கமாக எழுதியது.

---

உ
சிவமயம்

நெரூர் P. O. சதாசிவப்ரம்மேந்திர பரம்பரையைச் சேர்ந்த

## ப்ரமமோன நிர்வாண முத்துக்குமார சுவாமி சிஷ்யர்

## மு. சிவராமலிங்க அடிகள் சரித்திரம்.

1915-ஷ ஏப்ரல்-மீ 25உ சென்னை வண்ணையம்பதியில், அடிகள் தேவ பிராமண குலத்தில் உதித்து 11—3—1952 வரை கிருஸ்துவ கல்லூரிலில் எப். ஏ. வரை பயின்று, 21—3—1939 வரை உயர்நீதி மன்றத்தில் டைப் கிளார்க்காக இருந்து 17—3—1940-ல் தம்பி, தங்கை வீடுவாசல், நிலம் மிராசுதாரராயிருந்து எல்லாவற்றையும் விட்டு துறவறம் பூண்டு சுமார் 10 காதத்திலுள்ள சீகாளத்தியில் ப்ரமமோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகளின் பாதாரவிந்தங்களை அடைந்து, மனோ வாக்குகளை சத்தியமாய்த் தத்தஞ் செய்து, சிரவண, மனன நிதித்யாசனங்கள் செய்தும் நாள் ஒன்றுக்கு பதினாயிரத்துக்குக் குறையாமல் ஜெபம் செய்தும், சாதன சம்பத்துடன் குருபக்தியாயிருந்தும் குரு உபதேசம் பெற்று நிஷ்டானுபூதிகை வரப்பெற்று, பண்டரிபுரமும் மற்றும் தென்னகத்திலுள்ள ஒற்றியூர், கழுக்குன்றம், காஞ்சி, அண்ணமலை, தில்லை, திருவாரூர், கும்பகோணம், மதுரை, திருநெல்வேலி, வல்லநாடு, திருச்செந்தூர் முதலிய திருத்தலங்களைத் தெரிசித்து, பூர்த்தியானதும் 22—7—1951ல் பூரட்டாதி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் சென்னை வண்ணையம்பதியில் பரிபூர்ணம் எய்தினார்கள். அவர்களுடைய சமாதிக்கு தம்பி கோ. முத்துகிருஷ்ணன், வீரய்யா ஆகிய நாங்களும், மற்ற சிவனடியார்களும் கலந்து வருடாந்திர குருபூசை செய்து வருகின்றோம்.

11, ஆரணிகெங்கன் தெரு,
வண்ணாரப்பேட்டை,
சென்னை-21.

இப்படிக்கு,
**கோ. முத்துக்கிருஷ்ணன்,**
**வீரய்யா.**
அடியார்க்கடியேம்.

உ

சிவமயம்

நெரூர் சதாசிவப் பிரம்மேந்திர
பரம்பரை ப்ரம மோன நிர்வாண
முத்துக்குமார சுவாமிகள் சிஷ்யர்

## சிவபழனி ஞானி மோக்ஷமடைந்த

# சரித்திரம்

---

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொருளாவது
நாத நாமம் நமச்சிவாயவே.

— திருஞானசம்பந்தர்.

திருச் செல்வமிக்க கண் இமையா விண்ணுலகரும் மண்ணுலகத்தினில் புண்ணிய பத்தினி பக்தர், தத்துவ ஞானியும் விரும்பும் 108 திருப்பதிகள், 1008 சிவாலயமும், மூர்த்தி, தலம், தீர்த்தம், மூன்றும் நிறைந்த இப்பரத கண்டத்தில், அரசம்பலத்தில் அம்பலவாணர் எழுந்தருளி, பட்டிமுனிக்கும் கோமுனிக்கும் நிர்த்தன தரிசனம் கோயம்புத்தூர் ஜில்லா மேலச்சிதம்பரம் என்னும் பேரூரைச் சேர்ந்த காரமடை என்னும் மேலத்திருப்பதிக்கு அருகாமையில், வையம்பாளையம் போஸ்டுக்கு அடுத்த கொண்டயம்பாளையம் கிராமத்தில் தன் முன்னோர்கள் செய்த தவப்பெயனுல் பழனி என்னும் திருநாமத்தோடு வந்துதித்தார். இவர் பூர்வாச்ரமத்தில் ஜீவகாருண்யம், ஈஸ்வர பக்திசெய்து, இல்லறத்தை நல்லறமாக நடத்தி வரும்போது முன்செய்த புண்ணிய நற்பயன் வந்து எய்தலும், அவர் கொண்டயம்பாளையத்திலிருந்து, புறப்பட்டு திருப்பதி தெரிசித்து காளாஸ்தியை அடைந்து, யோக விநாயகர் குகைக் கோயிலில் ஷை முத்துக்குமார சுவாமிகள் முன்னிலையில் இதற்கு முன் சீடரான சிவயோகத்தாயுமானுர் துறவு வந்ததுபோல் இவரும், சாஸ்திர விதிப்படி சமயாதிதீகைஷபெற்று குரு உபதேசித்த

பஞ்சாக்ஷரத்தை, விநாயகர், குருசுவாமி இவர்கள் படங்களை முன்வைத்து, சுமார் ஏழு வருடங்களுக்கு அதிகமாகவே, ஏகாந்த ஸ்தானத்தில் இருந்து, இரவு பகல் கோடிக்கணக்கில் ஜெபம் செய்ததின் பயனால், நித்தியா அனித்தியவஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிசட்க, சம்பத்தி முமூக்ஷுத்வம் சத்திநிபாதம முதலான சாதனங்கள் அடைந்தார். அதன்பின் யாத்திரை, கால்நடையாக விருத்தாஜலம் சேர்ந்து தாத்தாசாமி ஆலயத்தில் திருப்பணி சில நடத்தி வருகையில், சற்குரு. சொப்பனத்தில் தோன்றி, ஸ்ரீ குமார தேவர் மடத்தில் பண்டாரசன்னதியிடம் சென்று கேட்டால் சந்நியாசம் கொடுப்பார் என்று உத்தரவாயிற்று.

> "திருஞான சம்மந்தர் திருவாய் மலர்ந்த
> மஞ்சர் தாமலர் கொடு வானவர் வணங்கிட
> வெஞ்சொலார் வேடரோ டாடவர் விரும்பவே
> அஞ்சொலா ளுமையொடும் அமர்விடம் அணிகலே
> செஞ்சொலார் பயில்தரும் திருமுது குன்றமே."

என்ற பாசுரத்திற்கேற்ப, ஸ்ரீ குமாரதேவர், கன்னட தேச ராஜவம்சத்தில் பிறந்து, இளமையிற் புறப்பட்டு ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகளிடம் திருவடி தீக்ஷை பெற்று, துறவு பூண்டு வரும் வழியில், ஸ்ரீ பழமலைநாதர் தண்ணீர்ப் பந்தல் வைத்து, நால்வகைத் தண்ணீர் கொடுத்து உபசரித்தும், விருத்தாஜலம் அரசமரத்தின் நிழலில் விருத்தாம்பிகை பிராமணத்தி வடிவம் தாங்கி ஞானப் பால் புகட்டியும், பக்தர் ஒருவர் ஸ்ரீ பெரியநாயகிக்கு முன் மண்டபம் கட்டும்போது, துவாரபாலகர்களுக்கு உயிர் கொடுத்து, உத்தர கற்களைத் தூக்கி, முதுகு தேய்ந்திருப்பதைக் காட்டி தவனக்கஞ்சி நிவேதனம் செய்யச்சொல்லியும், கரபாத்திரத்தில் மீன் குழம்போடு பரிமாற, மீன்களுக்கு உயிர் கொடுத்து குளத்தில் குதிக்கும்படி செய்தும், திருவாரூர் தேர்தரிசனத்தில், சுவாமிகளை இரு சைவர்கள், விகடமாக வீரசைவ மருளாட்டத்தைப்பார் என்று சொன்னவுடனே தேர் ஓடாமல் நிற்கும்படி செய்தும், பின் தர்மகர்த்தாவாகிய தஞ்சை அரசன் முதிர்ந்த

விருப்பப்படி வேண்ட, உடனே வடம் பிடியாமல் ஓடி தேர் நிலைக்குவர அருளியும் இதுபோல் அநேக அற்புதங் கள் செய்தும், மகாராஜா துறவு முதலான 17 நூல்கள் திருவாய் மலர்ந்தருளி அநேகம் பேர்களுக்கு அனுக்ரகம் செய்தும் அந்தத்தில் ஸ்ரீ மாணிக்கவாசகர் ஜோதியிற் கலந்ததுபோல் ஸ்ரீ குமாரதேவர் ஜோதியிற் கலந்தார். இச்சிறப்புகள் பொருந்திய குமாரதேவர் மடத்திலிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிவசுப்பிரமணிய பண்டார சந்நதிகளிடம் தனக்கு சொற்பனத்தில் உத்திரவானபடி சிவபழனிசாமி காஷாயம் கேட்க, சுவாமிகள் யோகத்தில் முன்பே தெரிந் திருப்பதால் மடத்தில் செய்யும் முறைப்படி, கும்பம் வைத்து பூஜைசெய்து கும்பகலச தீர்த்தத்தை அபிஷே கம் செய்து அனுக்ரக காஷாயம் பெற்றுக்கொண்டு, முன்பே ஜோதியில் கலந்த மூலஸ்தானத்தில் தீபாராதனை தெரிசித்து விபூதி பிரசாதம் பெற்றுக்கொண்டு, துறவு பூண்டு, விருத்தாஜலம் ஜங்ஷனுக்குச் சென்று தர்ம ரயி லேறி திருவண்ணுமலை, வடதேசம் காசி, ஹரித்துவாரம் ரிஷிகேசம், கங்கோற்பத்தி தீர்த்தங்கள் முதலான இடங் களுக்குச் சென்று தீர்த்தமாடி பூபிரதக்ஷணம் வந்து திருப்பணி செய்த தாத்தாசாமி ஆலயத்தில், விக்னேஸ் வரர், சிவலிங்கம், நந்திகேஸ்வரர், பலிபீடம் முதலானது பிரதிஷ்டை செய்து சர்வசித்தி-ஞு கார்த்திகை-மாதம் 9வ (24-11-47) திங்கட்கிழமை உத்திராட நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் சிவபழனிசுவாமி கும்பாபிஷேகம் முடித்தும், விருந்தாஜலம் ஸ்ரீ ஆழத்துப்பிள்ளையாருக்கு லட்சார்ச்சனை, சிவயோகத்தாயுமானர் பஞ்சாக்ஷரப்படி சிவலிங்கத்திற்கு வருஷா வருஷம் குருபூஜை நடாத்தியும் கும்பகோணத்தில் ஸ்ரீ நாகேஸ்வரர், ஸ்ரீகாசிவிஸ்வநாதர் ஸ்ரீ கும்பேஸ்வரர்கோயில்களில், சந்யாசிகளுடன் யானை யின்மேல் திருமுறைகளை ஆரோகணித்து, மகாமகக் குளம் வலம் வந்து திருநெல்வேலி வல்லநாட்டு சிவராம லிங்க சுவாமி குருபூஜை லக்ஷார்ச்சனை விமரிசையாகச் செய்தும், சுவாமிமலை, திருவலஞ்சுழியில் ஸ்ரீ விநாயக சதுர்த்தி குருபூஜைகள், இதேபோல் விமரிசையாகச்

8

செய்தும், அதன்பயனுக ப்ரம்மமோன நிர்வாண முத்துக் குமார சுவாமிகளிடம் நம்பிக்கை வைத்து, ஆத்தம், அங்கம், தானம், சத்பாவம் பணிவிடை செய்து, மனோ வாக்குக் காயம் இவைகளை தண்ணீர் வார்த்து நிச்சயமாக அர்ப்பணஞ்செய்தபின், சுவாமிகள் திருவடி சூட்டி அஸ்த மஸ்தசையோகம் செய்து சாம்பவி முத்திரை, கேசரி முத்திரை காட்டி, கிருபா நோக்கம் வைத்து சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டி, சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி, அஞ்சக்கரத்தின் அரும் பொருள் தன்னை, நெஞ்சக்கருத்தின் நிலையறிவித்து, நிர்வாண தீக்ஷையும், சிவபழனி சுவாமி என்ற தீக்ஷா நாமமும் பெற்று உச்சிப் பொழுது கைபிச்சையேற்று உண்டு சதா நிஷ்டாபரனுய், 5-முதல் 10-நாட்கள் ஆகாரம், நித்திரையின்றி, உடல் மறந்து, நிஷ்டையிலிருந்தும், தான் மோக்ஷமடையுங் காலம் தனக்குத் தெரிந்து, தாத்தாசாமி ஆலயத்தை மு. சிவ அய்யா மௌன சுவாமியை பாதுகாத்து பூஜை செய்துவரும்படி நியமித்து தான் நிஷ்டையிலிருந்த விருத்தாஜலம் தாத்தாசுவாமி ஆலய நந்தி குகையில் உள் குகை கூலி ஆள் கொண்டு தோண்டுவித்து, குகைக்குள் செல்லும் நாளைக் குறிப்பிட்டு ஸ்ரீ குருநாதனிடம் நிஷ்டையிலிருந்து இனி திரும்பி வாராது என்று தேவங்குடிக்கும் கோயம்புத்தூருக்கும் கடிதம் எழுதச்சொல்லியும், விருத்தாஜல வாசிகளிடம் குகைக்குள் போகிறேன் என்று சொல்லிக்கொண்டும், 25—5—54 (மங்களவாரம்) செவ்வாய்க்கிழமை சதய நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் சிவசாயுச்சியம் அடைந்தார். மறுநாள் உள் குகையில் விபூதியாதிகளால் சிரசை மறைத்து, சிமிண்டு பலகையால் மூடி நந்தி குகையில் திரு உருவப்படம் வைத்து தீபம் ஏற்றி பூஜைசெய்து வருகிரேம். அதற்கு மோக்ஷ தீபம், மண்டலாபிஷேகம், அன்னதானம், மஹேஸ்வர பூஜை முதலியவை சற்குரு கடாக்ஷத்தாலும், சுவாமிகளிடத்தில் உபதேசம் பெற்ற சிரஸ்தார் சின்னத்தம்பி மூப்பனர் போல் துணைக்காரணமாய் புண்ணிய சிந்தனை விவேகிகளின் வாக்கு சகாயத்தாலும், பொருள் உதவி

யாலும், சிறப்பாக நடைபெற்றது. இந்த சரித்திரம் பெரியோர்கள் சொற்படி சிவ அய்யா மௌனசுவாமி சுருக்கமாக எழுதியது. இதை படிப்பவர்கள் தந்தை தாய் ஆவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

திருமூலர்

ஞானத்தின் மிக்க தவநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவான்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே.

சி. தாமோதர சாமியை தாத்தாசாமி ஆலயத்தைப் பாதுகாத்து பூஜை கைங்கர்யங்கள் முதலானதை செய்து வரும்படி பெரியோர்கள் ஆக்கினைப்பிரகாரம் மு. சிவ. அய்யா மௌன சுவாமிகள் நியமனம் செய்திருக்கிறார். அற்பசி-மீ விசாக நக்ஷத்திரம் சிவயோகத்தாயுமானார் குருபூஜை.

குறிப்பு :— குமாரதேவர் சரித்திரம், பேரூர் ஸ்தல புராணம், காரமடைத் தலவரலாறு, சிவராமலிங்க சுவாமி குருபூஜை பத்திரிகை இவைகளைப்படித்தால் முழு விபரம் தெரியவரும்.

நலமல்கு சிந்தையராகி நன்னெறியெய்துவர்தாமே.

1950-ல் குருபூஜை பத்திரிகையில் ரூ. 3001—13—0 என்று குறிப்பிட்டிருப்பது சிறப்பாய் நடந்ததற்கு சான்று.

---

XXXXXX

## சிவபழனி ஞானியார் பூலோக வருகைதந்து அன்பர்க்கருளிய ஜன்ம குறிப்பு,

(ரேகை சாஸ்திரப்படி குறித்தது)

ஸ்ரீ சர்வசித்து-ஹூ புரட்டாசி-மீ 12ம் தேதி செவ்வாய்க்கிழமை ஏகாதசி திதியும் திருவோண நக்ஷத்திரம் கொண்டு ஜெனனம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | ருசி | | சனி செ. ரு. |
| சந். கே, | | | |
| | | கு. | ல சூ பு சு |

ஷ ஞானி சுவாமிகள் 25-5-54 செவ்வாய்க்கிழமை சதய நக்ஷத்திரத்தில் விருத்தாஜலத்தில் ஜீவசமாதி சித்தி பெற்றார்.

---

உ
சிவமயம்

இருபது ஆண்டுகளுக்குமுன் ஒரு சமயம் அடியேனுடைய சிற்றில்லில் பாதம் வைத்து ஆசி அருளியது பிரம்மச்சாரி, ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் ஆவார்கள்.

சுவாமிகளை நான் அன்று பார்த்தபொழுது எனக்கு சேக்கிழார், சிவபெருமான் மானிட வேடந்தாங்கி வந்த காக்ஷியைப்போல இருந்தது. சேக்கிழார் விரிவாக தெரிவித்தபடியே, “அருள் பொழியும் திருமுகத்தில் அணி முறுவல் இளநில வெறிப்ப, மருள் மொழி மும்மலம் சிதைக்கும் வடிச்சூலம் ஒளிவெறிப்ப, பொருள் பொழியும் பெருகனடி தழைத்தோங்கிப் புவியேத்த தெருள் பொழி

வண்டமிழ் நாட்டில்'' வந்தார்கள். சுவாமிகளைப்பார்த்த வுடனே ஒரு கவர்ச்சியும் அன்பும் ஏற்பட்டது. அடி வணங்கினேன். அவர்கள் ஆசி கூறி திருநீறு வழங்கினார்கள். அவர்கள் நிர்வாணமாகவே இருந்தார்கள். அநேக பக்தர்கள் அவர்களை போற்றி வந்தார்கள். அடியேனை 'மஹாபக்தவிஜயம்' என்னும் நூலைப் படிக்கச் சொன்னார்கள். அடியேனும் அந்நூலைப் படிக்கத்தலைப் பட்டேன். மிகவும் தலைசிறந்த நூல். அதில் ஸ்ரீமந்நாராயணன் செய்துள்ள பல அற்புதங்கள் பாகவதத்திலுள் ளவை விரிவாக விளக்கப்பட்டுள்ளது. அதில் புகட்டி யுள்ள நீதி, சீவகாருண்யம் அனுஷ்டிப்பது கடினம்.

சுவாமிகளை அடியேனுடைய மைத்துனர் M. R. சுப் பிரமணிய மூப்பனார் சென்று வணங்கினார். அவர் சுவாமி கள் உத்திரவுப்படி ஸ்ரீ ராமசுவாமி கோவிலில் 'மஹா பக்த விஜயம்' ஒரு பாகவதரைக்கொண்டு படிக்க ஏற்பாடு செய்தார். ஸ்ரீ ராமசுவாமி கோவிலின் பழுதாகியிருந்த கும்பத்தை சரிப்படுத்தி தன் சொந்த செலவில் கும்பா பிஷேகம் செய்தார். அதுசமயம் சுவாமிகள் காக்ஷி கொடுத்தார்கள். சுவாமிகள் பற்றற்றவர்கள். ஆனபோதிலும் குருபக்தியில் சிறந்தவர்கள்.

சுவாமிகள் தன் குருவான சிவராமலிங்க பரம ஹம்சரின் குருபூசையை ஸ்ரீ நாகேஸ்வரஸ்வாமி கோயி லில் வெகு சிறப்பாக அன்னதானத்துடன் நடத்தினார் கள். அப்பொழுது ஒரு அற்புதச்செயல் நடந்தது. திருப் பதிக்குச் சமீபமுள்ள வேங்கடகிரி ராஜாவின் மந்திரி ஸ்ரீ ராமதாஸ் என்பவர் குருபூஜைக்குப் பணம் அனுப்பி யிருந்தார். அந்தப் பணத்தைப் பெற்றுக்கொண்ட கோயில் காரியஸ்தர் கணக்கில் வரவு வைக்கவில்லை. அதுசமயம் சுவாமிகள் உபாசனையில் மனத்தில் தோன்றி கணக்கு சரியில்லை என்று எங்களிடம் ஆக்ஷே பித்தார்கள். நாங்கள் இது என்ன சிறிய விஷயத்தில் மாற்றமாகப்பேசுகிறார்களே' என்று அதை அலக்ஷியமாக நினைத்தோம். ஆனால் ஸ்ரீராமதாஸ் கனவில் சுவாமிகள்

தோன்றியதால் அவரும் ஸ்ரீ நாகேஸ்வரசுவாமி கோயிலுக்கு வந்து தான் அனுப்பிய பணத்தை ஏன் வரவு செய்யவில்லை என ஆக்ஷேபிக்க பிறகு பிழையை உணர்ந்து அவரை சமாதானம் செய்து டிக்கெட் வாங்கி கொடுத்து வேங்கடகிரிக்கு அனுப்பி வைத்தோம்.

சுவாமிகள் பணத்தைத்தொடுவதில்லை, கையெழுத்து செய்வதில்லை, பொய் சொல்வதில்லை, துறவியாக இருந்தாலும் ஆலய வழிபாட்டில் பிரியமுள்ளவர்கள். உலகத்தவர்போல் இரவு பகல் நித்திரை செய்வதை யாரும் கண்டதில்லை. சுவாமிகள் நினைத்த இடம் செல்வார்கள். சிதம்பரம் ஸ்ரீ உமாபதி சிவ மடாலயத்திற்கும், விருத்தாசலம் ஸ்ரீ தாத்தாசுவாமிகள் ஆலயத்திற்கும் போய் வருவார்கள்.

ஒருசமயம் என் மைத்துனர் M. R. சுப்பிரமணிய மூப்பனரின் மனைவிக்கு திடீரென இசிவுவந்த காரணத்தால் பேச்சில்லாமல் படுக்கையாகக் கிடந்தபொழுது டாக்டர்களும் கைவிட்ட சமயத்தில் சுவாமிகள் வந்தார்கள். சுவாமிகள் அந்த அம்மைக்கு விபூதி இடச்செய்து "தாஸர்கள் மஹாபக்தவிஜயம் படித்த பலன் இருந்தால் அம்மை காப்பாற்றலாகும்" என்று திருவாய்மலர்ந்தருளினார்கள். அம்மையார் உடனே வியாதி குணமடைந்து எழுந்தார்கள்.

சுவாமிகளை அன்பர்கள் உண்மையாக நினைத்தால் பிரசன்னமாவார்கள். சுவாமிகளின் குரு சிவராமலிங்க பரமஹம்சர் செய்தருளிய "சிவமஹிம்ந ஸ்தோத்திரம்" என்னும் நூலை உரையுடன் மறுபடியும் அச்சிடவேண்டுமென்றுத் தம் அபிப்பிராயத்தை தருமபுரம் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களிடம் தெரிவிக்க அவர்களும் அன்பு கூர்ந்து அதை அச்சிட்டு அடியேனுக்கு அனுப்ப அவை பக்தர்களுக்கு வழங்கப்பெற்றது.

சுவாமிகளுக்கு சிவ, விஷ்ணு பக்தர்களிடத்தில் சம நம்பிக்கைதான். சுவாமிகள் முன்பு நிர்வாணமாக

இருந்தபொழுது பலர் அதைப் பொறுக்காமல் அவர்களை நிந்தித்தும் கஷ்டப்படுத்தவும் முயற்சித்தார்கள். ஆனால் அவர்கள் பிறகு உண்மைநிலை தெரிந்து மரியாதையுடன் நடந்துகொண்டார்கள். அடியேனுடைய நண்பர் ஒரு முகம்மதிய கனவான் ஆடுதுறை, எம். ஜே. அப்துல்லா என்பவர் சுவாமிகள் உண்மைத் துறவியா, நிர்வாணம் விசேஷமா என்பதை சோதித்தார். அது எங்களுக்குத் தெரியாது. அந்த கனவான், 'சுவாமிகள் பற்றற்ற புலன் அடக்கிய உண்மையான நிர்வாண சந்நியாசிதான்' என உணர்ந்து ஒப்புக்கொண்டு சலாம் செய்து மதித்து நடக்கலானார்.

சுவாமிகள் பக்தர்கள் அனேகருக்கு தீக்ஷை செய்வித்து அனுக்ரகம் பெற்றவர்களுமுண்டு. தூஷித்தவர்கள் நிக்ரகம் அடைந்தவர்களுமுண்டு. சிவபழனி சுவாமிகள் என்பவர் சுவாமிகளின் உபதேசம் பெற்று நிஷ்டாபரனாய் வருஷக்கணக்கில் இருந்தும் குருவினிடத்திலும் மற்ற பக்தர்களிடத்தும் 'ஜீவசமாதி போகிறேன்' என்று சொல்லிக்கொண்டு ஜீவசமாதி அடைந்தார்.

சுவாமிகள் இப்பொழுது தமது சரித்திரத்தை வெளியிட்டிருப்பது எல்லா பக்தர்களுக்கும் ஒரு வழிகாட்டியாகத் திகழ்வதாக.

இப்படிக்கு,

கும்பகோணம்,
13—10—59.

**R. கந்தசாமி மூப்பனார்,** B.A., B.L.,
பெருநிலக்கிழார்.

## சாற்றுக்கவி.

மோன நிருவாண முத்துக் குமாரபர
ஞான குரவன் நயசரிதம்—மானவர்க்குப்
பத்தியும் புத்தியும் பண்பும் இனிதருளிச்
சித்தியும் நல்கும் சிறந்து.

இங்ஙனம்,
தங்கள் அன்புள்ள,
ஜெகவீரபாண்டியன்.

உ
திருச்சிற்றம்பலம்.

"நின்றார் இருந்தார் கிடந்தார் எனவில்லை
சென்றார்தம் சித்த மோன சமாதியாம்
மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு
சென்றுங் கணைந்தவர் சேர்கின்ற வாறே"

திருச்சிற்றம்பலம்

— திருமந்திரம்–2936.

---

சிவபெருமான் அருளிச்செய்த வேத சிவாகமங்களில் கூறிய சீவன் முத்தர் நிலையையும், சாமு சித்த நிலையையும் உலகம் அறிந்துய்யுமாறு அவ்வப்பொழுது பெரியோர் பலர் தோன்றி நம் கண்முன்னே உலாவுவர். காலத்துக்குக் காலம் மாறிவரும் இயல்புடைய உலக மக்களிடையே நல்லோர் தோன்றிப் பக்தி நிலையையும், ஞானயோக நெறிகளையும், சரியை கிரியா மார்க்கங்களை அநுட்டித்துக் காட்டாமற்போயின் அவை நிலைபெறா. ஆகலின், சிவபெருமான் நம்மீது வைத்த பெருங்கருணையாலே சீவன் முத்தர் நிலையிலுள்ள பெரியோர்களையும் நம்முடன் கலந்து உறவாடச்செய்து நம்மை உய்யக் கொள்ளுகின்றார். இந்த நிலையிலேதான் இப்போது நம்

மிடையே உலாவி நன்னெறி காட்டுபவர் சீவன் முத்தர் நிலேயில் உள்ள ஸ்ரீமத் முத்துக்குமார சுவாமிகள். இவர்கள் சுமார் 30 ஆண்டுகட்கு முன்பு தலயாத்திரை யாக வந்தபொழுது ஆலங்குடி என்னும் இரும்பூளைத் தலத்திலே இவர்களைத் தரிசிக்கும் பெரும் புண்ணியத் தைப் பெற்றேன்.

இவர்களுடைய புன்சிரிப்பும், சாந்தநிலேயும், பூரண மான துறவு நிலேயும் எவரையும் வசீகரிப்பது போலவே அடியேனையும் வசீகரித்து அவர்கள் வசமாக்கின. அதன் பின் 1945 ஆண்டிலே நடந்த மகாமக விழாவின்போது குடந்தையில் பொற்றாமரை வடகரையிலே ஸ்ரீ சிவகுருச் செட்டியார் இல்லத்தில் இருந்தகாலத்து ஏதோ என்னைப் பெயர் சொல்லக்கேட்ட இந்த மகான் வலிந்து தரிசனம் தந்தருளினர். 'சொல்லால் மௌனமென்றே சொல்லிச் சொல்லிக்கொண்டவர்கள் போலாது, மனமறப் பூரண நிட்டையில் வாழும் நமது முத்துக்குமார சுவாமிகள், முன்பு செய்தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட' மூர்த்தி தலம் தீர்த்தம் முறை யாய்த் தொடங்கினதன் பயனுகக் குருவருள் சித்திக்க இன்று சிறந்த நிலேயிலே நம்முன் காட்சி தருகின்றார் கள். 'திரிதரு முலகத்து அரிதொரு ஞானி' என்பர் பெரியோர்.

இத்தகைய ஞானிகள் எப்பொழுதோ எங்கேயோ தோன்றியருளுவர். 60 ஆண்டுகளின் முன்பு இக் குடந் தைப் பெரு நகரத்திலே 25 ஆண்டுகள் சலியாத துரியா தீத நிலேயிலிருந்து அருளிய ஸ்ரீ மௌன சுவாமிகள் நிலேயினை அப்பொழுது தரிசித்துய்ந்த பெரியோர் பலர் அறிவர். அத்துவிதமாய் அறிவுக்கறிவாயிருந்து ஆனந் தத்தினை விளைவிக்கும் முதல்வனை யறிந்து அநுபவ வாயிலாக நின்று காட்டும் ஸ்ரீ சுவாமிகள் சுயசரிதம் ஆன்மாக்கள் அறிந்துய்யுமாறு அன்பர் பலர் வேண்டு கோளால் எழுதுவிக்கப்பட்டு வெளிவருதல் இந்தத் தமிழ்நாடு செய்த நற்றவமேயாம் என்பதில் ஐயமில்லே.

9

ஸ்ரீமத் சுவாமிகள் இப்பெரு நிலையையடைய எப்படி எப்படியிருந்து முயன்ருர்கள் என்பதும், இறைவனருளால் அவர் காட்டிய சித்தி நிலைகளும் விரிவாக நாம் அறியக்கிடக்கின்றது. வித்தியாகுரு, ஞானகுரு, அடியார்கள், தாய்தந்தையர் முதலிய பெரியோர்களிடம் நாமெல்லாம் எவ்வாறு நடந்து அவர்கள் ஆசிகளைப் பூரணமாய்ப் பெற்றுய்யவேண்டும் என்பதைத் தம் வரலாற்று முகமாக நமக்கு உபதேசிக்கின்ருர்கள் ஸ்ரீமத் சுவாமிகள்.

ஆகலின், சன்மார்க்க நிலையை அடைய விரும்பும் மக்களுக்கெல்லாம் இது பெரிதும் பயன்படும் என நம்புகிறேன்.

இங்ஙனம்,
சித்தாந்தசைவமணி
ஆதீன வித்துவான்,
**த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை.**

---

உ

ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள்மீது இயற்றப்பட்ட

## துதி அகவற்பா.

---

நாவலந்தீவினில் ஓவலில் வளமுறும்
சேணுட்டவரும் திருவுறப் பராவுறூம்
வளநா டதன்மிசை மன்னிய கரூரின்
தென்கீழ்த் திசையின் திருவமர் நெரூரில்
சதாசிவப் பிரமத் தவநெறி
பரம்பரைவந்த திரம்பெறுவல்ல
நாட்டு இராம லிங்கச்சிவநாமம்
பூண்டுள வடிகளார் வேணடியாட்கொள்
முத்துக்குமார அத்துவித மூர்த்தி
இத்தலத் தமர்ந்த மெய்த்தவத் துறவியாய்
அன்பர் பலர்க்கும் அருள்புரிந் தருளும்
வண்மைதன்னை வாய்மையோடு புகழ்வோர்

எல்லா நலமும் இயலுற வெய்துவர்
அம்மெய்த் துறவியாம் அடிகளார் உண்மை
வரலாறென்றெண்ணும் வளமிகு நூலினைக்
கண்டேயுலகங் கவினுறக் கொண்டு
அம்மையப்பன் அருட்பெருக்கதனுல்
உய்கவென்றே உவப்பொடு துதிக்கவல்ல
இம்மெய்யடியர்தம் எழிலார் புகழும்
நிலமெலாம் நிமிர்ந்து நின்றருள் புகவென்று
உள்ளியுருகி மன்னிவாழ்த் துவனே.

இங்ஙனம்,
பண்டித வித்துவான்,
**இராம. கோவிந்தசாமி பிள்ளை,**
தமிழாசிரியர்,
திரு. சரசுவதி மால் நூல் நிலயம்.

தஞ்சாவூர்,
21—11—59.

---

உ

குடம்பகோணம் சித்தவைத்திய கற்பகம், G. சுப்பையா எழுதிய

## சிறப்புரை.

சீராருஞ் ஞானச் சிற்சபையின் பொற்சபையில்
பேராருஞ் சோதிப் பெருமானர்—ஏருருங்
காட்சியதைக் கண்டு கலந்த அறிவானந்த
மாட்சி யுறுஞ் சீடர் இவர். (1)

சிவராம லிங்கனும் செய்பரம ஞர்பால்
சிவபோக தத்துவத்தைத் தேர்ந்துணர்ந்து–பவமகற்றும்
மூன்றெழுத்தும் ஓர்ந்த மோனமுத் துக்குமார்
ஞானிநிரு வாணியா னுன். (2)

இன்னர் மகிமையதை இயம்ப எளிதாமோ
பொன்னர் சிமிளியிற் புனுகுபோல் – எந்நாளும்
மாராபல் நிற்கும் மணம்போலச் சான்ருேர்க்குத்
தாராள ஞானந் தரும். (3)

தொண்டர் தம் பெருமையை சொல்லவும் பெரிதே.

---

உ

ஸ்ரீ ஆயத்துறை விநாயகர் துணை

## திருமூலர் – திருமந்திரம்.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே.

ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகளை என் மாமனுர் குப்புசாமி செட்டியார், பிரமசாரி தவச் சிரேஷ்டர் என்று அவர்களை வந்தனை வழிபாடு செய்து, ஆசீர்வசனம் பெற்று, அவர்கள் திருநோக்கப்படி தேவாரம், திருவாசகம், மகாபக்தவிஜயம் முதலிய நூல்களையும், பத்தினி பக்தர்தத்துவ ஞானிகளைக் கூறும் சச்சிதானந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய நூல்களையும் "காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது" என்ற தேவார இலக்கணத்திற்கேற்ப சீடாசாரப்படி சிரவணஞ் செய்து கொண்டிருப்பார்கள்.

சுவாமிமலை சச்சிதானந்த சுவாமிகள் திருமடாலயத்திற்குப் பிரதிமாத உத்திர நக்ஷத்திரத்தின் குருபூஜைக்கு நானும் குப்புசாமி செட்டியாரும் சென்று வழிபாடு நடத்துவது வழக்கம். அங்கே நமது சுவாமிகள் எங்கள் பெரிய தந்தையார் அ. சு. கனகசபை செட்டியாரும் நானும் செய்துகொடுத்த குகை ஆஸ்ரமத்தில் அநேக நாட்கள் தியானத்தில் ஆழ்ந்துவிடுவார்கள். அங்கே தமது குரு சிவராமலிங்க சுவாமிகள் குருபூஜையை பல விடங்களில் நடத்தியதைப்போல் விசேஷமாக நடாத்தி அடியார்கட்கு வேஷ்டி, அறுசுவை உண்டி முதலியவற்றை அன்பர்களைக்கொண்டு வழங்கினுர்கள்.

மு சிவ ஈசான சாமிநாதன் என்னும் தீட்சாநாமம் பெற்று, அவ்விடம் தான் சிஷ்யராகி, உபதேசங்கேட்டு, ஜெபதபங்கள் செய்து, சிரவண மனனம் செய்து, அவர் மதராஸ் வண்ணையம்பதியில் மு. சிவராமலிங்க அடிகள் சமாதியின் பக்கம் சமாதி கொண்டருளினர்கள். சுவாமிகள் சச்சிதானந்த சுவாமிகள் மடத்தில் வித்தக விநாயகக் கடவுளைப் பிரதிஷ்டை செய்வித்தும் விநாயகருக்கு சதுர்த்தி உத்சவம் பல அன்பர்களைக்கொண்டு செய்வித்தும் விநாயக புராணம் படிக்கச்செய்தும், பூர்த்தி விழா யானைமேல் ஆரோஹணித்து, அடியார்களுடன் திருவலஞ்சுழி வெள்ளைப்பிள்ளையார் கோயிலை வலம் வந்து விசேஷமாக நடைபெற்றது. அவ்விடம் மகாசிவ ராத்திரி காலங்களில் கபிஸ்தலம் இரத்னசாமி பிள்ளை முதலிய அன்பர்கட்கு, பாலசுப்பிரமணிய சிவாச்சாரியாரைக் கொண்டு, தீக்ஷை செய்வித்து நல்வழிப்படுத்தியருளினர்கள்.

அவ்விடம் நாங்கள் சச்சிதானந்த சுவாமிகட்கு ஆண்டு குருபூஜை பிரதி கார்த்திகை-மீ உத்திர நக்ஷத்திரத்தில் நடாத்தும்போது சுவாமிகள் எங்கள் நாகப்பட்டிணம் அன்பர்கள் முதலியவர்களுடன் தங்கள் அன்பர்களையும் உடனிருந்து தெரிசனம்கொடுத்து குருபூஜை விழாவை மிகப்பொலிவுடன் அடியார்கள் பலர்சூழ நடத்தி வைத்த காக்ஷி கயிலைக் காட்சிபோல் என்றும் மனத்தை விட்டகலாது நின்று விளங்கிக்கொண்டிருக்கிறது.

சுவாமிகள் பல அற்புத நிகழ்ச்சிகளைச் செய்தருளினர்கள். ஒரே சமயத்தில் குடந்தையிலும் சுவாமிமலையிலும் காட்சியளித்தார்கள். அவ்விடம் வரும் பக்தர்கள் சுவாமிகளை நம்பிக்கையோடு தெரிசனம் செய்து, வியாதி முதலியவற்றினின்றும் நீங்கிச் சந்தோஷமடைந்தார்கள். (விரிக்கிற் பெருகுமாதலால் விரிவாக சரித்திரத்திற் காண்க) என் மாமனர் குப்புசாமி செட்டியார் அவர்களின் கனவில் தோன்றி சச்சிதானந்த சுவாமிகள் மடத்திலுள்ள வித்தக விநாயகருக்கு சஹஸ்ரநாமார்ச்சனை

பூசகர் சொல்ல வில்வார்ச்சனை, தன் கையால் அருச்சிக்க அவர்களும் செய்து இறைவன் திருவடி அவர்கள் எண்ணியவாறு அடைந்தது மிகவும் போற்றற்குரியது.

சுவாமிகள் நாங்கள் நினைக்கும்போது வந்து காட்சி யளிக்கின்றார்கள். அவர்கள் சுயசரிதத்தைப் படிக்கும் அன்பர்கட்கு அது ஒரு ஞான சூரியனாய் விளங்கும் என்பது திண்ணம். சுவாமிகள் நோட்டு முதலியன கையால் தீண்டாத வைராக்யத்தால், எனக்கும் என் தம்பி சிரஞ்சீவி சொக்கலிங்கத்திற்கும் இந்தச் சரித்திரம் அச்சுப் போடுவதற்கு உடனிருந்து நடத்தும் கைங்கர்யம் கிடைத்தது எங்கள் முன்னோர்கள் செய்த தவப்பயனே யாகும்.

" திடஞானி தெரிசனமே தீர்த்தமாடல்
திடஞானி தெரிசனமே செபதபங்கள்
திடஞானி தெரிசனமே செயும்அறங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக்காணல்
திடஞானி தெரிசனமே சிவத்தின்சேவை
திடஞானி தெரிசனமே திரிவிதமாம்
உலகத்து அரிதாம் யார்க்கும் " என்பது ரிபு கீதை.

பத்மநாபந்தெரு
கும்பகோணம்
1—1—60

இங்ஙனம்,
அ. சு. ச. மகாலிங்கம் செட்டியார் & பிரதர்,
ஷராப்புக்கடை,

———

உ

ஔவையார் அருளிச்செய்த

# விநாயகர் அகவல்.

மூஷிகவாஹன மோதகஹஸ்த
சாமரகர்ண விளம்பிதசூத்ர
வாமனரூப மஹேஸ்வரபுத்ர
விக்நவிநாயக பாத நமஸ்தே.

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலவிசை பாடப்
பொன்னரைஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சு கரமு மங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணு மும்மதச் சுவடும்
இரண்டு செவியு மிலங்குபொன் முடியுந்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புத நின்ற கற்பகக் களிறே
முப்பழ நுகரு மூஷிக வாகன
இப்பொழு தென்னை யாட்கொள வேண்டித்
தாயா யெனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்க மறுத்துத்
திருந்திய முதலைந் தெழுத்துந் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தெ னுளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திரமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே

## XXXXXXXII

உவட்டா வுபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் றன்னை யடக்கு முபாயம்
இன்புறு கருணை யினிதெனக் கருளிக்
கருவிக ளொடுங்குங் கருத்தினை யறிவித்
திருவினை தன்னை யறுத்திருள் கடிந்து
தலமொரு நான்குந் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்க மறுத்தே
ஒன்பது வாயி லொருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை யடைப்பதுங் காட்டி
ஆரு தாரத் தங்குச நிலையும்
பேரு நிறுத்திப் பேச்சுரை யறுத்தே
இடைபிங் கலையி னெழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனை கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பி ளுவி லுணர்த்திக்
குண்டலி யதனிற் கூடிய வசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலா லெழுப்புங் கருத்தறிவித்தே
அமுத நிலையு மாதித்த னியக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தி னீரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தி னுறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமும் சதுமுக சூக்கமும்
எண்முக மாக வினிதெனக் கருளிப்
புரியட்ட காயம் புலப்பட வெனக்குத்
தெரியெட்டு நிலையுந் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி யினிதெனக் கருளி
என்னை யறிவித் தெனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கு மனமு மில்லா மனோலயந்
தேக்கியே யென்றன் சிந்தை தெளிவித்

XXXXXXXIII

திருள்வெளி யிரண்டுக் கொன்றிட மென்ன
அருடரு மானந்தத் தழுத்தியென் செவியில்
எல்லை யில்லா வானந் தம்மளித்
தல்லல் களைந்தே யருள்வழி காட்டிச்
சத்தத் தினுள்ளே சதாசிவங் காட்டிச்
சித்தத் தினுள்ளே சிவலிங்கங் காட்டி
அணுவிற் கணுவா யப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தி னரும்பொரு டன்னை
நெஞ்சக் கருத்தி னிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.

சுபம்.

---

உ
சிவமயம்

## ஸ்ரீ சபாநாதர்பேரில் பாடிய முத்துத்தாண்டவர் கீர்த்தனை

---

இ-ம்-ஆகிரி-ஏகதாளம். பல்லவி

மாணிக்கவாசகர் பேரெனக்குத்தர வல்லாயோவறியேன்

அநுபல்லவி

காணிக்கையாகக் கொடுத்தேனுனக்கென்னை
ஆணிப்பொன்னேதில்லை வம்பலவாணா (மாணி)

சரணங்கள்

1. நோயும்வருமையுஞ் சண்டையிடாதே
நோக்கரைநோக்காக நோக்கிவிடாதே
சாயுந்தருமஞ் சலித்துவிடாதே
சந்தியில் வையாதே
ஆயுமிளம்பிறை சூடியமூர்த்தி
யத்துவிதமூர்த்தி புத்தியளித்து
தீயும்மறுமை யெதிர்நின்றுதள்ளுஞ்
சிற்சபைமந்திர சிதம்பரதேவா (மாணி)

2. கட்டிலைவிட்டுக் கிடத்துமென்னுதே
காலைக்கரங்களை கட்டுமென்னுதே
கொட்டிமுழக்கிட்டு கூகூவென்னுதே
தோரணிகொள்ளாதே
யெட்டியொருவர் புலம்பவராதே
ஏழைப்பிணத்தை யெடுமென்றிடாதே
சிட்டர்தொழுந்திரு கட்டளைமேவுஞ்
சிதம்பரதேவா திருநடராயா (மாணி)

3. கட்டையின்மேல்வைத்துச் சுட்டுவிடாதே
கள்ளக்குழியிற் புதைத்துவிடாதே
பட்டும்பணியுந்தரித்தயலோர்வந்து பாலள்ளிக்குத்தாதே
கிட்டியொருவர் சடங்குசெய்யாதே
கேட்டவரெல்லாங் கிடைக்கத்தகுமென்னச்
சிட்டிப்பவன்பணிசிற் சபையில்மேவுஞ்
சின்மயரூபா சிதம்பரநாதா (மாணி)

4. அப்பர்லிங்கத்தடைந்தன ரென்றுமாரூரர்
வெண்கரி யேறினரென்று
செப்பரியதிரு ஞானசம்பந்தர்
தேசுடன் சென்றுரென்றும்
இப்படியென்னை யலைத்துவிடாதே
எம்மானிருந்தபடியே விருந்திடச்
செப்பவருவீர் நடம்புரிமேவுஞ்
சிதம்பரதேவா சிவகாமிநேயா (மாணி)

5. சுற்பர தற்பரமெய்ப் பொருளுங்கண்ட
சித்தரெல்லோரும் நிறைந்து தெரிசிக்கத்
தற்பதமாம்நாலாஞ் சத்தினிபாதமுஞ்
சாயுச்சியமும் பெறவே
பொற்பூமாரியிமையோர் சொரிந்திடப்
பொன்னுசலாடுந்திரு வாதிரைநாளிற்
கற்பூரதிபம்போ லென்றனுடலைக்கனகசபையிற்
கலந்து கொள்வாயே. (மாணி)

ஸ்ரீ சபாநாதர்பேரில் பாடிய முத்துத்தாண்டவர் கீர்த்தனை முற்றிற்று.

---

ஸ்ரீ முருகன் அச்சகம், கும்பகோணம்.

TRANSLATION OF

## SRI R. KANDASWAMY MOOPANAR'S TRIBUTE TO THE SWAMIJI.

---

It was my good fortune and privilege, indeed it was that venerable monk and august personality Sri Brahmachari Brahma Mona Nirvana Muthukumara Swami stepped into my humble house on one fine morning twenty years back and blessed me. Believe it or not, when I saw him that day he verily looked to me like Lord Shiva in human form as portrayed by the poet Sekkizar in his famous book 'Peria Puranam'. As the poet described HIM in detail, this Saint in his lordly appearance with his grace-effluent beautiful smiling face shedding cool moonest lustre all around, his persuassive words like a shining spear destroying the three evil passions (*i. e.*, self-importance, delusion and lust) walked into this enlightened and fertile Tamilnad in order to elevate this world by delivering the goods. On sight of him I was drawn to him with great affection and respect. I prostrated before him obeisantly. He blessed me and caused the sacred ash given to me. He was indeed stark naked. Countless devotees fed him and applauded him. When he saw me he asked me to read the book called 'Maha Bhaktha Vijayam'. I purchased that book and started reading the same. It is a welknown devotional book. It contains several wonders and miracles wrought out by Lord Sri Man Narayanan in those days; they are all described in detail.

The Swamiji asked my brother-in-law Subramania Moopanar to have the book 'Maha Bhaktha Vijayam' read out and through, at the Sri Ramaswamy Temple by a Bhagavathar (a special Vaishnevite devotee) and celebrated the completion ceremony in a grand manner. The said Subramania Moopanar put the Kumbam (Canopy-top) of the Sri Ramaswamy Temple in good repair at his personal

expense and celebrated the sacred bathing ceremony of the same. The Swamiji was, condescendingly in his infinite affection, present at this function and indeed his lordly appearance was a divine spectacle to the people.

The swamiji is a desireless detached personality nevertheless he is strong in his respect and devotion to his (Master) Guru. He celebrated the death anniversary of his Guru Sri Sivaramalinga Paramahamsa at the Sri Nageswara Swami Temple in a very grand manner. At that time a miracle happened. Sri K. Ramadoss, the Minister of Raja of Venkatagiri had sent the Swamiji some contribution in money for the Annivarsary. The employee of the Temple who received the money did not credit it in the Account. It occurred to the Swamiji in his meditation that something was wrong with the Account and he protested accordingly. We took his protest and doubt lightly thinking that the Swamiji was unneccessarily particular in small things. The Swamiji appeared in the dream of Sri Ramadoss and he in consequance came to the Sri Nageswara Swami Temple and protested why his contribution had not been given credit, where upon a settlement was arrived at and that person was given a ticket and sent back with blessings. The Swamiji wont touch money, nor will he put in his signature. He will not speak untruth. Though he is an ascetic still he is fond of temple worship. Nobody ever has seen him sofar sleeping like a man. The Swamiji will go to any place at will. The Swamiji used to go to both the Sri Umapathy Siva Mutt at Chidambaram and the Sri Thattha Swami Temple at Virudachalam.

On one occasion when Subramania Moopanar's wife fell ill suddenly with fits, chill and unconsciousness lying in bed dangerously, her doctors too gave up hope, at that time the Swamiji went there. He said if that lady was smeared with the Viboothi (Sacred ash) and the sacred book 'Maha Bhaktha Vijayam' was read out by sincre devotees than she would be saved. Accordingly she recovered and got back to her normal health.

If pious persons honestly think of the Swamiji he will appear before them. The Swamiji expressed to me his desire to have his book Guru Siva Ramalinga Swamigal's Siva Mahimna Prayer with meaning to be printed again and on my submitting the same to His Holiness Maha Sannithanam of Dharmapuram he kindly printed the book and sent copies of the same to my house which I distributed gratis to many a devotee.

The Swamiji has equal affection for both Siva and Vishnu devotees. When the Swamiji was moving about fully naked before, many impatiently condemned it and even treated him with indifference. My good friend Mr. M. J. Abdulla, a land-lord of Aduthurai tested the Swamiji to find out if there is a genuine ascetic and if there is any significance in his nakedness of body and we did not know about the test. After the test he, Mr. M. J. Abdulla came to the conclusion that the Swamiji is a great Sannyassin, naked in body with remarkable control over his senses and desires; and since then he respected the Swamiji offering his sincere salutations (salams) to him.

Many devotees have been benefitted by the Swamiji's instruction and blessings in Panchatsara, Ashtashara and yoga Asanas. There are persons also punished for having called names.

The Swamiji's deciple Siva Palani Avergel is a great soul. He received the swamiji's instruction, stayed in a state of unconscious bliss without food or sleep for ten days and then woke up to life. For about a year he was two to four days a week awake and the rest in meditation, then he informed the Swamiji and other devotees that he was going into the cave for attaining the eternal bliss, so saying he ceased to live one day thus going to the Heaven.

The Swamiji presently publishes his biography. Many truths are imbedded in it. May that book shine as a sacred guide to the God-fearing pious people in the world.

Kumbakonam,
13—10—59.

R. KANDASWAMY MOOPANAR,
B. A., B. L.

THE FOLLOWING IS FROM

MR. L. NATARAJAN, J. P.,

*( Assistant Public Trustee, Penang. Retd. )*

"GANDHI HOUSE"
8, Umayal Road, MADRAS-10.
Dated 8—1—60.

My late eldest sister Mrs. Bappu Kothandapany Moopanar became a widow in her thirties in 1920 perhaps by divine will only to become ardent devotee of the present Swamiji Sri Bramachari Brahma Moona Nirvana Muthucumara Swami. I was 20 then, living under the care of my sister. I did not understand their long philosophic conversation but I developed a great attraction and admiration for the Swamiji inspite of his full naked body and my youthful questioning modern mind. I missed the Swamiji for about 30 years when I was absent in Malaya and my fortunate destiny united me again with him since my retirement in 1954 through the good offices of my brother-in-law Sri R. Kandaswamy Moopanar B. A. B. L., Kumbakonam.

When I first saw after an interval of thirty years, I hardly recollected him but he struck me Lord Shiva Himself has come down to Earth in human form to redeem this doubtful and drifting world. He was stark naked and it was not in any way repugnent to me, on the contrary it added more grace to saintly perfection and it looked to me also, on a little reflection, he is great only because of such determined nakedness. I did ask him why he adopted nakedness and he replied that question does not arise to him because, to him this world is full of mothers. By a quear effect his naked form only inspired men and women to holy and sublime thoughts, such is the purity of his flawless looks and towering divine personality. His child-like innocense, motherly affection, paternal care, friendly disposition Gandhian simplicity, Vivakananda's learning and Ramakrishna's greatness are proverbial. One loves to see him, hear him again and again, he is such an irresistable personality. My Namaskarams to him.

**L. Natarajan.**

உ

சிவமயம்

# முன்னுரை

திருச்சிராப்பள்ளி ஜில்லா கரூருக்கு அடுத்துள்ள நெரூர் சதாசிவ ப்ரமேந்திரர் பரம்பரை திருநெல்வேலி ஜில்லா வல்லநாடு அறிவானந்தர் சீடர், சிவராமலிங்க பரமஹம்சருடைய சிஷ்யர், கலைவாணி ஞானவாணி யருளால் மெஞ்ஞானம் பெற்ற பெரியார், ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமாரசுவாமிகள் திவ்ய சரித்திரச் சுருக்கம்,

கோயம்புத்தூர் ஜில்லா வையம்பாளையம் P. O. ஜானவிநாயகம், சீனிவாசலு முதலிய பலவூர் பக்தர்களாலும் சுவாமிகளிடம் கேட்டு, அறிந்து எழுதிவைத்திருந்த குறிப்புகளைக்கொண்டு, திருவையாறு அரசர் கல்லூரி ஆசிரியர் ராம. கோவிந்தசாமி பிள்ளையாலும் மற்றுமுள்ளோர் களாலும் எழுதப்பட்டிருக்கிறது. அ. சிவராமலிங்க பரமஹம்சர், சிவ தாத்தாசுவாமிகள், மு. சிவராமலிங்க அடிகள், மு. சிவயோகத்தாயு மானுர், மு. சிவபழனி ஞானி, மு. ஈசானசாமிநாதன், சி. ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் சரித்திரச் சாரங்களும் இப்பாயிரப் பகுதியில் இடம்பெறக் காணலாம்.

### பரப்பிரம்ம துதி—காப்பு
### அறுசீர் விருத்தம்

சீரார்நெஞ் சினராற்றுஞ் செபக் கோவை தனைச்சூடுந் தேவதேவை
பாராதி பஞ்சகர்த்தர் பகுதிபவ நெறிக்கிடமாம் பரமான்மாவைப்
பேராதி யிலகோவை மனச்சோர்வை யகற்றும் பரப்பிரம்மசேவைத்
தூராதி தூரமெனு மகப்பார்வை தரும் வாழ்வைத் தொழுதல் செய்வாம்.

—பக்தவிஜயம்.

### கணபதி வணக்கம்

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு. —ஔவையார்.

### அதிகாரி—சம்பந்தர்பண்—கொல்லி

பித்தனைப் பிரமாபுரத்துறை பிஞ்ஞகன்கழல் பேணியே
மெய்த்தவத்துநின் றோர்களுக்குரை செய்துநன்பொருள் மேவிட
வைத்தசிந்தையுள் ஞானசம்பந்தன் வாய்நவின்றெழுமாலைகள்
பொய்த்தவம் பொறிநீங்க வின்னிசை போற்றிசெய்யும் மெய்ம்மாந்தரே.

## காயத்திரி துதி

அறுசீரடி ஆசிரியவிருத்தம்

ஹரியெழுத் தறியா நாயேன் றனைத் தடுத்தாட்கொள்வானை
அருமறையாக மத்தோ டனந்த சாத்திர மானுனைப்
பிரமனுர்நாக் குற்றுளைப் பிரியலீலையை யாண்டானை
எரியுறு தரும்பச்சோலை யாகிறுட்கிணக்கஞ் செய்வாம்.

—பக்தவிஜயம்.

## பட்டிணத்துப்பிள்ளை—கட்டளைக்கலித்துறை

நல்லாரிணக்கமு நின்பூசை னேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள தோவக மும்பொருளும்
யில்லாளுஞ் சுற்றமும் மைந்தரும் வாழ்வு மெழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே.

## சாந்தலிங்கசுவாமிகள் அருளியது

போற்றி நீறணிந் துருத்திர சாதனம் பூண்டிடைந்தெழுத்துள்ளே
சாற்றுக் குரு வாதிமூ வுருவையுந் தாழ்ந்திறைஞ்சிவைசெய்தால்
மாற்ற லாம் பிறப் பிறப்பினை நெஞ்சமே மன்றுளாடிய தாளும்
தோற்று முள் ளொளிக் குள்ளொளி யாயதைத் தொழுது
[வாழ்தலுமாமே.

## குரு துதி

இரட்டையாசிரியவிருத்தம்

தானந்தவத்தின் மிகுஜீவ காருண்யமுஞ் சாந்தமுஞ் சரிதையென்றும்
தத்துவமுணர்த்து மருளாரியர்க்குப் பணிகடாஞ்செய்தல் கிரியை
யென்றும்
ஞானந்ததும்புமறி வினையறிந்தருணெறியை நாடலுயர் யோகமென்றும்
நாதனருளாலறிவு நானெனத்திடமதாய் நம்பன்மிகு ஞானமென்றும்
ஆனந்தமாமெனக் கிடர்பிறப்பில்லையென் றறிவதே நிஷ்டையென்றும்
ஆகமிந்த்ரியகரண கருமமறிவாமெனக் கணுகாதெனத் தெரிந்தே
மோனந்தனைப் பெற்றுயா தொன்று நாடாதமோனமுயர் சகசமென்றும்
முத்திமுடிவருள் ஞானமாது முத்துப்பிரம முத்தனை யகத்துள்
வைப்பாம்.

—பக்தவிஜயம்.

## நாட்டுச்சிறப்பு

### ப்ரம்மமோன நிர்வாண முத்துக்குமாரசுவாமிகள் அருளியது

அறுசீர் விருத்தம்.

நீரெலாங்கமழும் வாசம் நிலமெலாங் கழநீர் நீபம்
பேர்சிவ ராமலிங்கம் பெண்களோ தெய்வ மாதர்



ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள்

ஊரெலாஞ் சிவராம பக்தர் வுண்பதோ சம்பாச்சாதங்
கார்மிகுங் கொங்கு நாட்டைக் கனவிலுங்கருதல் நன்றே
கார்கொண்ட தொண்டை நாட்டைக் கனவினுங் கருதல் நன்றே
கார்தவழ் சோழநாட்டைக் கனவிலுங் கருதல் நன்றே
கார்பெறும் பாண்டி நாட்டைக் கனவிலுங் கருதல் நன்றே
கார்படர் சேரநாட்டைக் கனவிலுங் கருதல் நன்றே.

## குருவருள் வேண்டல்—திருப்பதி

தந்ததன தத்ததன
தந்ததன தந்ததன
ஐங்கரனை யொத்தமன
அந்திபக லற்றநினை
அம்புவித னக்குள்வளர்
அன்பொடுது திக்கமன
தங்கியத வத்துணர்வு
சந்திரவெ ளிக்குள் வழி
தண்டிகையெ னப்பவிசு
சம்பரமவி தத்துடனே
மங்கையர் சுகத்தைவெகு
முன்றனெகி னைத்தமைய
மண்டலிக ரப்பகலும்
வந்தணைசு புத்தியினை
கொங்கிலுயிர் பெற்றுவளர்
கொண்டு உடலுற்ற பொரு
குஞ்சரமு கற்கிளைய
கொங்கணகி ரிக்குள்வளர்

தந்ததன தத்ததன
தன தாந
மைம்புலனகற்றிவ்ளர்
வருள்வாயே
செந்தமிழ்வழுத்தியுனை
மருள்வாயே
தந்தடிமை முத்திபெற
யருள்வாயே
லெண்டிசைசம திக்கவனர்
யருள்வாயே
விங்கிதமெனுற்றமன
வருள்வாயே
வந்தசுயரகைஷுபுரி
யருள்வாயே
தென்கரையில ப்பரருள்
ளருள்வாயே
கந்தனெனவெற்றிபெறு
பெருமாளே.

## சம்பந்தர் தேவாரம்—பண் நட்டபாடை

அருநெறிய மறைவல்ல முனியகன் பொய்கையலர்மேய
பெருநெறிய பிரமாபுரமேவிய பெம்மானிவன் றன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்த னுரைசெய்த
திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தலெளி தாமே.

### நூல்செய்த காரணம் :

ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமாரசுவாமிகள் வரலாறு யாதென உலகியல் மனிதர்கள் வினவியதற்கு கூறியது:—

*துறவற நல்லாசிரமத்திற்கு உயர்சாத்திரங்களிற் கூறியபடி, ஐம்பது காததூரம் பிரம்மச்சாரியாய் துறவியல் சாதன சம்பத்துடன் சென்று ஞானவைராக்யத்துடன் குருபுத்ரனுகிச் சிரவணம், முதலான நித்யானுஷ்

* நாலுவேதப்பொருள்

டானங்கள் செய்துவரும் அடியேனைச் சாஸ்திரத்திற்கு முரணுகக் கேட்பவர்கள், பந்தப்படுத்துங் கிரியை, நூல்களைக் கற்றுக் கேட்பது நியாயமின்மையால், அடியேன் சந்யாச நீதி நெறியினை அனுஷ்டித்துக் குருமூர்த்திக்கு மனம் வாக்குக் காயங்களை அர்ப்பணம் செய்திருப்பதாலும், பள்ளிப்பிராயம் முதற்கொண்டு இரவு பகல் உலகத்தவர்போல் நித்திரை செய்வதை யாரும் காணுததாலும், சிறுவயதிலிருந்து பொய்யுரை புகலாத நாவுடையேனுதலால், பேனு, காசு, பணம், நோட்டுகளைத் தீண்டிடின் மூன்று நாள் உண்ணுவிரதம் பூண்பேனும். தினம் உச்சிப்பொழுது கைப்பிக்ஷை ஏற்றுண்ணும், (பர - பரன், தேசி - தேசிகன், பரமேஸ்வரனுக்கு குரு.) பரதேசியாகிய அடியேனைப் பூர்வவர்ணுச்சிரமங்களைக் கேட்கும் மருள் வடிவுடையவர்கள், விவேகமின்மையால், பெரியோர்கட்கு அபசாரம் செய்தவர் ஆவர்.

குருபுத்திரனுகிய ஞானியைப் பூர்வவர்ணுச்சிரமம் விசாரிப்பது விவேகம் இன்மை என்றும், ரிஷிமூலம் நதிமூலம் கேட்கக்கூடாது என்றும், உங்கட்கு உயர்வு வேண்டுமா? தாழ்வு வேண்டுமா? என்று கேட்டு அடியேன் ஊரைக் கேட்பதனுல், நல்வழியாகிய மோக்ஷவீட்டை மறக்க வைப்பீர்கள். அடியேன் தகப்பன் பெயரைக் கேட்பதினுல் சற்குருமூர்த்தியாகிய ஞானத் தந்தையின் பெயரை மறக்கவைப்பீர்கள். அடியேன் ஜாதிப் பெயரைக் கேட்பதினுல் அடியார்களை நிந்திப்பவர்கள் ஆவீர்கள். விரிக்கிற் பெருகும்.

## (உலகியல்)—இஷ்டசித்தி

அஷ்டலட் சுமிதனது பங்கிலே என்றென்றும்
மகலா திருக்க வேண்டும்,
அதிக சம்பத்துடன் புத்ரசந் தானமும்
அருளதும் பெருக வேண்டும்,
பட்டி மாடாடுடன் குதிரைபல தானியம்
பாலாறு பெருக வேண்டும்,
பசியாம லெப்பொழுதும் முசியாம லன்னம்
பந்தியிற் பகர வேண்டும்,
கட்டழகு வாலிபம் வயது நூருகவே
கருணைநீ செய்ய வேண்டும்,
கண்ணேறு நாவேறு வாராமலென் றனைக்
காத்து ரக்ஷிக்க வேண்டும்,
துஷ்டருடை வஞ்சனைகள் பில்லிசூ னியங்களும்
தூரவே நிற்க வேண்டும்,
துளபமால் மருகனே பழனிவாழ் வேலனே
தோகைமயி லேறுங் குகனே!

---

ஓம்
சிவமயம்

## சிதம்பர தல தோத்திரம்

தில்லை முக்குறுணி விநாயகன் றன்னைச் சேந்தனைக் கற்பகக் களிற்றை
எல்லையில் நடன சிகாமணிதன்னை எழிற்சிவகாம சுந்தரியை
தொல்லையி லமரும் மூல நாயகனைத் துகளறு வுமைய பார்வதியை
நல்ல மாதவப் பொன்னம்பலக் குருவை நாள்தொறுமி றைஞ்சியேத் திடுவாம்.

—சுப்பைய சுவாமி.

---

ப்ரம்ம மோன நிர்வாண

# முத்துக்குமார சுவாமிகள் சரித்திரம்

---

## 1. வாமன யோகீஸ்வரரது அருள் பெறுதல்

அறிவும், ஒழுக்கமும், ப்ரமச்சாரி தத்துவமுடைய முத்தையா என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றிருந்த அடியேன் இருந்த இடமாகிய கிழக்காலூரில், ஓர் * நாகரிக மாமனையிலிருந்து ஒரு நாள் புறப்பட்டு, வழக்கம்போல் விநாயகர் கோயிலுக்குப் போய் விதிப்படி வலம் வந்து நமஸ்கரித்துப் பின், மேற்காலூரில் நமசிவாய ஐயா பங்களாவில், வாமன யோகீஸ்வரரைப்பார்த்து, நம்பிக்கையோடு வணக்கஞ் செய்தேன். சற்சீடருக்கே உரித்தாயுள்ள குறிகள் தோன்றின.

வேர்க்குங் கண்ணீர் ததும்புங் கம்பிக்கு மெய்ந்நடுங்கும்
வார்த்தை நழுவு மனம் பதறுங்—கார்க்கதமாய்க்
காந்து முரோமாஞ் சலியாகுங் காதலித்தார்க்
கேய்ந்த குணங்கா ளிவையெட்டும். — ஒழுவிலொடுக்கம்

---

* திருவிளையாடற் புராணம் வைத்து பூசித்த வீட்டின் பெயர்.

இக்குறிகள் அடியேனிடம் இருக்கக்கண்டு, யோகீஸ்வரர், கிருபாகடாக்ஷம் அருளினார்கள். அன்னாரின் அருள் பெற்று ஞானவாசிஷ்டநூல், கரபாத்திர சுவாமிகள் பரம்பரை அருணசல சுவாமிகள் எழுதிய விரிவுரையுடன் வாசித்து, வீட்டில் போஜனம் புசித்து, யோகீஸ்வரரிடம் ஔஷதப் பணிகள் செய்துகொண்டிருந்தேன். அது சமயம் நமச்சிவாய ஐயா அடியேனுடைய திடபுத்தியைப் பரீக்ஷிக்க, மயக்கந்தரும் அபினியைக் கொடுக்க, தின்றதினல் இரண்டொரு நாட்கள் மயக்கமாக இருந்து தெளிவுற்றேன்.

அதன் காரணத்தால் நமச்சிவாய ஐயா, விவேகிகளின் நிந்தனைக்கு உட்பட்டு மனக் கிலேசம் அடைந்தார்கள். அவர் ஒன்பது வயதுள்ள மாமன் மகள் சிவகாமியைக் கொண்டு, உடுத்தியிருந்த ஆடையினைப் பிடித்திழுத்துப் பரிகாசம் செய்யச் செய்தனர். அடியேன், விருப்பு வெறுப்பற்ற முறையில் பள்ளிக்குழந்தையின் திருவடியை நமஸ்காரஞ் செய்யக் கையைநீட்டி யெழும்போது சிவகாமி விரைவில் தாயாரிடம் போக, தாயார் பார்த்து வைது தண்டித்தாள்.

---

## 2. வித்யா குருவருளும், துறவும் பெறுதல்

### ஒழிவிலொடுக்க வெண்பா

கன்னனைப் போற் றன்னை யறிவனே காக்கையுடன்
மன்னு குயில் போன வாறுபோ—லன்னியமாய்ப்
பேசாது போன துறவி பிறப் பறுப்பார்க்
காசானு மென்றே யறி.

தாய்தந்தையர் சிறு வயதில் அடியேனை அழைத்துக் கொண்டு கல்வி பயிற்றுவதற்குரிய காப்பரிசி முதலிய சாமான்களுடன் பள்ளிக்குச் சென்று உபாத்தியாயரை வணங்கினேம். உபாத்தியாயர், மஞ்சளால் கணபதி உருவம் அமைத்துப் பூசைசெய்து, அவ்வுருவத்தில் சிறிதெடுத்துப் பசும்பாலிற் குழைத்து, ஓலையிலெழுதும்

எழுத்தாணியால் தொட்டு, ஹரி: ஓம், நன்ருக, என்று அடியேன் நாவிலெழுதி உபதேசம் செய்தனர். அந்த உபாத்தியாயர் வசிக்கும் அடுத்த ஊருக்குப் போய் தாம் பூலம் தக்ஷிணை வைத்து நமஸ்காரம் பண்ணிச் சந்நி யாச ஆச்சிரமம் அடைகின்றேன் என்றதற்கு உபாத்தி யாயர் அடியேனைப் பார்த்து, உனக்கு நல்ல குருவானவர் அகப்படுவார். பொய்யுரை புகலாதவனுகிய நீ துறவறத் திற்குரிய குணங்கள் நிறைந்திருக்கப் பெற்றுள்ளாய்; கைவல்ய நவநீதத்தில் சொல்லிய சாதன சம்பத்தின்படி ஞானகுரு வாக்கினை நம்புவது மோக்ஷம். நீ சற்குரு புத்திரனுகி என்னை ஒரு நாள் வந்து பார்த்தால் எனக்கு மிகவும் மகிழ்ச்சியாகவிருக்கும், என்று ஆசீர்வதித்தார். பள்ளிப் பருவத்தில் தந்தையின் ஈமக்கிரியை முடிந்தமை யால், பூர்வ தவ புண்ணிய முதிர்ச்சியால் குருவினைத் தேடிக் காண்பதற்குத் தாயார் முதலிய பெரியோர் திருவடி களில் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து ஆசீர்வசனம் பெற் றுக்கொண்டேன். பின்னர், இராமாயணப் பாவைக் கூத் துக்குப் பேராசிரியராயிருந்த சுப்பையரிடம் யாழ்ப்பாண ஆறுமுக நாவலர் இயற்றிய நான்காம் பால பாடம் இலக்கண வினு விடை, 11, 12-வது நிகண்டுகள் திருவிளையாடற் புராணம் முதலிய நூல்களை அனுக் கிரகத்துடன் கற்றுக்கொண்டேன். சமஸ்கிருத உபாத்தி யாயர் சுலோகங்களை மலையாள எழுத்திற் கற்பித்தார்கள். கணபதித் தோத்திரம், நீதிசாரம், அமரகோசம் முதலிய நூல்களை சீடாசார முறைப்படி கற்பித்த அக்குரு பாதத்தை வணங்கி, அவருடைய கிருபா வீக்ஷண்யம் பெற்றேன்.

## சற்குருவையடைந்து விண்ணப்பித்தல்

சீவர்க ளிடத்தி லருள்சிவ பத்தி திருந்திய துறவு மெய்ஞ் ஞானம்
ஆவதோர் வடிவாம் வேதமா முனியை யமலவா ரணியத்தி லடைந்தே
தேவர்க டேவ துன்பமோர் காலுஞ் சென்றிடா முத்திதா னெய்திச்
சாவதும் பிறப்பு நீங்குமோர் நெறியைச் சாற்றெனத் தாழ்ந்திட முனிவன்.

சற்குரு மாணுக்கனுக்கு உபதேசித்தல்

இருவகைச் சார்வாம் புறப்பற்றை நீக்கி யிச்சையின் மீட்டதி னினைவு
மொருவியே யுடற்கா வலையுங்கை விடுத்தே யுட்கர ணங்கள்வா தனையும்
குருவரு ணெறியே யொடுக்கிடில் வீடுங் கூடுந்தா ணுகவே பவத்தின்
கருவழிந் திடுமிந் நெறியைநீ விரைவிற் கைக்கொண்டு செல்லென வுரைத்தான்.

---

## 3. சுந்தரவேடமும், மந்திர உபதேசமும்

பின்பு, அடியேனுக்கு உரித்தாயுள்ளவர்கள் சமாரா தனைக்கு வேண்டிய சாமான்களைச் சேகரித்து, வண்டியி லேற்றிக்கொண்டு, கைவல்ய நவநீதம் பொன்னம்பல சுவாமி எழுதிய உரையுடன் உடற்கூறுநூல் அடியேன் கையிலெடுத்துக்கொண்டு வாமன யோகீஸ்வரர், பால் சுவாமி யோகியர் யாவரும் ஊர்விட்டு வண்டியில் போகும் வழியில் அடியேனுடன் யோகம் செய்யவேண்டுமென்று பழகிக்கொண்டிருந்த பொன்னம்பல ஐயா இருக்கும் ஊருக்குப் போய்ச் சேர்ந்தோம். பொன்னம்பல ஐயா வைச் சார்ந்தவர்கள் மூட்டைக்கணக்கில் அரிசி முதலான சாமான்களை வண்டியிலேற்றி அனுப்பிவிட்டு அங்குள்ள வர்கள் குதிரை வண்டியில் ஏறிக்கொண்டு வருதலும், கூட்டமாய்ப் பெரிய கோயிலுக்குப் போய், கோயிலுக்கும், மடத்திற்கும் அபிஷேக ஆராதனைக்கும், சத்திரத்தில் சமாராதனைக்கும் வேண்டியவைகளை ஏற்பாடு செய்து பெரியவாள் மடத்துக்கு அடியேனும் ஏனையோர்களும் சென்றோம்.

பொன்னம்பல ஐயா, அடியேன் ஆகிய எங்கள் இரு பேருக்கும் தலைமுடி இறக்கிப் புண்ணிய நதியிலே தீர்த்தமாடி, மந்திர விபூதி யணிந்து மேற்படி மடாலயத் தில் வந்து யாவரும் அபிஷேக ஆராதனைகளைத் தெரி சித்தபின் அடிமைகளாகிய இருவர்க்கும் வாமன யோகீஸ் வரர், பால்சுவாமிகளால் காதில் உபதேசம் செய்தனர். பின்னர் அங்குள்ள மடாதிபதி முதலிய பெரியோர்களை நமஸ்காரஞ்செய்து, அநுக்ரக விபூதிப்பிரசாதம் பெற்றுக்

கொண்டு கூட்டமாகத் திரும்பிப் பெரிய கோயிலுக்குப் போய், அங்கும், அபிஷேக ஆராதனை செய்ததைத் தெரிசனம் செய்து குருக்களிடம் விபூதிப்பிரசாதம் பெற்றுக் கொண்டு, சந்தர்ப்பணைக்கு வந்தவர்களெல்லாம், சத்திரத்தில் போஜனம் உட்கொண்டபிறகு. சந்தனம், தாம்பூலம், புஷ்பம், தக்ஷிணை கொடுத்துப் பூர்த்தியான பின்னர் பால் சுவாமிகள் முன்னிருந்த ஊருக்குப்போய், ஆற்றங்கரையிலுள்ள கட்டிடத்தில் இருந்து யோகம் செய்வதற்கு பசும்பால் அருந்தி உண்ணுக்குச் சிகித்சை செய்து, பத்தியம் இருப்பதற்கு நீவிர், இருவரும் அவிடம் போகலாம் என்று யோகீசுரர் சொல்ல, அடியேன் அங்கு வர இயலாது; துறவர ஆச்சிரமம் வந்தபின்னர் முன் வைத்த காலைப் பின் வைக்கமாட்டேன், என்றேன். அதற்கு அவர் உனக்குப்போஜனம் எவ்வாறுகிடைக்கும்? என்றார். 'அவரவர் ப்ராப்தம்போல் ஊட்டப்படும், என்ற விவேக மனோதிடம், இருக்கின்றது' என்று சிரமேற்கைகூப்பிப்பதில் அளித்தேன். வந்தவர்கள், அடியேனுக்கு வணக்கம் செய்து, முன்னர், தங்கியிருந்த ஊருக்குத்திரும்பினார். கோயிலிலும், மடாலயத்திலும் நிகழ்ந்த பூஜை வைபவங்களைப் பார்த்திருந்தவர்கள், மிகவும் பெரிய இடத்து பிள்ளையாக இருக்கும் என்றும் சுவாமிகள் இவ்விடமே, இருக்கலாம் என்றும் கூறினார்கள்.

---

## 4. மலைமீதேறி ஞான குருவைத்தேடல்

சூரிய உதய காலத்திற்கு முன்பு, புறப்பட்டுத் தூரத்திலுள்ள சரிவாயிருக்கும், மலைமீது ஏறினேன். அதற்கு மேல், ஏறமுடியாததால் கீழே இறங்கலும், கால் வழுக்கினமையால் முழங்கையை ஊன்ற, அஃது, உராய்ந்து விட்டது. அதனைப் பொருட்படுத்தாது, புறப்பட்டு அடர்ந்த கானகத்தில் யானை, முதலிய மிருகங்கள், சஞ்சரிக்கும் வழியே சென்று, வெள்ளியங்கிரி அடிவாரம், பூண்டிக்குப்போய்ச் சேர்ந்தேன். அவ்விடத்திலும், குரு

வைத் தெரிசனம் காணுமல், 'மெய்தான ரும்பி விதிர் விதிர்த்து' அடியற்ற மரம்போல், கீழே விழுந்தேன். மதி மயங்கினேன். பின்னர் சுவானுபூதி அனுட்டிக்கச் சிந்தனை செய்து, கோமுக தீர்த்தத்தின் அருகில், கண் மூடி மௌனியாகிப் பத்மாசனத்தில், சுகமாய் நிஷ்டையி லிருந்தேன். இரவு காட்டு மிருகங்கள்வந்து, கர்ச்சித்த தும் உணர்ச்சிவர, எழுந்து, மழைகாலமானதால், இருள் நிறைந்த காட்டில் திசை தெரியாமல் திகிலடைந்து, சிரமப்படுங்காலையில், உபாசனுமூர்த்தமாகிய கணபதி யருளால், உணவு கிடைக்கப் புசித்து, நீரருந்திக் களைப்பு நீங்கி, அடுத்த கிராமங்களுக்கு நடந்து, வெகு தூரம் போய்க் கோயம்புத்தூர் ஜில்லா மேலைச்சிதம்பரம் என்னும் திருப்பேரூர் அடைந்தேன்.

---

## 5. திருவருள் ஞான குருவைக் கூட்டுவித்தல்

**திருப்பேரூர் திருப்புகழ்—அருணகிரிநாதர்.**

தீராப்பிணி தீர—சீவாத்தும ஞான
ஊராட்சியதான—ஓர் வாக் கருள் வாயே
பாரோரக்கிறை சேயே—பாலாற் கிரி ராஜே
பேராற் பெரியோனே—பேரூர்ப் பெருமாளே!

(நொய்யல்) காஞ்சிமா நதியில் தீர்த்தமாடி, அரசம் பலத்தின் கோபுர வாசலிலுள்ள, சாந்தலிங்கஸ்வாமி ஐதீகம் காண்பித்த, நந்தியையும், சுவாமி, அம்பாளையும் தரிசித்து, இறவாப்பனை, முளையாப்புளி, புழுவாத சாணம், பிர்மயாக விபூதி மேடை, ஆகிய பலஐதீகமுள்ள அப்பேரூரில் பச்சைநாயகி, பட்டீஸ்வரர், திருக்கோயில் களைத் தெரிசனம் செய்துகொண்டு, ஈசானிய திசையில் ரோட்டருகில் உள்ள, சாந்தலிங்கசுவாமி மடாலயத்திற்கு போய் வலம் வருகையில், பரம சாதுவாயும், இலிங்க தாரணியாகவும், இருந்த, தெலுங்கபாளையம், பழனி ஐயா அவர்கள், அடியேனைப்பார்த்து, நீ நல்லபிள்ளை யாக இருக்கின்றனை. இவ்விடமே இருந்தால், சாந்த லிங்கரே உனக்குக் குருவாகவந்தருள் புரிவார் என்றனர்.



ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள்

அவர் வாக்கினை நம்பி, வணக்கம் புரியும்போது, பக்கத்திலுள்ளவர்கள், திருநெல்வேலிக்கடுத்த, வல்லநாட்டுச் சிவராமலிங்க சுவாமிகள் இவ்விடம் வருவார்கள் என்றியம்பினுர்கள். அதனைக்கேட்டு மகிழ்ச்சியுடன் அடியேன் சாந்தலிங்கஸ்வாமி மடத்திலேயே நான்குவித பணிவிடைகள் ஆத்தப்பணி, அங்கப்பணி, தானப்பணி, சர்ப்பாவ பணிவிடை செய்துகொண்டு இருக்கும்நாளில் சிவராமலிங்க பரமஹம்சர், அங்கெழுந்தருளத் தெரிசித்து அவர்களுடைய திருவடிகளில், அடியேன் தண்டம்போல் விழுந்து, நமஸ்காரஞ்செய்ய, சுவாமிகள் ஆசிகூறி விபூதி வழங்கினுர்கள். பின்னர், மடாதிபதி மாணிக்க சுவாமிகள், அடியேனுக்கு மந்திரோபதேசம் புரியும்படி சிவராமலிங்கப் பரமஹம்சரிடம் விண்ணப்பித்தார்கள். சாந்தலிங்க அடிகளார் குருபூஜை நாளாகிய மாசிமக நக்ஷத்திரத்தன்று அனுக்ரஹிக்கவேண்டி கிருபை கூர்ந்து அடியேனிடத்தில், பரிவோடு, கூடிய பணிவிடையும், பக்தி, சிரத்தையும், அடக்கமும், ஒழுக்கமும், விவேகமுங் காணப்பட்டதால் சிவராமலிங்க பரமஹம்சர் சீடருக்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச்செய்து 'முத்துக்குமாரு' என்ற தீக்ஷாநாமம் சாற்றி, ஏனை இருவர்க்கும் பஞ்சாக்ஷரத்தின் விதிப்படி, உபதேசம் செய்தருளினுர்கள்.

---

## குரு தோத்திரம்

( அடியேன் இயற்றியது )

---

1. சத்தியவடிவு தானே சத்துவ வேடங் கொண்டு
முத்துக்குமார நாமம் மொழிந்தனன் முறுவல் வாயால்
அத்தனை மகிமையுள்ளோ ரன்னையும் பிதாவுமாமால்
சித்குரு சிவராம லிங்கத் திருப்பெயர் ஜெபிப்போர்வாழி !

2. அடியவர் பவத்தை நீக்க வாண்டியாய் வேடம் பூண்டாய்
கடிகமழ் சிவகாமிக் காய்க்கனகவம் பலத்துளாடாய்
மடியனேன் மடிதல்நீக்க மனிதனுய் வேடம் பூண்டாய்
அடியனேன் மிடிகள் நீக்கி வானந்தமருளுவாயே.

குருசுவாமி ஆரூர் தக்ஷிணாமூர்த்தி குருபூசைக்குப் புறப்படும்போது அடியேன் வணங்கி உடன் வர வேண்டி 'நீ மடத்தில் இருந்துகொண்டு அடியார் பணி, ஜெபதபங்கள், செய்துவருவாயாக' என்று ஆக்ஞாபித்து ஆரூர் அடைந்தார்.

வண்ணச்சரபம் முருகதாஸ் திருவாய் மலர்ந்தருளிய புலவர் புராணம் பெருநூலை அடியேன் மாணிக்க ஸ்வாமிகள் முன்னிலையில் படிக்கத் தாற்பரியங்கூறிய அடிகட்கும் ஆறுமுகசுவாமிகட்கும் நமஸ்கரித்து ஆசிமொழிகள் பெற்றுக்கொண்டேன்.

### திருப்புக்கொளியூர் — அவிநாசி.

உரைப்பார் உரை உகந்துள்க வல்லார்தங்கள் உச்சியாய்
அரைக்காடரவா தியுந்தமுமா யினுய் -
புரைக்காடு சோலைப் புக்கொளியூர விளுசியே கரைக்கால் முதலை
யைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே.

— ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் பண்

கருணாலய சுவாமிகள் அவிநாசி மடாலய குருபூசைக்கு அழைத்துச் சென்றார். அவிநாசியப்பர் கோவிலுக்குச்சென்று காசித்தீர்த்தங்களாடி மூர்த்திகளைத் தெரிசித்துகொண்டு மடத்திற்குச் சென்றோம். குருபூசை முடிந்ததும் 1917-ம் வருஷம் சிதம்பரம் சென்றுமௌன ஸ்வாமி மடத்தில் தங்கித் தெரிசனம் செய்தேன்.

அலையார் புனல் சூடி யாகத் தொருபாகம்
மலையான் மகளொடு மகிழ்ந்தான் உலகேத்தச்
சிலையால் எயிலெய்தான் சிற்றம்பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையானர்களே. — ஸ்ரீ சம்பந்தர் பண்

பின்னர் தில்லையம்பலத்தை அகன்று செல்லும் நெறியில் சுந்தரமூர்த்தி ஸ்வாமிக்கு அரூபமூர்த்தி வழிகாட்டிக் கொடுத்த கூடலையாற்றூர் அடைந்து வழிபட்டேன்.

"வேலையின் நஞ்சுண்டு விடைய தானேறிப்
பாலன மென் மொழியாள் பாவையொடு முடனே
கோல மதுருவாகிக் கூடலையாற்றூரில்
ஆலன் இவ்வழி போந்த அதிசய மறியேனே!"

பிறகு விருத்தாசலம் போய் ஆழத்துப்பிள்ளையார், பழமலைநாதர் பெரியநாயகி அம்மை முதலிய மூர்த்திகட்கு வழிபாடாற்றி குமாரதேவர் மடாலயத்திற்குச் சென்று பண்டாரச்சன்னதிகளைத் தெரிசனம்பண்ணிக்கொண்டு புறப்பட்டு பெண்ணாகடம் சென்றேன்.

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றி செய்யும்
என்னாவிகாப்பதற் கிச்சையுண்டே லிருங்கூற்றகல
மின்னாரு மூவிலைச்சூல மென்மேற் பொறிமேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச்சுடர்க் கொழுந்தே.

அப்பர் பெருமானுக்குச் சூலக்குறி இடபக்குறி பொறித்தருளிய சுடற்கொழுந்து நாதரையும் அழகிய காதலீஸ்வரியையும் வழிபட்டு திருத்தூங்கானைமாடம் ஸ்ரீ சுடர்க்கொழுந்துநாதருக்கும் காதலீஸ்வரி முதலிய எல்லா மூர்த்திகளுக்கும் அபிஷேக நைவேத்தியங்கள் செய்து மஹேஸ்வர பூஜை செய்து பூர்த்தியானபிறகு அவ்விடம் தளகர்த்த நடராஜ பிள்ளை முதலான பக்த கோடிகளுக்கு மஹாபக்த விஜயம் ஆறு பாகங்களும் பாடம் போதித்து அன்பர்களைக்கொண்டு உள்ளூரில் உள்ள ரெங்கனாதப் பெருமாள் கோயிலில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்வித்தும் புராணம் படித்தவர்கட்கு வஸ்திர தானம் முதலியவைகள் செய்வித்தும் அன்னவர்களுடன் இன்புற்றனம். முடவனுக்கு கைகால் வளரச்செய்த வெள்ளாற்று புண்ணியத்துறை தரிசித்து சம்பந்தருக்கு முத்துச் சிவிகை கொடுத்த அறத்துறை, வசிஷ்டத்துறை காரியாந்துறை முதலிய துறைகளையும் தரிசித்து, உச்சிப் பொழுதில் வடலூர் செல்லும் வழியில், அடியேன் வாக்கின்கண் "அம்பலத்தரசே! அருமருந்தே! ஆனந்தத்தேனே! அருள் விருந்தே!" என இராமலிங்க வள்ளலார் திருவருட்பாவந்தது; பாடினேன், பாட்டைக்கேட்ட இரண்டு அம்மையாரோடு ஓர் ஆண்பாலும் ஆக மூவரும் இராமலிங்கம்! இராமலிங்கம்! என்று விரைந்து வந்து வணங்கி அடியேனை அன்னம் புசிக்க வேண்டுமென வேண்ட அடியேன் அவ்வமுதினைக் கையிலேந்திஉண்டு

இளைப்பாறினேன். அம்மூவரில் ஒருவர் இராமலிங்க சுவாமிகளிடம் நேரே அருட்பாச் சிரவணஞ் செய்தவராத லால், அவ்வருட்பா பாடலை, அடியேன் கேட்டு, ஆனந் திக்குமாறு பாடலாயினர். அவர்களுடன் அடியேன், வடலூர் அடைந்து, ஞானசபையினைத் தெரிசித்துப் பிக்ஷை செய்து கொண்டு திருப்பாதிரிப்புலியூர் திருத் தலத்தினை யடைந்து, அம்மையப்பரை வணங்கி, ஞானி யார் சுவாமி மடாலயத்திற்குச் சென்று தங்கி, அங்குள்ள சுவாமிகளையும், அடியார்களையும், கண்டு, ஆசிபெற்று, 1918-ல் அடியேன், பாடல் பெற்ற திருத்தினை நகர், திருக் கழிப்பாலை, முதலிய திவ்ய ஸ்தலங்களைத் தெரிசித்து, சிதம்பரம் வந்து சேர்ந்தேன்.

நடராஜப்பெருமானை வழிபாடாற்றிக்கொண்டிருந்து பன்னிரு திருப்பெயர்களையுடைய திருஞானசம்பந்த சுவாமிகள் அவதரித்த ஏகபாதப்பண்பாடல் பெற்ற சீர்காழி முதலிய திருத்தலங்களை வரிசையாகத் தெரிசித் துக்கொண்டு வழியிடைப்பட்ட தீர்த்தமாடித் திருவாரூர் மடப்புரம் தெக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயஞ்சென்று அங்கமர்ந்தருளியுள்ள, மெய்யன்புடைய அடியவர்களை யும், மூலஸ்தான தெக்ஷிணாமூர்த்தியையும் தரிசனம் செய்துகொண்டு. குருமூர்த்திகள் சிவராமலிங்க பரம ஹம்சர், இவிடம் எழுந்தருளினார்களா? என்று வினவ, அடியவர்கள் சிக்கல் கோயிலுக்கு அடுத்த பொருள் வைத்தசேரி, என்னும் தலத்து பெரியமடம் உகந்தலிங்க ஞானதேசிக சுவாமிகள் குருபூஜைக்கு எழுந்தருளுவார் கள்; இங்கிருந்து சிக்கலுக்கு வண்டி போகும்; தாங்கள் ஏறிச்செல்லலாம், என்று கூறினார்கள். அடியேன் வண்டி யில் ஏறிச்செல்லும் பழக்கம் இல்லாததால் நடந்து சிக்கல் அடைந்தேன்.

---

## 6. சிவராமலிங்கரைத் தரிசித்தல்

அங்கு மடாலயத்தில் உள்ள சுவாமிகளைக் கண்டு வணங்கி, அடியார்களுடன், உகந்தலிங்க சுவாமி மடம், மூலஸ்தானத்தை, உச்சிக் காலத்தில் தெரிசனம் செய்து மாலையில் சிக்கல், பெரியகோயில், தெரிசனம் செய்து, மடத்திற்கு வந்து "குருமூர்த்தி சுவாமிகள் இவிடம் வந்தருளினார்களா?" என்று வினவ, அதற்கு அங்குள்ளவர்கள் 'குருபூஜை தினத்தன்று தவறாமல் வந்தருளுவார்கள் என்று விடை பகர்ந்தனர். மறுநாள் சமயாசாரிய சுவாமிகளால் பாடல்பெற்ற கீழ்வேளூர் முதலிய திருக்கோயில் சென்று தீபாராதனை தெரிசனம் செய்து, திருநாகைக் காரோணம்புக்கு நீலாம்பிகை சமேத காயாரோகணப் பெருமானை வழிபட்டு, உச்சிப்பொழுது அடியேன் வழக்கம்போல் கற்பூர தீபம் தெரிசித்தேன். அப்பால் யாத்திரைவாசிகட்கு அளிக்கவிருந்த குளித்தளிகை அடியேனுக்கு அளிக்கப்பட்டது. புசித்த பின்னர் நாகூர் பள்ளிவாசல் ஆண்டவரையும் வழிபட்டுக் காரைக்காலில் புனிதவதியாருக்கு மாங்கனி கொடுத்த திருக்கோயில் கண்டு வணங்கி, திருநீலகண்ட யாழ்ப்பாணர் தாயாரின் பிறப்பிடமாகிய திருத்தருமபுரம் சென்று வணங்கி, திருத்தக்களூர் தலத்தையும் வழிபட்டுப் பின்னர் திருநள்ளாற்றுப் பெருமானையும், சனீச்வரர் தனிக்கோயிலையும் தரிசித்தேன். அப்பர் சுவாமிகள் சிவலிங்க ஐக்யமான ஒப்பில் தலமாய திருப்புகலூர் திருச்செங்காட்டங்குடி, திருமருகல் முதலிய ஸ்தலங்களைத் தெரிசித்துத் திரும்பி, குருபூஜை தினத்தன்று சிக்கல் பதியினை யடைந்து, குருபூஜை விழாவினைத் தெரிசித்து குருமூர்த்தி சிவராமலிங்கரைக் காணப் பேரவாவுற்று, அங்கு அவர் வராத காரணத்தால் அடியேன் அங்கு வந்திருந்த அடியார் மீண்டும் காரைக்குடி கோயிலூர் மடத்துக் குருபூசைக்குச் செல்லப் புறப்படுகையில், அவர்களுடன் புறப்படும்போது மடாதிபதி மெய்யப்ப சுவாமிகள் வந்து அடியேனுடைய முகவாய்க்கட்டையினைப்

இளைப்பாறினேன். அம்மூவரில் ஒருவர் இராமலிங்க சுவாமிகளிடம் நேரே அருட்பாச் சிரவணஞ் செய்தவராதலால், அவ்வருட்பா பாடலை, அடியேன் கேட்டு, ஆனந்திக்குமாறு பாடலாயினர். அவர்களுடன் அடியேன், வடலூர் அடைந்து, ஞானசபையினைத் தெரிசித்துப் பிக்ஷை செய்து கொண்டு திருப்பாதிரிப்புலியூர் திருத்தலத்தினை யடைந்து, அம்மையப்பரை வணங்கி, ஞானியார் சுவாமி மடாலயத்திற்குச் சென்று தங்கி, அங்குள்ள சுவாமிகளையும், அடியார்களையும், கண்டு, ஆசிபெற்று, 1918-ல் அடியேன், பாடல் பெற்ற திருத்தினைநகர், திருக்கழிப்பாலை, முதலிய திவ்ய ஸ்தலங்களைத் தெரிசித்து, சிதம்பரம் வந்து சேர்ந்தேன்.

நடராஜப்பெருமானை வழிபாடாற்றிக்கொண்டிருந்து பன்னிரு திருப்பெயர்களையுடைய திருஞானசம்பந்த சுவாமிகள் அவதரித்த ஏகபாதப்பண்பாடல் பெற்ற சீர்காழி முதலிய திருத்தலங்களை வரிசையாகத் தெரிசித்துக்கொண்டு வழியிடைப்பட்ட தீர்த்தமாடித் திருவாரூர் மடப்புரம் தெக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயஞ்சென்று அங்கமர்ந்தருளியுள்ள, மெய்யன்புடைய அடியவர்களையும், மூலஸ்தான தெக்ஷிணாமூர்த்தியையும் தரிசனம் செய்துகொண்டு. குருமூர்த்திகள் சிவராமலிங்க பரமஹம்சர், இவிடம் எழுந்தருளினார்களா? என்று வினவ, அடியவர்கள் சிக்கல் கோயிலுக்கரு அடுத்த பொருள் வைத்தசேரி, என்னும் தலத்து பெரியமடம் உகந்தலிங்க ஞானதேசிக சுவாமிகள் குருபூஜைக்கு எழுந்தருளுவார்கள்; இங்கிருந்து சிக்கலுக்கு வண்டி போகும்; தாங்கள் ஏறிச்செல்லலாம், என்று கூறினார்கள். அடியேன் வண்டியில் ஏறிச்செல்லும் பழக்கம் இல்லாததால் நடந்து சிக்கல் அடைந்தேன்.

---

## 6. சிவராமலிங்கரைத் தரிசித்தல்

அங்கு மடாலயத்தில் உள்ள சுவாமிகளைக் கண்டு வணங்கி, அடியார்களுடன், உகந்தலிங்க சுவாமி மடம், மூலஸ்தானத்தை, உச்சிக் காலத்தில் தெரிசனம் செய்து மாலையில் சிக்கல், பெரியகோயில், தெரிசனம் செய்து, மடத்திற்கு வந்து “குருமூர்த்தி சுவாமிகள் இவிடம் வந்தருளினூர்களா ?” என்று வினவ, அதற்கு அங்குள்ளவர்கள் ‘குருபூஜை தினத்தன்று தவருமல் வந்தருளுவார்கள் என்று விடை பகர்ந்தனர். மறுநாள் சமயாசாரிய சுவாமிகளால் பாடல்பெற்ற கீழ்வேளூர் முதலிய திருக்கோயில் சென்று தீபாராதனை தெரிசனம் செய்து, திருநாகைக் காரோணம்புக்கு நீலாம்பிகை சமேத காயாரோகணப் பெருமானை வழிபட்டு, உச்சிப்பொழுது அடியேன் வழக்கம்போல் கற்பூர தீபம் தெரிசித்தேன். அப்பால் யாத்திரைவாசிகட்கு அளிக்கவிருந்த குளித்தளிகை அடியேனுக்கு அளிக்கப்பட்டது. புசித்த பின்னர் நாகூர் பள்ளிவாசல் ஆண்டவரையும் வழிபட்டுக் காரைக்காலில் புனிதவதியாருக்கு மாங்கனி கொடுத்த திருக்கோயில் கண்டு வணங்கி, திருநீலகண்ட யாழ்ப்பாணர் தாயாரின் பிறப்பிடமாகிய திருத்தருமபுரம் சென்று வணங்கி, திருத்தக்களூர் தலத்தையும் வழிபட்டுப் பின்னர் திருநள்ளாற்றுப் பெருமானையும், சனீச்வரர் தனிக்கோயிலையும் தரிசித்தேன். அப்பர் சுவாமிகள் சிவலிங்க ஐக்யமான ஒப்பில் தலமாய திருப்புகலூர் திருச்செங்காட்டங்குடி, திருமருகல் முதலிய ஸ்தலங்களைத் தெரிசித்துத் திரும்பி, குருபூஜை தினத்தன்று சிக்கல் பதியினை யடைந்து, குருபூஜை விழாவினைத் தெரிசித்து குருமூர்த்தி சிவராமலிங்கரைக் காணப் பேரவாவுற்று, அங்கு அவர் வராத காரணத்தால் அடியேன் அங்கு வந்திருந்த அடியார் மீண்டும் காரைக்குடி கோயிலூர் மடத்துக் குருபூசைக்குச் செல்லப் புறப்படுகையில், அவர்களுடன் புறப்படும்போது மடாதிபதி மெய்யப்ப சுவாமிகள் வந்து அடியேனுடைய முகவாய்க்கட்டையினைப்

பற்றி, அப்பா! நீ நல்ல பிள்ளையாக இருக்கின்றாய்; நீ இம்மடத்தின் கண்ணேயே இருக்கலாம்; இருப்பாயாக. நான் காரைக்குடி மடத்திற்குப் போய்ச் சிவராமலிங்க பரமஹம்சரை அழைத்துக்கொண்டு இவ்விடம் வருகின்றேன் என்று கூறிக் கோயிலூர் மடத்துக் குருபூஜைக்குச் சென்றார்கள்.

பின்னர், சென்னை வீரசுப்பைய சுவாமி, குருமூர்த்தி சிவராமலிங்க பரமஹம்சர், மலையாளம் நாராயணசுவாமி, இன்னும் பெரிய சாதுக்களையும் கூட்டமாக அழைத்துக் கொண்டு பொருள்வைத்தசேரிப் பெரிய மடத்திற்கு வந்துசேர்ந்தார்கள். அதுகாலை பெருமகிழ்ச்சியோடு சிவராமலிங்கபரமஹம்சருக்கும் மற்றையவர்களுக்கும் வந்தனை வழிபாடுகள் புரிந்தேன்.

அன்று குருவாரம் ஆகிய நன்னாள் ஆகையினால் பிரம்ம சபையில் மடாதிபதி மெய்யப்ப சுவாமிகள் ஆசன மாகிய பீடத்தில் எழுந்தருளியிருக்க, அடியேனும் தரும சுப்பைய சுவாமியும், மலையாள கிருஷ்ணய்யாவும்முறைப் படி பாடம் பயிலத்தொடங்கி நாஞ ஜீவவாதக் கட்டளை பாடம் நடந்தது. மறுநாட் காலையில் கிருஷ்ணய்யாவும் அடியேனும் நாஞ ஜீவவாதக் கட்டளையில் முதல் நாள் பயின்ற பாடத்தை ஓதும்போது அடியேன், "சுத்த ப்ரம்மமாய் இருக்கின்ற" என்று வாசிக்கத்தொடங்கிய அளவில் கிருஷ்ணய்யா அடியேனைப் பார்த்து நீர் சுத்த ப்ரம்மமாகி விட்டீரோ? என்று வினவ அடியேன் அதற்குச் சந்தேகமில்லை என்று விடையளிக்க, அவர் நீர் சொல்வது நிச்சயமானால் உமது வாயைத்திற என்று அடியேன் வாய்க்குள் உமிழ்நீர் துப்பினார். நான் அவ் வெச்சிலை விழுங்கிவிட்டு முமுக்ஷுத் தன்மையால் அருவருப்பிலாது இருந்தேன்.

பின்னர், அடியேனிடத்தில் மறுநாள் சிவராமலிங்க பரமஹம்சர் மேலும், சில நூல்களையும் அடியவர்களுடன் பாடம் பயிலுமாறு பணித்தருளி, வல்லநாடு எழுந்தருளினார்கள். அடியேன் ஏழு ஆண்டுகட்கு அதிகமாக சிக்கல்

பெரிய மடத்தில் பாரத அநுசாசன பர்வம், சூதசம்ஹிதை குப்புசாமி ராஜுவின் மொழிபெயர்ப்பு பஞ்சதசிப் பெரு நூல், வீரசுப்பைய சுவாமிகள் மொழிபெயர்த்த ஆத்ம புராணம் முதலிய நூல்களைப் பொதுப் பாடமாகப் பயின்றுவந்தேன்.

---

## 7. சிக்கல் குருக்களின் நோய் திருநீற்ருல் தீர்த்தல்

சிக்கல்ப்பொருள்வைத்தசேரி வெண்ணெய் லிங்கேசுரர் திருக்கோயிலின் திருக்குளத்தில் சுக்கிரவாரம் தோறும் தீர்த்தமாடித் திருக்கோயில் வணங்குவது அடியேன் வழக்கம்.

சிக்கல் குருக்கள்மார்களில் ஒருவர்க்குப் பார்சுவ வாதம் வந்ததால் வருஷக்கணக்காகக் கைகால்கள் உதவாமல் இருந்து வந்தன. அவர் படுக்கையாக இருந்தார். இந்நிலையில் சிக்கல் சிங்காரவேலர் ஷஷ்டி சூரசம்காரத் திருவிழாவிற்குக் குருக்கள்மார் அனைவர்க்கும் திருவுளச் சீட்டுப்போட்டு எடுப்பது வழக்கம். பூசனைக்குரிய சீட்டு பார்சுவவாதம் வந்த குருக்கள் ஐயாவுக்குக் கிடைத்தமையால், மற்றைய குருக்கள்மார்கள் நோயுற்றவரைப் பார்த்து, நீவிர் எங்ஙனம் பூசை செய்வீர்? என, அவர், சுப்ரமண்ய ஸ்வாமிகளின் கிருபையினுல் செய்யக் கூடும் என்று பதில் கூறினுர்.

அன்றிரவு வைத்யநாதேஸ்வரர் அக்குருக்கள் கனவிற்ருேன்றி, ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் நாளை கோயிலுக்கு வருவார்கள்; அவர்பால் திருநீறு பெற்று நலமுறுக, என்றருளித் திருவுருக் கரந்தனர். வழக்கம்போல் அடியேன் தீர்த்தமாடித் திரும்பி வரும்போது பார்சுவவாதக் குருக்கள் ஐயாவைக் கைத்தாங்கலாக அழைத்துவந்து கோயில் வெளி மதிலுக்கு அருகாமையில் உட்கார வைத்து அடியேன் வருவதை எதிர்பார்த்திருந்தனர். அடியேனைப் பார்த்ததும், சுவாமிகளே, வைத்தியநாதேசுரரின் திருவாக்கின்படி திருநீறு

வழங்கி இப்பிணியினை அகற்றி யருள்க, என வேண்டினார். இஃது "வைத்தியநாதப் பெருமானின் திருஅருள் போலும்," எனக் கருதித் திருநீற்றினை எடுத்தவுடன் அக்குருக்கள் ஐயா முடங்கின கைகளை நீட்டி திருநீறு வாங்கி யணிந்தபின் பிணி நீங்கி, மகிழ்ந்து விழாவிற்குக் கையில் காப்புக் கட்டிக்கொண்டு சிக்கல் சூரசம்ஹாரப் பெருவிழாவினை மிக மங்களகரமாக முற்றுவித்தனர்.

**வைத்தீஸ்வரங்கோயில் பதிகம்**

செடியாய வுடல் தீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமை செய்யும் புள்ளிருக்கும் வேளூரை
கடியார்ந்த பொழிற்காழிக் கௌணியன் சம்பந்தன் சொல்
மடியாது சொல்ல வல்லார்க் கில்லையாம் மறுபிறப்பே. —சம்பந்தர்.

---

## 8. இரும்புப்பெட்டி திறக்கும் திருவிளையாட்டு

ஓர்நாள் பொருள்வைத்தசேரி, பெரிய மடத்தில் உள்ள இரும்புப்பெட்டியினைத் திறக்கப் பலரும் முயன்றும், திறக்காமற்போயிற்று. மடத்தின் கண்ணிருக்கும் நால்வர் இராதாகிருஷ்ணன், ஆதிசங்கர பத்மபாதாச்சாரியாள் முதலாயினோர் திருவுருவப் படங்கட்குப் பூசனை புரிவான் வேண்டி அடியேன் பூஜை அறைக்குச் செல்லுகையில் அவர்கள் இரும்புப் பெட்டியைத் திறக்கவேண்டுமென்றுத் திறவுகோலைக் கொடுக்க, வாங்கிக்கொண்டு கணபதியினருளால் திறக்குமெனக் கூறித் திறக்கையில் பெட்டி திறக்கப்பட்டது.

---

## 9. காவிவேடம் பூணுதல்

அப்பெட்டியில் இருந்த ஆபரணங்களை எடுத்துச் சிவாலய சௌந்தரநாயகிக்கு அணிவித்துப் பூசனை முற்றியிருக்கும் நாளில், பங்குனிமாதம் மகம் நக்ஷத்திரத்தில் மடாதிபதி சொற்படி ஆடைக்குக் காவி நனைத்தார்கள். அன்றிரவு ஐந்து நாழிகைக்கு உகந்தலிங்க

ஸ்வாமி மடத்தில் பூஜை நடக்கும்போது காவி ஆடைக் குரிய கிரியைகளேச் செய்து மெய்யப்ப சுவாமிகள், பல பெரியோர்கள் திருமுன் காவியாடையினைக் கொடுக்க அடியேன் வணங்கிப் பெற்று அணிந்தேன். அடியே னுக்குச் சாஸ்திரங்களைப் பள்ளிப் பிள்ளைகள் கைகட்டிப் பாடம் ஒப்புவிப்பதுபோல் பயிற்றுவித்தனர். அடியேன் விநாயகர் கவசத்தினை 21 தடவை நாள்தோறும் பாராய ணம் பண்ணியும் இரண்டு மூன்று நாழிகை தூரத்தில் உள்ள நந்தவனத்திற்குப் போய் இரண்டு குடலைக்கு அதிகமாகவே நல்ல வில்வத்தளங்களைக் கொண்டுவந்து அமாவாசை, பௌர்ணமி புண்ணியகாலங்களில் குரு மூர்த்தியருளிய பஞ்சாக்ஷரத்தினால் கணபதிப் பெருமா னுக்கு அர்ச்சனை புரிந்தேன்.

---

## 10. மெய்யப்பசுவாமிகளிடம் பாடம் கேட்டல்

மடாதிபதி மெய்யப்பசுவாமிகள்பால் சாஸ்திரங்களை உபதேச முறைப்படி கேட்டேன். நானா ஜீவவாதக் கட்டளை, பிரபோதச் சந்திரோதயம், கீதாசாரத்தாலாட்டு, சசிவர்ணபோதம், மகாராஜ துறவு, கொலைமறுத்தல், வைராக்யசதகம், வைராக்யதீபம், அவிரோதவுந்தியார், வேதாந்த சூடாமணி முதலிய நூல்களைப் பாடம் கேட்டுக் கொண்டிருக்கும் நாளில், கைவல்ய நவநீதம் பாடம் கூற ஆரம்பித்தார்கள். கைவல்யத்தில், "நம்மாணை ஆலமர் கடவுளாணை குருபாத மேலாணை" என்ற மூன்று செய் யுட்கள் வருகின்றபடியால் அந்த ஆணையை நம்பிய அடி யேன் மெய்யப்பசுவாமிகளிடம் மனோவாக்குக் காயங் களைத் தண்ணீர் வார்த்துச் சத்தியம் பண்ணித் தத்தம் செய்வதாகப் புகன்றமைக்கு, "அப்பழக்கம் நம் கோயி லூர் பரம்பரையிற் காணோம்," என்று கூற, அடியேன் பணிவுடன் வணக்கம் புரிந்து ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று வேண்ட, "உன்னுள்ளம் கனிந்த வகையிற்

செய்க" எனப் பணித்தனர். வேதாந்தப் பாடங்களைக் கருணை கொண்டு ஓதிவைத்தருளினமையின் அடியேனுக்கு அவ்விடம் விட்டுப்போக மனமில்லை.

---

## 11. குருமூர்த்தியிடம் நவநீதம், மகாவாக்யம், பகவத்கீதை வினவித் தெளிதல்

சிக்கலிலிருந்து மனச் சஞ்சலமாகவே புறப்பட்டுத் திருச்சி, திருவானைக்காவல் போய், வழியில் ஊர்களில் பிக்ஷை பண்ணிக்கொண்டு மதுரை வழியாகத் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள வல்லநாடு சேர்ந்து பரமகுரு அறிவாநந்த சுவாமியையும், சற்குருமூர்த்தி சிவராமலிங்கப் பரமஹம்சரையும், அங்குள்ள அடியவர்களையும் விதிப்படி நமஸ்கரித்து அவிடமிருந்து புறப்பட்டு எட்டயாபுரத்து இராமசுவாமிச் சுவாமிகள் இருக்கும் சிவலப்பேரி மடாலயத்தினை யடைந்து, நல்லதொரு நாளில் சிவராமலிங்க குருமூர்த்திகளிடம் கைவல்ய நவநீத பாடம் ஆரம்பித்து அடியேனும் இராமானந்த ஐயாவும், சுடலையாடிப்பசுபதி ஐயாவும் சிரவணஞ்செய்த பாடத்தில்,

தூல சூக்ஷம வஞ்ஞானம் தோன்றும் மூன்றவத்தை தாமும்
காலமோர் மூன்றுஞ் ஜென்மக் கடலெழு கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனவை யெத்தனை யென்பேன்
ஆலமர் கடவுளானை வவைக் கெலாஞ் சாக்ஷி நீயே.

என்னும் செய்யுளை வாசித்தோம். குருமூர்த்திகள் தாத்பர்யமாகக் கல்லால் நீழலின்கீழ் வெழுந்தருளியிருக்கப்பட்ட தக்ஷிணாமூர்த்தி திருப்பாதத்தாணை, அவைக்கெலாஞ் சாக்ஷி நீயே என்று கூறியவுடன், அடியேன் குருமூர்த்திகளின் திருமுகத்தினைப் பார்க்கச் சுவாமிகள் திருக்கண் பார்வை செய்தருள, அடியேனுக்கு விரண்டு செய்யுட்கள் உரை வாசிக்குமளவும் ஏகாக்ர நிஷ்டை வந்தபடியால் ஒன்றுந் தோன்றுமலிருந்தது. நிஷ்டை தெளிந்து ஞாபகம் வந்தவுடனிந்தப் பாட்டினை அடியேன் படிக்கக் குருமூர்த்தி இராமாநந்தர் படிக்கும் மூன்றுவது பாட்டினை எடுத்து வாசி என்றூர்கள்.

எல்லாங்கண் டறியு மென்னை யேதுகொண் டறிவேனென்று
சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடர் வேறுண்டோ
பல்லார்முன் தசமன் றன்னைப் பார்ப்பதுந் தனைக் கொண்டேதான்
அல்லாமற் பதினென்றுனு மவனிடத் துண்டோ பாராய்.

— கைவல் - 73

அறிவிக்கு மறிவு செய்யு மறிவுவே றுண்டென்றெண்ணும்
அறிவற்ற குதர்க்க மூடர்க் கனவஸ்தை பலமாய்த் தீரும்
அறிபடும் பொருளியல்லை யறிபடாப் பொருளியல்லை
அறிபொரு ளாகுமுன்னை யனுபவித் தறிவாய் நீயே.

— கைவல் - 74

இப்படியாகப் பாடம் நடந்துகொண்டுவந்தது. ஒரு நாள் குருமூர்த்திகளை வணங்கி அடியேன் மஹாவாக்கியம் உபதேசிக்கும்படி வேண்ட அங்ஙனம் உபதேசம் செய்தருளினர். அடியேன் குருமூர்த்திகளிடம் பாடம் கேட்ட கைவல்ய நவநீதத்தினை மீண்டும் கோயிலூர் பெரிய இராமசுவாமிச் சுவாமிகளிடம் சிரவணஞ்செய்து முற்றியதும் அடியேனுக்கு சுவாமிகள் கிருபாவீக்ஷண்யம் செய்து திருவண்ணுமலை தீபதெரிசனத்திற்குப் புறப் பட்டனர்.

---

## 12. பொன்னும் மண்ணும் ஒன்ருய்க் கருதல்

இவ்வாருக இருக்கும் நாளில் தாம்பிரவர்ணி நதி வெள்ளப் பெருக்கெடுத்து வந்து மடாலயத்தில் குழி பறித்ததை, ஆட்கள் மணலைக் கொண்டுவந்து சமன் செய்தனர். ஒருநாள் அடியேன் அம்மணலின்கண் உட்கார்ந்து கொண்டு கைவல்ய நவநீதத்தினை வாசித்துக் கொண்டு கையினுல் மணலைத் தடவிக்கொண்டிருந்தேன். அதனிடை ஓர் பொன்னுபரணத்துண்டு கண்ணுக்குத் தோன்றவும் அதனைச் சிறிதும் மதியாது மடத்தினுட் போயிருக்கும்பொழுது சுவாமிகளுடன் சிரவணங் கேட்டு வரும் சுடலையாடி பசுபதிஐயா திண்ணையில் வந்து நின்று, ' நீங்கள் உட்கார்ந்து கொண்டிருந்த இடத்தில் என்ன காணப்பட்டது' என்று வினவ, அடியேன்

மஞ்சள்நிற மண்கட்டி யிருந்தது என்றுரைக்க, துறவி கட்கு இதுதானே இலக்கணம் என்றுரைத்து அப் பொன்னுபரணத்தினை எடுத்துக்கொண்டார்.

---

## 13. சிரவண மனனத் திருப்தி

மடத்தின்கண் இரண்டு மூன்று மாதங்களாகச் சிரவணஞ் செய்துகொண்டு வழக்கம்போல் ஊருக்குட் சென்று பிக்ஷை யேற்றுவந்து குருமூர்த்திக்குப் படைத்து அடியேனும் இராமானந்த ஐயாவும் (அவர்கள் இலையுணவை) உண்பது வழக்கம். சிரவணம் முற்றிய தும் ஊரில் உள்ள பக்தர்கள் மகேசுர பூஜை மகிழ்வோடு புரிந்து இன்புற்றனர். ஒரு நாள் குருமூர்த்திகள் அம்பாசமுத்திரம் செல்வதற்குப் புறப்படும்போது அனை வர்க்கும் ஆசிர்வசனம் புரிந்தனர். அம்பாசமுத்திரம் போய் அடியேனும் இன்னொரு சாதுவும் பகவத்கீதை பாடம் கேட்டுக்கொண்டிருக்கும்போது அடுத்த கிராமத் தார்கள் வந்து குருமூர்த்திகளை மகேசுர பூசைக்கு அழைத்துக்கொண்டு போயினர். அடியேன் பொதிகை மலையில் இருந்துவரும் பாவநாசத் தீர்த்தமாடி, அகஸ்தி யராச்ரமம் சென்று வழிபட்டு அதற்கும் அப்பாலுள்ள கல்யாண தீர்த்தமாடி அகஸ்திய முனிவருக்குப் பரமே சுரன் காக்ஷி கொடுத்தருளிய பார்வதி திருமணக்கோலத் திருவுருவத்தினையும் கண்ணாரக் கண்டு தெரிசித்து அதற்கடுத்த உயர்ந்த பாறை மீதேறி ஆங்கு குகையின் கண் சுகமாய் நிஷ்டையிலமர்ந்தேன். நிஷ்டை கலைந்த போது பசியுற்றதினால் “சில நாட்கள் கழிந்திருக்க வேண்டும்” எனும் சிந்தனை யுணர்ச்சி ஏற்பட்டது. கணேசமூர்த்தி ஔவைபிராட்டிக்கு வேண்டியதை யளித் துத் திருப்தி செய்திருக்க, அடியேனுக்கும் அவ்வாறே செய்தருளுவார் என்று எண்ணியபோது வாழைப்பழத் தின் வாசனை உண்டாகப் பின்புறம் கைவைக்க ஒருசீப்பு வாழைக்கனி இருந்தது. பசிதீருவான் புசித்து எஞ்சி யுள்ள வாழைக்கனிகளை அவ்விடத்தில் வைத்துக் குகை

யினின்று இறங்கி விரைவாகப் பாவநாசக் கோயில்வழி அம்பாசமுத்திரம் சென்று குருமூர்த்திகளிடம் பகவத் கீதையை மீண்டும் படித்து நிறைவு செய்துகொண்டு அடியேன் குருமூர்த்திகட்குச் சாஷ்டாங்கமாக வணக் கஞ் செய்யவும் குருமூர்த்திகள் தம் திருக்கையால் பகவத் கீதை நூலினை எடுத்துத் தந்தருளினார்கள். அடி யேன் பெருமகிழ்வுடன் பெற்றுக்கொண்டேன்.

ஐயா கேளீர் தத்துவ ஞானியும் மஞ்ஞானிகள் போலச்,
செய்யாநின் றேன்கண்டே னுண்டேன் சென்றே னெனலாமோ,
பொய்யாம் விபரீதங்களவர்க்குப் போயின வென் றீரே,
மெய்யாம் பிரம விசார மிதன்றே வெளியா யுரையீரே.

ஒய்ந்த கனவிற் கண்ட பழங்கதை யோதுவன் வாதனையால்,
ஆய்ந்தறி வுற்றவ னப்படி செப்புவனு பாசனு மாகான்,
மாய்ந்ததனுடல் வேமளவும் விண்ணவன் மனிதனெனப் படுவான்,
வீய்ந்த சிதா பாசன் போமளவும் விவகாரந் தொடரும்.

கைவல்யம் 30—31

---

## 14. மீண்டும் தலயாத்திரையும் அற்புத நிகழ்ச்சிகளும்

பின்னர் குருசுவாமிகளிடம் விடைபெற்றுக்கொண்டு வல்லநாடு வந்துற்றுச் சிவமடாலயத்தில் தங்கி மறு நாள் ஸ்ரீவைகுண்ட மார்க்கமாக ஆழ்வார்திருநகரி சென்று பத்மாசனமிட்டுப் பராம்ருதம் உண்டு வளர்ந்த சடகோபாழ்வார் அமர்ந்தருளிய திருப்புளி தெரிசனஞ் செய்து, திருச்செந்தூர் சென்று இறைவனை வழி பட்டேன்.

சம்பந்தன் தாம் பிள்ளைத் தனத்தினிலே முலைப்பாலைப்
பகிராமே தாமேயுண்டு முத்தமிழும்பாடி அறம் முதியரானார்
சடகோபர் பராமிர்தை தாமே உண்டு தனித்தனி
ஒருகோடி வேதமாகத் தந்திட்டாரே. — அஞ்யவதைப் பரணி

நாழிக்கிணற்றின் அருகில் செபம் முடித்து நிஷ்டை செய்துகொண்டிருக்கும்போது ஒரு சந்நியாசி வந்து அடியேனுடைய நாமத்தைக்கூவி யழைத்து "விரைந்து வருக" என, அடியேன் திடுக்கிட்டெழுந்து அவர் பின் செல்ல பக்கத்திலுள்ள திருக்கோயில் ஷண்முக விலாசத் திற்குச் சென்று மாயமாக மறைந்துவிட்டனர். பின்னர் அடியேன் வெளிப்ரகாரம் வழியாக அவரைத் தேடிக் கொண்டு கொடிமரம் அருகில்வர, ஓர் சைவராக வந்து பிக்ஷை யேற்றுக்கொள்ளலாமென அழைத்தனர்.

அடியேனும் அவரும் முன் வந்த சந்நியாசியைத் தேடிக்கொண்டு மூலஸ்தானம் போய் அவரைக் காணப் பெருதவர்களாய் வெளியில் வந்தோம். சைவர் அடியேனை அழைத்துப்போய்ப் பந்தி நடுவில் உட்காரவைத்துப் போசனம் பண்ணுமாறு சொல்லி மறைந்தார். மறுநாள் நித்திய கடன்களை முடித்துப் பகல் பதினைந்து நாழிகை யளவில் பிக்ஷைக்குப் புறப்படும்போது முதல் நாள் வந்த சந்நியாசியைப்போல் திருமுருகப் பெருமான் தோன்றிக்கொண்டே சென்று திருக்கோயில் மதிலின் பக்கம் மறைந்துவிட்டனர்.

திரும்பிவருகையில் திருச்செந்தூரின்கண் உள்ள திருவாவடுதுறை மடாலயத்தில் பலர் வியப்புறத்தக்க செயல் நிகழ்ந்துள்ளது. அன்று செந்திலம்பதிக் கும்பா பிஷேக நாளாகும். அடியேன் திருவாவடுதுறை மடால யத்திற்குப்பக்கமாக வந்துகொண்டிருக்கும்போது அங்கு உறைகின்ற அடியவர்கட்கு அவர்கள் பரம்பரையில் வந்த பரமாசாரிய மடாதிபதிகள் போன்று தோன்றி யதும், அவர்கள் முறைப்படி வந்தனை வழிபாடாற்றி விசிறிகொண்டு வீசி இளைப்பாறச்செய்து கும்பாபிஷேக இடத்திலிருந்து மடத்திற்குரிய வண்டியில் அன்னம் கொண்டுவருமாறு செய்து அடியேனுக்குப் பேருபசாரத் துடன் பிக்ஷை பண்ணி வைத்தனர்.

---

## 15. மீண்டும் சாஸ்திரங்களும் பிற நூல்களும் பாடம் கேட்டல்

அடியேன் குலசேகரப்பட்டணத்திற்குச் சென்று சோமசுந்தர சுவாமிகளைத் தெரிசித்து அவர்கள்பால் வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகம், திரிபுராரகசியம், முதலிய வேதாந்த சாஸ்திரங்களும் நாலடியார், திருக்குறள், (காமத்துப்பால் நீங்கலாக) நீதி நூல்களும் பாடங்கேட்டு பிறகு வல்லநாடு மடத்திற்குப்போய், மறு நாள் குருமூர்த்தி சிவராமலிங்கபரமஹம்சர்பால், தந்திர கலை, மந்திரகலை, உபதேசகலை உள்ள ஒழிவிலொடுக்க நூலைப் பார்க்கவேண்டுமெனவேண்டக் குருசுவாமிகளே எழுந்தருளி வந்து ஒழிவில் ஒடுக்கம் எனும் ஞான நூலினை எடுத்துக் கொடுத்தருளினர்.

அந்நூலோடு வேறு சில நூல்களைச் சிரவணம் செய்துகொண்டிருக்கையில் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் குருபூஜை விழாப் பத்திரிகை வந்தது. வல்லநாடு பரம குருவாகிய அறிவானந்த சுவாமி சிவராமலிங்க பரமஹம்சர், சிதம்பர சுவாமி ஆகியோர்கட்குச் சிட்டாங்க, சிராங்க, த்ரியாங்க, சதுராங்க, பஞ்சாங்க, அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தேன். அவர்கள் அடியேனுக்குப் பூரண ஆசி புரிந்து பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் குருபூஜைக்குப் புறப்பட்டருளினர்.

அடியேன் கால் நடையாகவே கோயில்பட்டி முத்தானந்த சுவாமிகள் மடத்திற்குப்போய் அங்குள்ள தபோதனர்களை வணங்கி அவர்கள் தண்ணிய ஆசிகள் பெற்றுக்கொண்டேன். அண்ணுமலை சுவாமி, பூரணனந்த சுவாமி அங்குள்ள சாதுக்களுடன் சில நூல்களை ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கும் நாளில் திருக்கரிவலம்வந்தநல்லூர் சிவாலயத் திருப்பணி மாநகரி அருணசலஞ் செட்டியார் மோட்டாரில் மதுரைக் குட்டையா சுவாமி மடாலயம் அடைந்தேன். அம்மடத்தில் எழுந்

தருளியுள்ள அருப்புக்கோட்டை ஆத்மானந்த சுவாமிகள்பால் அடியவர்கள் ஞானவாசிட்டம் பாடங்கேட்க ஆரம்பித்தனர். அம்மடத்திற் பூசை புரிந்துகொண்டிருந்த சுவாமிகளும் பாடத்திற் சேர்ந்துகொண்டு அடியேனைப் இப்பணியினைத் தாங்களே மேற்கொள்ள வேண்டுமென வேண்ட, அங்ஙனமே சந்தோஷமெனக் கூறிப் பூஜை புரிந்துகொண்டு வந்தேன்.

---

## 16. வாசிட்டம் முதலிய நூல்கள் பாடம் கேட்டல்

காளையார்கோயில் மடாதிபதி செல்லப்ப சுவாமி சிஷ்யர் பொன்னையா சுவாமிகளும் சுப்பையாவும் அடியேனுங் கலந்து ஆத்மானந்த சுவாமிகள்பால் ஞானவாசிஷ்டம் பாடம் கேட்டுக்கொண்டிருக்கும்போது வசிஷ்டர் இராமச்சந்திரருக்கு இந்நூல் மனோநாச நூலாக உபதேசித்தபடியினால் உத்தம அடியேனுக்கு உலகநிலை தோன்றாமலிருந்தது. அந்நூல் முற்றியதும், ஈசுர கீதை, பிரம்ம கீதை, ஆதிசங்கரர் செய்த விவேகசூடாமணி இலக்ஷண விருத்தி முதலிய நூல்களையும் ஆத்மானந்த சுவாமிகளிடம் சிரவணஞ்செய்து முற்றியதும் அவர்களை இராமேஸ்வரம் அழைத்துக்கொண்டு சென்று புண்ணிய சமுத்திர தீர்த்தங்களாடி ஸ்ரீ பர்வதவர்த்தனியம்பாள் சமேத ஸ்ரீராமநாதேசுவரரை தெரிசித்துக்கொண்டு, தெப்பக் குளத்தில் படித்துறையில் உட்கார்ந்திருக்கும்போது, ஸ்ரீ ராமநாதர் ஆமையுருவில் வந்து படிமேலேறுதலும் தண்ணீரில் அடியேன் தள்ளிவிடலும், மீண்டும் யேறவே தண்ணீரில் தள்ளிவிட்டு நமஸ்கரித்துவிட்டுத் திரும்பினேன். இரயிலில் ஏறி, மதுரைக்குட்டையா சுவாமிகள் மடஞ்சேர்ந்து, அன்று மடாலயத்தின்கண் குருபூஜை நக்ஷத்திரமாதலின் ஆத்மானந்த சுவாமிகட்குப் பூமாலை சூட்டியலங்கரித்து அடியவர்களுடன் பூஜைபுரிய மகேசுர பூஜை அமோகமாக நிறைவேறியது.

---

## 17. பிரமசரிய விருதத்தை முயன்று காத்தல்

அடியேன் மதுரைத் தெருக்களில் கரபாத்திரமாக நின்றுகொண்டு "சாம்பசதாசிவ, சாம்பசதாசிவ சாம்ப சதாசிவ சாம்பசிவோம் ஹர!" என்று உச்சரித்துக் கொண்டு பிக்ஷ யேற்றுண்டு ஸ்ரீ மீனுக்ஷியம்மையார் கோயிலில் தெரிசனம் செய்து கொண்டிருந்தேன். அப்போது கூட்டத்தில் மங்கைப் பருவப் பெண்களைப் பார்க்கும் நேரத்தில் அப்பெண்களின் கொங்கைகளைக் கைகளால் பரிசிக்க வேண்டுமெனும் ஆசைவந்தது. அப்படி வருவதற்கு என்ன காரணம் என எண்ணுகையில் முற்பிறப்பு வாசனை வசத்தினுல் இளம் பசுங்கன்றுகள் காம விச்சையில்லாமலே ஒன்றினேடொன்று ஏறி விளையாடல் போல் குழந்தைப் பருவத்தில் சுரந்த கொங்கையினைக் கையில் பரிசித்துப் பால் பருகின பழக்கம்போல் இப்போது பழைய வாசனை வந்தது.

அதனைத்தடுக்க அடியேன் இராதாகிருஷ்ணனை உபாசனை செய்ததினுலும் அநேக அடியவர்களின் திருவடி தீண்டிய அருளினுலும் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரேசப் பெருமான் திருவருளினுலும் சற்குருவின் கிருபாகடாக்ஷத்தினுலும், ஸ்ரீமீனுக்ஷியம்மன் கோயிலில் பெண்கள் கூட்டத்தில் ஆபரணங்களைக் கத்திரித்து திருடவந்த வேடதாரிகளைப்பிடித்து கடுமையாகத் தண்டிப்பதைப்பார்த்து நமக்கும் இத்துன்பம் நேருமல்லவா என்ற விவேகத்தால் பிரம்மசரிய விரதத்தைக் காப்பாற்ற நேர்ந்தது.

---

## 18. பழனியில் நிகழ்ந்த அதீதக்காக்ஷிகள்

பழனிக்குப்போகும் வழியில் சோழவந்தானில் இலக்கண வித்துவான் ஷண்முகம் பிள்ளையுடன் உரையாடிப் பக்தர்களின் பிக்ஷயை ஏற்றுக்கொண்டு பழனிக்குப் போய் சரவணப் பொய்கையில் தீர்த்தமாடி, மலையேறி,

தருளியுள்ள அருப்புக்கோட்டை ஆத்மானந்த சுவாமிகள் பால் அடியவர்கள் ஞானவாசிட்டம் பாடங்கேட்க ஆரம் பித்தனர். அம்மடத்திற் பூசை புரிந்துகொண்டிருந்த சுவாமிகளும் பாடத்திற் சேர்ந்துகொண்டு அடியேனைப் இப்பணியினைத் தாங்களே மேற்கொள்ள வேண்டுமென வேண்ட, அங்ஙனமே சந்தோஷமெனக் கூறிப் பூஜை புரிந்துகொண்டு வந்தேன்.

---

## 16. வாசிட்டம் முதலிய நூல்கள் பாடம் கேட்டல்

காளையார்கோயில் மடாதிபதி செல்லப்ப சுவாமி சிஷ்யர் பொன்னையா சுவாமிகளும் சுப்பையாவும் அடியே னுங் கலந்து ஆத்மானந்த சுவாமிகள்பால் ஞானவாசிஷ் டம் பாடம் கேட்டுக்கொண்டிருக்கும்போது வசிஷ்டர் இராமச்சந்திரருக்கு இந்நூல் மனோநாச நூலாக உப தேசித்தபடியினால் உத்தம அடியேனுக்கு உலகநிலை தோன்றுமலிருந்தது. அந்நூல் முற்றியதும், ஈசுர கீதை, பிரம்ம கீதை, ஆதிசங்கரர் செய்த விவேகசூடாமணி இலக்ஷண விருத்தி முதலிய நூல்களையும் ஆத்மானந்த சுவாமிகளிடம் சிரவணஞ்செய்து முற்றியதும் அவர்களை இராமேஸ்வரம் அழைத்துக்கொண்டு சென்று புண்ணிய சமுத்திர தீர்த்தங்களாடி ஸ்ரீ பர்வதவர்த்தனியம்பாள் சமேத ஸ்ரீராமநாதேசுவரரை தெரிசித்துக்கொண்டு, தெப் பக் குளத்தில் படித்துறையில் உட்கார்ந்திருக்கும்போது, ஸ்ரீ ராமநாதர் ஆமையுருவில் வந்து படிமேலேறுதலும் தண்ணீரில் அடியேன் தள்ளிவிடலும், மீண்டும் யேறவே தண்ணீரில் தள்ளிவிட்டு நமஸ்கரித்துவிட்டுத் திரும்பினேன். இரயிலில் ஏறி, மதுரைக்குட்டையா சுவாமி கள் மடஞ்சேர்ந்து, அன்று மடாலயத்தின்கண் குரு பூஜை நக்ஷத்திரமாதலின் ஆத்மானந்த சுவாமிகட்குப் பூமாலை சூட்டி யலங்கரித்து அடியவர்களுடன் பூஜைபுரிய மகேசுர பூஜை அமோகமாக நிறைவேறியது.

---

## 17. பிரமசரிய விருதத்தை முயன்று காத்தல்

அடியேன் மதுரைத் தெருக்களில் கரபாத்திரமாக நின்றுகொண்டு "சாம்பசதாசிவ, சாம்பசதாசிவ சாம்ப சதாசிவ சாம்பசிவோம் ஹர!" என்று உச்சரித்துக் கொண்டு பிக்ஷை யேற்றுண்டு ஸ்ரீ மீனுக்ஷியம்மையார் கோயிலில் தெரிசனம் செய்து கொண்டிருந்தேன். அப்போது கூட்டத்தில் மங்கைப் பருவப் பெண்களைப் பார்க்கும் நேரத்தில் அப்பெண்களின் கொங்கைகளைக் கைகளால் பரிசிக்க வேண்டுமெனும் ஆசைவந்தது. அப்படி வருவதற்கு என்ன காரணம் என எண்ணுகையில் முற்பிறப்பு வாசனை வசத்தினுல் இளம் பசுங்கன்றுகள் காம விச்சையில்லாமலே ஒன்றினுென்று ஏறி விளையாடல் போல் குழந்தைப் பருவத்தில் சுரந்த கொங்கையினைக் கையில் பரிசித்துப் பால் பருகின பழக்கம்போல் இப்போது பழைய வாசனை வந்தது.

அதனைத்தடுக்க அடியேன் இராதாகிருஷ்ணனை உபாசனை செய்ததினுலும் அநேக அடியவர்களின் திருவடி தீண்டிய அருளினுலும் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரேசப் பெருமான் திருவருளினுலும் சற்குருவின் கிருபாகடாக்ஷத்தினுலும், ஸ்ரீமீனுக்ஷியம்மன் கோயிலில் பெண்கள் கூட்டத்தில் ஆபரணங்களைக் கத்திரித்து திருடவந்த வேடதாரிகளைப்பிடித்து கடுமையாகத் தண்டிப்பதைப்பார்த்து நமக்கும் இத்துன்பம் நேருமல்லவா என்ற விவேகத்தால் பிரம்மசரிய விரதத்தைக் காப்பாற்ற நேர்ந்தது.

---

## 18. பழனியில் நிகழ்ந்த அதீதக்காக்ஷிகள்

பழனிக்குப்போகும் வழியில் சோழவந்தானில் இலக்கண வித்துவான் ஷண்முகம் பிள்ளையுடன் உரையாடிப் பக்தர்களின் பிக்ஷையை ஏற்றுக்கொண்டு பழனிக்குப் போய் சரவணப் பொய்கையில் தீர்த்தமாடி, மலையேறி,

ஆண்டவரைக் கண்குளிரக்கண்டு தெரிசித்து அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் முற்றும் பாராயணஞ் செய்து கொண்டிருக்கையில் அங்குள்ள ஒரு பக்தனைப் பழனியாண்டவருக்கு அர்ச்சனை செய்யச்சொல்லியதும் ஆண்டு கனவிலும் நனவிலும் நிகழ்ந்த அற்புதங்கள் பலவாகும். அவையனைத்தும் சிருஷ்டிக்கடவுளுக்குத் தான் தெரியவரும்.

---

## 19. சாந்தலிங்கர் மடத்தில் சில நூல்களில் ஐயம் நீங்குதல்.

பின்னர் பேரூர் சாந்தலிங்கசுவாமிகள் குருபூஜைக்குப்போய் ஆங்குள்ள அடியவர்களையும் மூலஸ்தானம் சாந்தலிங்க சுவாமியையும் தரிசிக்கும்போது சற்குருமூர்த்திகளிடம் பாலபோதம் முதலிய சில சாஸ்திரங்களையும் சிரவணஞ் செய்ய நேர்ந்தது.

முருகதாஸ் சுவாமிகள் என்ற தண்டபாணி சுவாமிகள் அருளிய புலவர் புராணத்தினை வாசித்து அப்புராணத்தின் பொருள் புலப்படாத சொற்களையெல்லாம் மடாதிபதி மாணிக்க சுவாமிகளிடம் வினவித்தெளிந்தேன். அங்கே ஆறுமுக சுவாமிகளும் அடியேனும் பூஜை புரிந்து கொண்டிருக்கையில் ஆறுமுக சுவாமிகளிடத்தில் திருவாசகத்திற் சிவபுராணங் கேட்டின்புற்றேன்.

---

## 20. சிரவணபுரம் மடத்திற்குத் தாயாருடன் செல்லல்.

அடியேனைப்பெற்றெடுத்த தாயார் சாந்தலிங்கசுவாமிகள் மடத்திற்கு வந்துற்றனர். அவர்தம் திருமுகதரிசனங் கண்டு அடியேன் மாதா திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவருடைய ஆசி பெற்றுக்கொண்டேன். அன்னையார்

அடியேனது ஜாதகக் குறிப்பினை விரிவாக வரைவதற்குப் பத்து ரூபாயும் வீட்டின்கண் பூஜையிலுள்ள திருவிளையாடற் புராணச் செய்யுளும் கொண்டுவந்து மடாதிபதி மாணிக்க சுவாமிகளிடம் கொடுத்தனர். மறுநாள் அன்னையார் பெரியோர்பால் தனக்கு அனுக்ரகம் பண்ணி வைக்குமாறு வேண்டலும் சிரவணபுரம் கௌமார மடாலயம் முருகதாசசுவாமிகள் மாணவராகிய ஸ்ரீமத் இராமாநந்த சுவாமிகள் ஆண் பெண் இருபாலாருக்கும் உபதேசம் புரிவதை அடியேனும் கேள்வியுற்றிருந்தபடியினல் அடியேன் தாயாரை அழைத்துக்கொண்டு சிரவணபுரம் போய்ச் சேர்ந்தோம். அங்கிருந்தவர்கள் அடியேனைப் பார்த்துத் தனியாக வருபவர் ஏன் தாயாரையும் அழைத்து வந்துள்ளீர்கள் ? என்று கேட்டனர்.

அதற்கு அடியேன் இங்குள்ள இராமாநந்த சுவாமிகளிடம் அனுக்ரஹம் பண்ணி வைக்கும்படி அன்னையார் கேட்டதால் அழைத்து வந்தேன், எனலும், இங்குள்ள இராமாநந்த அடிகளார் உபதேசம் பண்ணி வைப்பதில்லை; ஆகையினல் தாங்களும் இங்கு இருக்கக்கூடாது. இவையெல்லாம் சந்நியாசிக்கு எதற்காக வேண்டும் எனக்கடின வாக்காய் மறுப்புரைத்ததால் தாயாரை வந்த வண்டியிலேயே ஏறச்செய்து சின்னவேடன்பட்டியெனும் கிராமத்திலுள்ள ஒரு வீட்டில் இறங்கச்செய்து அவர்களுக்கு சிவன் திருவுருவம் உபதேசித்து ஆசிபெற்று மீண்டும் சிரவணபுரம் கௌமார மடாலயத்தில் வந்து அங்கிருந்த சுந்தர சுவாமிகளையும் அடியவர்களையும் வணங்கி அங்கு தங்கியிருந்து மறுநாள் இராமாநந்த சுவாமிகளைத் தரிசிக்க வேண்டுமென்றேன். சுந்தர சுவாமியிடம் சொன்னதற்கு, சுவாமிகள் திருமடாலத்தினுள் இருக்கின்றனர்; அவர்களைத் தாங்கள் காண்டற்கியலாது எனக் கழறினர். அடியேன் சிவராமலிங்க பரமஹம்சருடைய சீடரான முத்துக்குமாரசாமி வந்து காண்டற்கிருக்கின்றதாக அறிவியுங்கள்! பின்னர் அவர்கள் உத்திரவுப்படி நடந்து கொள்ளக்கூடும் என்றுரைக்க அதற்கவர்கள் பதில்பேசாமல் மடத்து உள்ளேசென்ருர்.

சிவன்றிரு வுருவா மைந்து சின்மய வெழுத்தும் வாழி
நவந்தரு நீறும் வாழி நயனநன் மணியும் வாழி
கவின்றருங் குமார தேவன் கழலிணை யிரண்டும் வாழி
அவன்றிரு வடியார் தம்மோ டாருயி ரனைத்தும் வாழி. — குமாரதேவர்,

## 21. கௌமார மடத்தில் சஷ்டிக் கவச பாராயணம்

அம்மடத்தில் ஒரு பக்கம் அமர்ந்து பாலன் தேவ ராயர் அருளிய கந்தர் சஷ்டிக் கவசத்தினைப் புரட்டாசி மாதம் சூரிய கிரஹணத்தன்று முப்பத்தாறு முறை உருப் போட்டதினால் திருமுருகன் திருவருள் சித்திக்கப்பெற்று அஷ்டதிக்கிலுள்ளவர்களும் முருகன் அருட் பிரசாதத் தால் வந்து அடிபணிவர் என்னும் ஆப்த வாக்யத்தின் படி அதனை உருப்போட்டுக்கொண்டிருந்தேன்.

மறுநாள் முற்பகல் வரை அங்கு தங்கியிருக்கும் போது அங்குள்ள அடியவர்கள் தாங்கள் பிக்ஷை பண் ணிக்கொள்ளுங்கள் என்றதற்குப் பதில் இராமாநந்த சுவாமிகளை தெரிசிக்க வேண்டுமென்றேன். அதற்கு அவர்கள் அலக்ஷியமாக மடத்தினுள் சென்றார்கள். அடியேன் இஃதென்னே! என வியப்புற்றுப்பேரூர் சாந்த லிங்க சுவாமிகள் மடாலயம் சேர்ந்து பூசை பணிவிடை செய்து கொண்டு பல மாதங்கள் தங்கியிருந்தேன்.

---

## 22. சாந்தலிங்கர் குருபூஜை விழாவில் சற்குரு சொற்பொழிவு

சாந்தலிங்க சுவாமிகள் குருபூஜை விழா மாசி மகத் தில் வெகு சிறப்பாக நடைபெற மடாதிபதி மாணிக்க சுவாமிகள் திருநெல்வேலி சங்கர சுப்பா சாஸ்திரியார், சென்னை வீரசுப்பைய சுவாமிகள், ஞானியார் மாணவர், மணம்பூண்டி ம. ரா. குமாரசுவாமி பிள்ளை, வல்லநாடு சிவராமலிங்க பரமஹம்சர் ஆகிய பல ஜில்லா வித்வான் களை ஆண்டு வரவழைத்து மிகமிகச் சீரியதாகச் சொற் பொழிவுகள் நடைபெறுவித்தனர்.

இங்ஙனம் நிகழ்ந்த மூன்று நாட்களுள் முதல் நாள் சற்குரு சிவராமலிங்க பரமஹம்சர் சொற்பொழிவில் வந்த பாடல் ஒன்று

''வாழி நெஞ்சமே சென்றிடேனின்றிதோர் வார்த்தை யெற்குரை செய்வாய்
கீழியாமியற்றுயர்தவத் திவ்வுடல் கிடைத்த தன்றோ மற்றீ
தூழி காலமிங் கிருக்குமோ நீயுமோர்ந்துணை யெனினுளபோழ்தே,
சூழு மேழ்பவந் துடைத்தல்செய் யாயிதென் றெழுதரன் றுணைத்தாளே.''

என்னும் சாந்தலிங்க சுவாமிகளருளிய வைராக்ய சதகத்தின் முதற் செய்யுளுக்குச் சிவராமலிங்க பரமஹம்சர், பதவுரை, விசேடவுரை, கருத்துரை, ஆகியவற்றினைப் பெருமக்கட் கூட்டத்திற்குத் தக்கபடியாக 10 வித சொற்குற்றமில்லாமல் பசு மரத்தாணி பதித்தாற் போலப் பலரும் அறியச் சொற்பொழிவு ஆற்றியருளிய பின்னர், வல்லநாடு சிவமடாலயம் எழுந்தருளினர்.

---

## 23. அடியேனைச் சாந்தலிங்கர் மடத்தில் இராமாநந்தர் காண்டல்

சாந்தலிங்க சுவாமிகள் மடத்தின் தென்புறம் ரோட்டிற்கு அருகிலுள்ள தோட்டத்தில் அப்பாச்சிக்கவுண்டனூர் மாரிமுத்துக் கவுண்டர், சிரவணபுரம் இராமாநந்த சுவாமிகட்காகக் குருபூஜைக் கட்டிடம் அமைத்து அதற்கு நன் முகூர்த்தத்தில் கிரகப் பிரவேசம் புரிய அன்றைய தினம் சிரவணபுரம் மடத்திலிருந்து இராமாநந்தசுவாமிகளும் மற்றவர்களும் காரிலும் வண்டியிலும் வந்து கூட்டமாகச் சாந்தலிங்க சுவாமிகள் மடத்தில் இறங்கினர். அப்பொழுது குரு பூஜா காலம் ஆனபடியால், அடியேன் சாந்தலிங்க சுவாமிகள் மூலஸ்தான லிங்கத்திற்கு அபிஷேக அலங்கார அர்ச்சனை பூஜைகள் செய்து கற்பூர ஆராத்தி எடுத்தேன்.

சிரவணபுரம் கௌமார மடாலய இராமாநந்தசுவாமிகள், கந்தசாமி சுவாமிகள், சுந்தர சுவாமிகள் முதலிய

எல்லா அடியவர்களும் தீபாராதனைத் தெரிசனம் பண்ணிக்கொண்டு சாந்தலிங்க சுவாமிகள் சன்னிதியில் சாஷ்டாங்கமாக வணங்கி அடியேனிடத்தில் திருநீறு பெற்றணிந்து கொண்டனர். அதன் பிறகு எல்லாரும் கிரகப்பிரவேச வைபவத்திற்கு எழுந்தருளினுர்கள். சிவ சரவணபவனை நம்பிச் சஷ்டிக்கவசத்தினை நாள்தோறும் பாராயணம் பண்ணிச் சடாக்ஷர மனுவினைச் செபித்து உருப்போடுபவர்க்கு அதிற் கூறியபடி சித்தியாகும் என்பதற்குச் சாக்ஷி, சிரவணபுரம் கௌமார மடாலயம் இராமாநந்த சுவாமிகளை முன்னர் அடியேன் தரிசிக்கக்கூடாதென மறுத்த சுந்தர சுவாமி, கந்தசாமி சுவாமி முதலானவர்கள் அடியேனிடம் திருநீறு பெற்றுச் சென்றதேயாம்.

---

## 24. பிக்ஷையும், சிக்ஷையும், ரக்ஷையும்

இங்ஙனமாக அடியேன் சாந்தலிங்க சுவாமி மடத்திலிருந்து பேரூர் தெலுங்கப்பாளையத் தெருவுக்குக் கைப் பிக்ஷைக்குப் போனபோது அவிடமிருந்த ஒரு உடையார் கோபக்குறியோடு தடிக்கம்புடன் அடியேனிடம் ஓடி வந்தார். வந்ததும் தடிக்கம்பை கீழே போட்டு கைகூப்பி நமஸ்கரித்து சென்றனர். அது குரு கிருபையேயாம். அதைப் பார்த்த அவர் மனைவி அடியேனுக்குப் பாத பூஜை செய்து கைப் பிக்ஷயளித்துக் கணவன் சுவாமிகளைத் தடியால் அடிக்க வந்ததற்கு அவர் முன் ஒரு வேடதாரியோடு சேர்ந்து இருவரும் கஞ்சாக் குடித்துப் போதையுற்றிருக்கும் போது உடையாருடைய விலையுயர்ந்த மோதிரம் கவர்ந்து கொண்டு வேடதாரி காணமற் போய்விட்டது தான் காரணம் என்று சொல்லி வணங்கி அடியேனிடம் திருநீறு பெற்றுச் சென்றனர்.

---

உள்ளத்திருந்தும் ஒளித்தான் பரங்குறவன்
கள்ளந் தனைத்தவிர்த்துக் காட்டினுன் வள்ளல்
அறிவான கோலமோ அக்கோலங் காட்டும்
குருவான கோலமோ கூறு. — பாடுதுறை.

---

## 25. அடியேன் வல்லநாட்டையடைதல்

கோயம்புத்தூர் பேரூரிலிருந்து பிரயாணப்பட்டு ரயிலேரி திருநெல்வேலி வல்லநாட்டையடைந்தேன். அவிடம் அமர்ந்தருளியிருந்த சற்குரு சுவாமிகளையும் அடியார் பெருமக்களையும் வணங்கி அவர்தம் அருள்பெற்று அங்கேயமர்ந்தேன்.

மறுநாள் அரிவானந்த சுவாமி மூலஸ்தான லிங்கத்துக்கு அபிஷேக ஆராதனை, பஜனைக்கோஷ்டி, சொற்பொழிவு, அன்னதானம் முதலியவை சிறப்பாக முற்றியபின் அடியார்க்கு வஸ்திரதானம் செய்த போது அடியேனுக்கும் வஸ்திரம் அளிக்கப்பட்டது. அடியேன் இதற்குமுன் குருபூஜைக்குச் சென்றவிடங்களில் கொடுக்கப்பெற்ற ஆடைகளை எல்லாம் கீளோடு கோவணமும் அல்லது ஆடையும் ஆகக் கேட்பவர்கட்குக் கிழித்துக் கொடுக்கும்போது அங்குள்ள ஒருவர் குருவினிடம் கூற, குருமூர்த்தி சுவாமிகள் அடியேனைப் பார்த்து, நீ பெரிய தான தர்மம் புரிபவனே? என்று கேட்கச் சுவாமிகளின் திருவடி வணங்கி அடியேன் எஞ்சியுள்ள ஆடையைப் பயபக்தியுடன் எடுத்துக் கொண்டேன்.

மறு நாள் துவாததசநாமசங்கீர்த்தனம், சொரூப சாரம், திருச்சிற்றம்பல நாடிகள் அருளிய திருச்செந்தூர் கிரிகை யோக-ஞான அகவல் தாற்பரியம் சுவாமிகளிடம் பாடங்கேட்டுக்கொண்டேன்.

---

## 27. குருமூர்த்தி யாத்திரை பொருட்டுப் பெங்களூருக்கு அனுப்பப்பெறல்

சிவராமலிங்க பரமஹம்சர் வடதேச யாத்திரை புறப்படுந்தருவாயில் அடியேன் பாதசேவை செய்து விபூதி

பெற்றுக்கொண்டேன். அவர்கள் யாத்திரை சென்றபின் அடியேன் திருநெல்வேலி ஜில்லா அம்பாசமுத்திரம் சென்று, விநாயகர் புராணம், தாயுமானவர் பாடல், கோயிலூர் முத்துராமலிங்க ஸ்வாமிகள் திருவாக்கு சுபானுபவத் திருவாக்கு, பாராயண சிந்தாமணி இல க்ஷண விருத்தி, பக்தவிஜயம் முதலிய நூல்களை வாங்கி அவிடமிருந்த பக்தர்களைப் படிக்கும்படிச் செய்தும் வட நாட்டு யாத்திரை சென்ற சிவராமலிங்க பரமஹம்சர் ஸ்ரீசைலம் என்கிற 'திருப்பர்வதம்' போயிறங்கும் நந்தியால் என்னும் புகைவண்டி நிலையத்திலிருந்து அம்பாசமுத்திரத்திலிருக்கும் சுந்தர ஐயாவைப் பெங்க ளூருக்குத் தம்மிடம் வரும்படி திருமுகம் அனுப்ப, அம்பாசமுத்திரத்தில் அடியேன் இருந்தமையால் அதற்கு முந்தின நாள் விநயகப் பெருமான் திருக்கோயில் வழி பட்டு சித்தி விநயகர் என்று சீர்பெறுமாறு செப்புகின் றனரே, அடியேன் காசு பணம் தொடாதவன் ஆயிற்றே, ஹரித்துவாரத்தில் பகீரதனுக்காக அறுபது வருஷத் திற்கு ஒரு முறை ஆகாய கங்கை பிர்ம்ம குண்டத்தில் பிரவேசிக்கும் ஐதீகமாகிய கும்பமேளாவிற்குச் சென்று சாதுக்களைத் தெரிசிக்க வேண்டுமே; இவற்றைச் சித்தி விநயகர் சித்தி செய்தருள்வாராயின் சித்தி விநயகர் என்று சிந்திப்பேன்; என கணபதியை வேண்டிக் கொண்டேன். அதற்கு ஒற்றுமையாகச் சுந்தர ஐயாவை வடதேசம் வரும்படி வேலாயுத முதலியாருக்கு வந்த கடிதத்தைக் காட்ட சுந்தர ஐயா தெலுங்கு சிறிதும் தெரி யாத யான் போக இயலாது என்று மறுத்தமையால் வேலாயுத முதலியார் பல அன்பர்களோடு திருமுகத்தினை எடுத்து வந்து அடியேனிடம் சுந்தர ஐயா போகச்சம்மதி யாததால் சுவாமிகள்தான் போய்வரவேண்டும் எனச் சில சாமான்களைப் பெட்டியில் வைத்து பூட்டி அடியே னுக்கு அம்பாசமுத்திரத்திலிருந்து பெங்களூருக்கு ரயில் டிக்கெட் வாங்கிக் கூட்டமாக வந்திருந்து வந்தனை வழி பாடு செய்து ரயிலில் ஏற்றியபின் திரும்பினார்கள். அடி யேன் நெடுந்தூர பிரயாணத்திற்குப் பிறகு நலமாகப்

பெங்களூர் ஸ்டேஷனில் இறங்கினேன். அவ்விடம் சற்குருநாதன், நீ காசு பணம் தொடாதவனுயிற்றே !எப்படி வந்தாய் ? என வினவ, அடியேன் வேலாயுத முதலியார் டிக்கட் வாங்கித்தர, சுவாமிகளுடைய சாமான் பெட்டியைக் கொண்டுவந்தேன்; என்று சொல்லி அம்பாசமுத்திரம் வேலாயுத முதலியார் கொடுத்த கடிதத்தைக் கொடுத்து திருவடி வணங்கினேன்.

---

## 28. குருநாதரிடம் காவி கௌபீனம் பெறுதல்

அடியேன் குருமூர்த்திகளிடம் அந்நிருபத்தினைச் சமர்ப்பித்ததும், அஃதினைக்கண்ணுற்ற, சுவாமிகள் "நீ காசு தீண்டாதவனுயிற்றே; எங்ஙனம் எனக்குப் பணிவிடை புரியப்போகின்ருய்" என்று வினவலும், 'சுவாமிகள் விருப்பப்படியே பணிவிடை புரிவேன்' எனத்திருவடியை நமஸ்காரம் செய்து, குருமூர்த்திகளுடன் மடத்திற்குச் சென்று சாதுக்களுடனிருந்த அடியேனுக்குக் காவிக் கோவண லங்கோடு கொடுத்துக் குருமூர்த்தி ஆசிமொழி புகன்றருளினர்.

---

## 29. வடதேச யாத்திரைத் தொடர்பு

பெங்களூரிலிருந்து ஹரித்வாரத்திற்கு நேரே டிக்கட் எடுத்து ரயில் ஏறிக் குருசுவாமிகளுடன் அடியேனும் நிழல்போல் தொடர்ந்து துவாரகை முதலிய இடங்களில் இறங்கிச் சுவாமிகட்குத் திருவமுது செய்துகொண்டு ஹரித்வாரம் போய்ச்சேர்ந்தசமயம் மாசிமக நாளாகையால் தீர்த்தமாடவந்த சாதுக்கள் கூடும் கும்பமேளாவில் பரமஹம்சர் கூட்டத்தோடு கூடித் தீர்த்தமாடி, ரிஷிகேசத்திலும் மூன்று மாதங்கள் தங்கியிருந்து ஹரித்வாரத்திலிருந்து திரும்புகையில் நைமிசாரண்யம் முதலிய புண்ய ஸ்தலங்களைத் தெரிசித்தும் சரயூ நதியில் தீர்த்தமாடி அயோத்தியைத் தரிசித்தும், வழியில் உள்ள தீர்த்தங்கள் ஆடியும் தலங்களைத் தரிசித்தும் காசிப்பதியினையடைந்து குருசுவாமிகளுடன் சில மாதங்கள் தங்கியிருந்தேன்.

அங்கிருக்கும் நாளில் ஓடத்தில் ஏறிக் கரைக்கண்ணுள்ள அரிச்சந்திரன் கட்டம் முதலான அறுபத்துநான்கு தீர்த்தக்கட்டங்களும், மணிகர்ணிகா படித்துறை முதலியபுண்ணிய தீர்த்தங்களாடியும் ஸ்ரீ காசி விஸ்வநாதர், ஸ்ரீ விசாலாக்ஷி, அன்னபூரணிதேவி, துண்டி விநயகர், வைரவர் முதலிய கடவுளரையும், கேதாரீசுரரையும் அம்பாளேயும் முறையோடு வணங்கியும் திருப்பனந்தாள் மடம், திருவாவடுதுரை மடம் முதலியவற்றைத் தரிசித்தும் கங்கைக்கு அக்கரையிலுள்ள வியாசர் கட்டம் பிரயாகை த்ரிவேணி சங்கமம் முதலிய துங்க தீர்த்தங்களிலும் நீராடி ஆங்குள்ள தலங்களேயும் பெரியோர்களேயும் தெரிசித்துக் கொண்டு மற்றும் காசியம்பதிக்குச்சென்று மகான்களேக் கண்டு வணங்கினேம். பிறகு புறப்பட்டு வழியிலுள்ள ஜகந்நாதம், புஷ்கரணி முதலிய இடங்களுக்குச் சென்று வழிபட்டுக் கண்ணபிரானேச் சேவித்துப் பகவானுக்கு நிவேதிக்கப்பட்ட திருத்தளிகையினே வாங்கிச் சாதுக்களுடன் அமுதுண்டு ரயிலேறி வழியிடைப்பட்ட ஸ்தலங்களேயும் தீர்த்தங்களேயும் கண்டு தெரிசித்து சென்னேயம்பதிக்கண்ணுள்ள சூளே ஆனந்தாச்சிரமம் வந்து சேர்ந்தோம்.

---

## 30. யாத்திரை முடிவில் சாந்தலிங்க சுவாமி மடாலயம் சேர்தல்

சென்னே சூளே அடியார்களுடன் தங்கி யாத்திரைக்கு பக்தர்களால் அனுப்பப்பட்ட பணத்தைக்கொண்டு மகேசுவர பூஜை முடிந்தபின்னர் வணங்கி புறப்பட்டு ரயிலேறிக் கோயமுத்தூரடைந்து மேலேச்சிதம்பரம் பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் மடாலயம் வந்து சேர்ந்தோம். பல மாதங்கள் இடைவிடாது யாத்திரை புரிந்தமையால் திருமேனிகள் இளேப்பும் களேப்புமுற்றிருந்தபெற்றியினல் அம்மடாலயத்தின் கண்ணேயே அயர்ச்சி நீங்கும் வரை தங்கியிருந்தோம்.

அவ்விடம் குருசுவாமிகளுடன் தங்கியிருக்கும் நாட்களில் ஒருநாள் அடியேன் குருசுவாமிகளைப் பணிந்து, அடியேன் மனோ வாக்குக் காயாதிகளைத் தேவரீருக்கு நீர் வார்த்துச் சத்தியமாகத் தத்தஞ்செய்து கொடுத்துவிட வேண்டுமென்று பலநாள் உள்ளத்திலிருந்தும் பயபக்தியினால் விண்ணப்பிக்காமல் இருந்துவிட்டேன் என்று விம்மி விம்மி யழுதேன். சற்குருசுவாமிகள் அடியேனைப் பார்த்து, உபதேசம் புரிந்து ஆட்கொண்ட போதே பரமேஸ்வரனாகிய எனக்கு மனம், வாக்கு, காயம் ஆகியவற்றினை ஒப்படைத்துவிட்டனை ; என்று ஆதரவு கூறித் தம் திருக்கரத்தினைக்கொண்டு அடியேனது உடலினைப் பரிசித்துச் சுகவடிவாயிருப்பாய் என்று ஆசீர்வதித்துப் 'பகவத் கீதை' நாகரலிபியில் எழுதிய புஸ்தகத்தினை அடியேனுக்கு அளித்தருளினர். இந்நூலானது காசியிலிருந்த ஓர் சாதுவினால் உரை வரையப்பட்டதாகும். ஞானவாசிட்டம், பகவத்கீதை முதலிய நூல்களை நன்றாய் பாடம் கூறிக்கொண்டிருந்தேன்.

மறுநாள் அடியேன் கரபாத்திர பிக்ஷை பண்ணிக்கொண்டு அம்மடாலயத்தின் திண்ணையின்கண் தங்கியிருந்து அங்குள்ள ஓர் சுவாமிகளுடன் சாஸ்திர விஷயங்களைப்பற்றிச் சிரவணம் செய்துகொண்டிருக்கும் சமயம் குருசுவாமிகள் மடத்தினுள்ளிருந்து வந்து அடியேனது முதுகினைத் தடவிக்கொடுத்து அடியேனை நோக்கி, நினக்கு நிகர் நீயே யாவாய்; என்றுரைத்து அருளும்போது மனோ சிந்தனைகள் யாவும் மெய்ம்மறந்து இருக்குமாறு ஏற்பட்டுச் சில நாழிகை சென்று நிஷ்டை தெளிந்தது.

---

## 31. குருவருளும் அஷ்டலக்ஷிமி தெரிசனமும்

சற்குரு சுவாமிகள் திருவாரூர்சற்குரு தக்ஷிணாமூர்த்தி குருபூஜை விழாவிற்குச் செல்ல இருக்க, அடியேனும் அவர்களுடன் தொடர்ந்து வருவதாகத்திருவடி வணங்க அதற்குக் குருநாதன், நீ இவிடம் இருக்கினும் இருக்கலாம்;

தனித்திருக்கினும் இருக்கலாம்; மனே விவேக திடமாக இரு; என்று அநுக்கிரகித்துப்புறப்படலாயினர். சற்குரு சுவாமிகள் உத்தரவின்பிரகாரம் அடியேன் சாந்தலிங்க சுவாமிகள் மடாலயம் பூஜைப்பணிவிடையும் செய்து சில நூல்களை ஆராய்ச்சிசெய்து பின்னர், ஓர் நாள் மடாதிபதி மாணிக்க சுவாமிகளிடம் வணங்கி விடைபெற்றுக் கொண்டு மலையாள தேசம், பாலக்காடு மங்கரைக் கண்ணப்பரைக் கண்டு அவர் திருவடியில் அடியேன் சடைமுடிபொருந்தும்படி வணங்கினேன். அவர்கள் அடியேனுடைய திருமுடியைப் பரிசித்து அர்த்தோதயம், மகோதயம் போல இருந்தது: என்று அந்த பிறவி அந்தகராகிய கண்ணப்ப மகாத்மா கூறினர். அங்கு சாதுக்கள் கூட்டத்திலிருந்து பிக்ஷை பண்ணிக்கொண்டு ஆதி சங்கரர் அவதார ஸ்தலமாகிய காலடியிலுள்ள மடாலயத்து அன்பர்களைக்கண்டு, பின்னர் ஆச்சார்ய சுவாமிகள் அன்னையை அக்கினிப் பிரவேசம் செய்வித்த ஆலயத்தில் ஸ்ரீ ஆதி சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்களால் ஸ்தாபித்த ஸ்ரீ சிருங்கேரி மடத்து 33-வது மடாதிபதியாக ஜகத்குரு ஸ்ரீ சச்சிதானந்த அபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளால் இப்பால் சுமார் 60 வருஷங்கட்குமுன் பிரதிஷ்டிக்கப்பட்ட தன, தான்ய, வீரிய, சந்தான, ஸௌபாக்ய, இச்சா, ஞான, கிரியா, என்னும் அஷ்டலக்ஷிமிகளையும் ஆனந்தமாய்த் தெரிசனம் செய்து பிக்ஷை பண்ணிக்கொண்டு புறப்பட்டு வரும்போது தத்தமங்கலம் புது நகரத்தில் நடந்த சித்து நிகழ்ச்சியாவது, அடியேன் அவிடம் சென்றபொழுது அவிடம் உள்ளவர்கள் வந்து நமஸ்கரித்து ஆரவாரம் செய்தனர், காரணம் என்ன என்று வினவ, அவர்கள், 'தாங்கள் தானே நேற்று காவடி எடுத்து வந்தீர்கள். அதுசமயம் நாங்கள் காவடிகளைப் பிடித்திழுக்க வரும்போது இடத்திற்கு இடம் மாறினீர்கள். நாங்கள் கற்களை விட்டெறிய எத்தனிக்கையில் ஆங்காங்குள்ள வீடுகள் தீப்பற்றி எரிந்தன' என்றனர்.

---

## 32. பண்டை வித்யா குரு இல்லம் சேர்தல்

புதூர் பதியினையடைந்து பால்சுவாமிகளுடன்உரையாடி ஆசிபெற்று அங்கு அடியேனுக்கு எழுத்தாணிப் பால் கொடுத்த ஆசான் அடியேன் சந்நியாசியாகப் புறப் படும்போது தன்னை வந்து காண வேண்டும் என்று அறிவித்தபடி, அவரது இல்லம் தேடிப் பார்த்தபோது அவர் பூரண அடக்கமாகி விட்டார் என்ற செய்தி கேட்டு மனம் இரக்கமுற்று இருக்கையில் அவ்வாசிரியரின் மனைவியார், குமாரர், மருமகள் முதலியோர்கள் வந்தனர். அதுகாலை ஆசிரியரின் மனைவியாரின் திருவடிகளை வணங்கிட அத்தாய் அடியேன் நெற்றியில் கருணையோடு திருநீறு பூசினார். பின்னர் அவ்வம்மையார் மகனும் மருமகளும் சந்நியாசியாகிய அடியேனது பாதங்களில் வணங்கி ஆசீர்வாதம் பெற்றுப்போயினர். அதன்பின் அவ்வூரின்கண் உள்ள பக்தர்கள் திரண்டு வந்து அடியேனுக்குப் பாதபூஜை செய்து மிக்க அன்போடு கர பாத்திர பிக்ஷையிட்டனர்.

---

## 33. அன்னையை வணங்கிப்போய் சில தலங்கள் சேவித்தல்

அடியேனை ஈன்றெடுத்த அன்னையாரைக் காணும் பொருட்டுச் சந்நியாசி வேடத்துடன் போய்ச்சேர்ந்தேன். அன்னையார் நிற்க, அனைவரும் அடியேனை வணங்கித் திருநீறு பெற்றுக்கொண்டதைப் பார்த்த தாயாருக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று. தாயின் மகிழ்ச்சி மேன்மையுற வேண்டுமென்று அடியேன், பால், பழம், துவரம் பருப்பு அளவுள்ள வீர ராயர் பணம், துளசி, இளநீர், தீர்த்தம் கொண்டு வருமாறு அன்பர்கட்கு அறிவித்துத் தருவித்து இறுதிக் காலத்தில் உண்பிக்கும் பெரியோர் மரபுப்படி அடியேனும் இப்பொழுதே தாயாருக்குச் செய்ய வேண்டுமென்றெண்ணித் தாயாரின் திருவடிகளில் நமஸ்கரித்து வாயின்கண் உண்பித்து ஏனையோரையும் உண்பிக்குமாறு செய்து, தாயாரைக்கொண்டு அனைவருக்கும் ஆசி புரியும்படியும் வேண்டிக்கொண்டேன்.

அன்னை ஆசி பெற்றுப் புறப்பட்டு வரும் வழியின்கண் உள்ள மலைச்சந்தில் ஏறிவரும் வழியிடத்து, இருபக்கங்களிலும் சப்பாத்தி முட்கள் அடர்ந்திருந்தன. அவ்வழியில் ஒருவன் கொடுவாள் ஒன்றைத்தாங்கிக் கள் குடித்து வெறியுடன் வந்து அடியேனுடைய புத்தகக் கட்டினைக் கீழே வைக்குமாறு கூறி, புஸ்தகத்தை எடுத்துக் கொண்டான். அடியேன் குடியனுகிய கொடியவன் செவிக் கருகில் அதோபார்! என்று கையை நீட்டவே, அவனும் உடனே முகம் திருப்ப, இரு கைகளிலுமுள்ள கொடுவாளையும் புத்தகத்தினையும் வெடுக்கெனப் பிடுங்கிக் கொடுவாளைச் சப்பாத்திக்காட்டில் வீசியெறிந்து புத்தகக் கட்டை எடுத்கொண்டு விரைந்து வேறு வழியாகப் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடத்தையடைந்தேன். மறுநாள் பேரூரினின்று வரும் வழியில் சில புத்தகங்களைக் கேட்ட அன்பர்கட்குக் கொடுத்து, பவானியெனும் புண்ணியப் பதி அடைந்தேன். அங்கு பவானிநாதரைக் கோயிலுள் வழிபடும்போது பூஜை செய்யும் சிவாச்சாரியார் அடியேன் கழுத்தில் அணிந்திருந்த உருத்திராக்ஷ மாலைதனைப் பார்த்து, ‘இம்மாதிரி மாலை கிடைக்கின் நலமாயிருக்கும்’ என்று நவில, அடியேன் அதனைக் கழற்றி அச்சிவாசாரியாருக்கு அணிவித்து, ‘தாங்கள் பேசும் தெய்வமன்றோ?’ என வணங்கி ஆசி பெற்றேன்.

அடுத்துள்ள அக்ரஹாரத்தில் பிக்ஷையேற்றுக் கொண்டு காவிரியாற்றுக்கு அக்கரையில் உள்ள குமாரபாளையம் வேதாந்த மடத்திற்குச்சென்று, பழக்கம் உள்ள கோவிலூர் இராமசாமி என்பவர் குடும்பத்தார்களைக் கூட்டிவைத்துக்கொண்டு, தத்துவானு சந்தானம் தர்க்க நூலைப் பாடம் சொல்ல அச்செயல் அடியேனுக்கு வேற்றுமையாகக் காணப்பட்டதால், அவ்விடம் விட்டு சேலம் வந்தேன். சில அன்பர்கள் சேலம் அருகில் உள்ள தென் திருப்பதிக்கோயிலில் நிஷ்டை பழகுவது வழக்கம். ஆதலால் அடியேனை அங்கு எழுந்தருளியாக வேண்டுமென யானும் அவிடம் சென்றேன்.

---

## 34. சேலத்தில் நிஷ்டையில் இருத்தல்.

அக்கோயிலின்கண் எல்லோரும் நிஷ்டையில் இருந் தார்கள். யானும் மெய்மறந்து வெகுநேரம் நிஷ்டையில் இருக்க, அதுபோது, இங்ஙனம் இருத்தல்தான் பெரி யோர்களது இயற்கை. யாங்கள் இல்லறத்தார்கள். எங் கட்குச் சோம்பலும் உறக்கமும் வருகின்றன. இனி எங் கட்கும் நிஷ்டைகூட ஆசிகூற வேண்டும் என வணங்க, கண்ணபிரான் அருளால் நிஷ்டை கூடுமென ஆசீர் வதித்தேன். அதுகேட்டு மகிழ்ந்து அடியேனுடன் அனை வரும் தமதிருப்பிடம் திரும்பி வந்தனர்.

---

## 35. சிவத்தலம் அருட்புலவர் சமாதி வழிபாடு

பின்னர் சிவராமலிங்க பரமஹம்சரிடம் பஞ்சாட்சர உபதேசங் கேட்ட பெரியாருடைய மகன் வந்து வணங்கி திருவண்ணமலைத் தேர் தெரிசனத்திற்கு அழைக்க, திரு வண்ணமலை சென்று அங்குள்ள மெய்யடியார் ஈசான மடாலயத்து நடேச சுவாமி முதலான பெரியோர் பாத தெரிசனஞ் செய்து, ஸ்ரீ உண்ணுமுலை சமேத ஸ்ரீ அண்ணமலைக் கடவுளரையும் தெரிசித்தேன்.

'' உண்ணுமுலை யுமையாளொடும் முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரள் மழலைம் முழவதிரும்
அண்ணமலை தொழுவார் வினைவழுவா வண்ணம்மறுமே ''

— திருவண்ணமலைப் பதிகம்.

மறுநாள் இரமணரிஷி ஆசிரமம் சென்று காலை 7-மணி முதல் பகல் 11-மணி வரை ரமணரிஷியைச்சுற்றி வரும் பக்தர்களுடன் சேர்ந்து பன்முறை வலம் வந்தும் அங்குள்ள பெருந் தவசிகளை வணங்கியும் பரிபூரண ஆசி பெற்று அண்ணமலை கிரிப்ரதக்ஷணம் செய்து கொண்டும் பல தலங்களையும் சென்று தெரிசித்தும் திரு வாமாத்தூர் அடைந்தேன். ஆங்குறையும் ஸ்ரீ அபிரா மேஸ்வரர் முத்தாம்பிகா யம்மையைத் தெரிசித்தபின்னர்

அத்தலத்தில் யோக சமாதி கொண்டுள்ள முருகதாஸர் வண்ணச்சரப தண்டபாணி சுவாமிகள் சமாதியினையும் அடியார்களையும் தபோதினி ஆகிய சுந்தரத்தம்மையாரை யும் வணங்கி ஆசிபெற்று அகன்று திருக்கழுக்குன்றம் மீதேறிச் சென்று பெண்ணில் நல்லாளம்மை சமேத ஸ்ரீ வேதகிரீஸ்வரரையும் பக்ஷி தர்சனமும் செய்து திருப் போரூர் வந்து போரூர் சிதம்பர சுவாமிகள் திருக்கோயி லாகிய சமாதியையும் தெரிசித்து போரூர் அமர்ந்த வள்ளி சமேதர், சுப்ரமண்யம் கோயிலில் தீர்த்தமாடி ஆண்டவனைத் தெரிசித்து நல்காத்தூர் கவிச்சிங்கம் சிவப்பிரகாச சுவாமிகளின் யோக சமாதியினை பலமுறை வலம் வந்து வழிபட்டு தில்லைச்சிற்றம்பலம் மௌன சாமி மடம் வந்து சேர்ந்தேன். திருவிழாக்காலம் வந் துற்றமையினால் விழாவைத் தெரிசித்து, பின்பு இடை யிடையே திகழும் பலஸ்தலங்களையும் வணங்கி அடியேன் முன் பூசைப் பணிவிடை புரிந்து கொண்டிருந்த சிக்கல் பொருள்வைத்தசேரியினை அடைந்தேன்.

---

வானுலா வும்மதி வந்துலா வும்மதில் மாளிகை
தேனுலா வும்மலர்ச் சோலைமல் குந்திசூழ் சிக்கலுள்
வேனல்வே ளைவிழித் திட்டவெண் ணைப்பெரு மானடி
ஞானமாக நினை வார்வினை யாயின நையுமே.

கந்த மார் பொழிற் காழியுள் ஞானசம்பந்தன்நல்
செந்தண் பூம்பொழிற் சிக்கல்வெண் ணைப்பெருமானடி
சந்தமாச் சொன்ன செந்தமிழ் வல்லவர் வானிடை
வெந்த நீறணி யும்பெரு மானடி மேவரே. —சம்பந்தர்.

## 36. சிக்கல் மடாலய பூசனையும் மகேசுர பூசையும்

பெரிய மடத்தில் பூஜா கைங்கர்யத்தினை முன் போலவே ஏற்றுக்கொண்டேன். அடியேனிடம் இருந்த 70 நூல் அடங்கிய அத்வைதக் கொத்து முதலிய சில நூல்களை நன்கு பயின்று முற்றியதும் ஒவ்வொருவருக் கும் அந்நூல் உபயோகப்படும்படி செய்து கொண்டே

வந்தேன். உகந்தலிங்க சுவாமிகள் குருபூசைக்காகப் பல மடங்களிலிருந்துப் பல மெய்யடியார்கள் வந்து சேர்ந்தார்கள். சமாதிக்கு அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தினேன். கைங்கர்யத்தினை முற்றுவித்துக்கொண்டு தெரிசனத்திற்கு வந்த பெருந் தபோதனராகிய துறவிகளுக்கு விபூதிப் பிரசாதம் வழங்கினேன். அதன்பிறகு, மகேசுர பூஜை அடியார்கட்கு மாலை புனைந்து அலங்கரித்துத் தோத்திரம் பண்ணித் திருவமுதருந்தச் செய்தனர். அமுதுட்கொண்ட இலைகளில் உள்ள பிரசாதத்தை ஒன்ருக ஆக்கி, அடியேன் அன்போடுண்டு மகிழ்ந்தேன். சிக்கல்–பொருள்வைத்தசேரி பெரிய மடம் மடாதிபதி நாட்டரசங்கோட்டை மெய்யப்ப சுவாமிகள் முதலிய பெரியோர்கள் திருவடிகளில் பணிந்து அவர்கள்பால் பூரண ஆசியுடன் விபூதிப் பிரசாதமும் பெற்றுக் கொண்டேன்.

---

## 37. தியாகமும் முழுத்துறவும்

மீண்டும் உகந்தலிங்க சுவாமிகள் சமாதிக் கோயிலுக்குட் சென்று வணங்கிக்கொண்டு, அடியேன், பாராயணஞ் செய்த நூல்களையும் அங்கிருந்த அடியவர்கட்கு வழங்கிவிட்டு அடியேன் அணிந்திருந்த உருத்திராக்ஷ மாலையினைக்கழற்றி ஒரு அடியாருக்கும், விபூதியடைத்த பையினை ஒரு பக்தனுக்கும் வழங்கிய பின்னர், அணிந்திருந்த காஷாய ஆடையினை அவ்விடமே அவிழ்த்து விட்டுக் காவி லங்கோடு கோவணம் தரித்து சசிவர்ண போதம், அத்வைத ரசமஞ்சரி, ஆத்மவித்யா விலாசம் சொரூபசாரம் என நான்கும் அடங்கிய புத்தகத்தினை கையில் எடுத்துக்கொண்டு, கமண்டலத்தைத் தாங்கி சாயங்காலம் புறப்பட்டு விநயகர் ஆலயத்தினை மேவினேன். அன்றிரவு அவ்வூரன்பர்கள் பாலும் பழமுங் கொடுக்க, உட்கொண்டு மறுநாள், சிக்கல் கோயிலுக்குச்சென்று, நிஷ்டையிலிருந்து, உச்சிப்பொழுதில் பிக்ஷைக்குச் செல்லுகையில் காசிவாசி சுப்ரமண்ய

ஐயர் பதிவிரதையோடு அடியேனுக்கு மகிழ்வுடன் பாத பூஜை செய்து குதூஹலித்துப் பிக்ஷை செய்வித்தனர். ஏனைய வீடுகளிலும் அவ்வாறே செய்தனர். அன்றிரவு, கோயிலில் நிஷ்டையிலிருந்து வைகறையில், தீர்த்தக்கரைக்குச் சென்று கைப்பிடிச் சுவரில் சாய்ந்திருந்தேன். யாரோ ஒருவர் வந்து, நீவிர் யார்? என வினவ, அடியேன் மௌனமாயிருக்க, ஏன் பேசவில்லை? என்று கூறிக் கையால் அடித்தார். அதன்பின், எழுந்து சென்று குளத்தில் இறங்கினேன். முன்பு அடியேனிடம் பழகினவர் ஆதலால் அவர் உடனே திருவடியில் வீழ்ந்து வணங்கி, யான் செய்த பிழையை மன்னிக்கவேண்டும், கடவுளே! என்றார். உடனே "எண்ணிய யாங்கு எய்துக" என்றேன்.

---

## 38. கரபாத்திரத்தைக் கடைப்பிடித்தல்

பின்னர், அடியேன் கீழ் வேளூர், அத்திப்புலியூர் முதலிய சிவாலயங்களை வழிபட்டுத் திருவாரூர் அடைந்தேன். அங்கு கோயில் வழிபாடு ஆற்றி விநாயகர் ஆலயஞ்சென்று விநாயகர்க்குப் பின்புறமிருந்து, இங்கு யாரேனும் அன்னம் கொண்டுவந்து வாயின்கண் ஊட்டினாலன்றி உண்பதில்லை என வைராக்யமாகவிருக்க, ஒரு மெய்யன்பர் பகல் 12 நாழிகையளவில் வாயின்கண் அமுதூட்டினர். மேலும் மேலும் அவ்வூரார் வந்து சந்தோஷமாக மாலை 25 நாழிகை வரையும் நிதானமின்றிக் கொடுக்கலாயினர். அது முதல் அடியேன் கரத்தில் ஏற்றுண்பதே நலமெனக் கடைப்பிடித்தேன்.

---

## 39. ஒரு நோயாளியைச் சைவநெறிக்குச் செலுத்தல்

பிறகு கடுவெளி சென்றேன். ஆற்றங்கரையில் ஒரு நோயாளி அடியேனை வணங்கி என் வீட்டுப் பரணியி

லிருந்து மரச்சட்டங்களைச் சடசடவென்று தள்ளிய போது ஒரு பூனை ஓடிவந்து அம்மரச்சட்டங்களிடைப் பட்டு இறந்தது. அதனைக் கையில் எடுத்துக்கொண்டு வந்தேன். அதைப்பார்த்து ஒரு மாமிசதாரி பூனையைக் கையில் வாங்கிக்கொண்டு 'கொன்ருற் பாவம், தின்ருல் போகும்' என்று அதன் காதையறுத்துச் சுட்டுத்தந் தனன். சைவனுகவிருந்தபடியால் அதனைத் தின்றது முதல் வாந்திபேதியால் கஷ்டப்படுகிறேன்; என் செய் வேன்! என்று அழுதான். அவனுக்கு அடியேன், பூனை, தானே மரச்சட்டங்களின் இடைபட்டு இறந்தமையால் அதன் பாவதோஷம் உனக்கில்லை, எனக் கூறினேன். அவன் மனம் திடப்பட்டு முகமலர்வுற்றது. அந்நிலை கண்ட அடியேன் நீ தைரிய லக்ஷிமியைக் கடைப் பிடித்துப் புண்ணியங்கள் செய்து நன்கு வாழ்வாயாக! என்று கூறினேன். அங்கு வந்திருந்தவர்களையும் பார்த்து, புலால் உண்டல் பெரும் பாவச் செயலாகும் என்றும்,

"கொன்றனையனைத்தும் அனைத்தும் நினைக் கொன்றனை
தின்றனையனைத்தும் அனைத்தும் நினைத் தின்றனை
ஓம்பினையனைத்தும் அனைத்தும் நினை ஓம்பினை"

— பட்டினத்தடிகள்.

எனவும், கொலைமறுத்தல் முதலிய நூல்களில் இருந்து மேற்கோள்கள் கூறிக் கொலை புலை தவிர்க்குமாறு அறி வுறுத்திச் சைவ நெறியினை உறுதியாகக் கடைப்பிடிக்கு மாறு தூண்டினேன். அவர்களும் உடன்பட்டு அவ் வாறே நடக்க முயல்கின்ருேம் எனப் புகன்று அடியேனை வணங்கித் திருநீறு பெற்று மகிழ்ந்தேகினர்.

---

## 40. மசூதிக்குட் புகுந்து புறப்படல்

பிறகு கொடிக்கால்ப்பாளையம் முகம்மதியருடைய பள்ளிவாசலுள் சென்றேன். அங்கிருந்த முகம்மதியர்கள்

அடியேனை வரவேற்றுச் சலாமிட்டு உபசாரம் புரிந்தனர். அன்று அங்கு தங்கி, குணங்குடிமஸ்தான் பாடலில் ஒன்றை சொல்லி அவர்களைச் சந்தோஷப்படுத்தி, மறு நாள் புறப்பட்டேன். இடையிலே சில அற்புதச் செயல் களும் நிகழ்ந்துள்ளன. அவை எல்லாம் கலைமகட்குத் தெரியும்.

---

## 41. அற்புதங்களால் ஈருயிர் காத்தல்

திருக்கருகாவூர் தலத்தினை யடைந்து அங்குள்ள விநாயகர் கோயிலில் அமர்ந்திருந்தேன். அப்போது மாமுண்டிக் கொத்தனுர் என்பவரும் மருதாசலம் என் பவரும் அடியேனைத் தெரிசித்து விபூதி பெற்றுப் போனுர்கள்.

அப்போது முல்லைவனநாதஸ்வாமி ஆலயத்தில் நடராஜா மண்டபம் திருப்பணி வேலை செய்ய ஏரிப் போனபோது மண்டபத்தின்மேல் இருந்த மின்சாரக் கம்பியில் சிக்கிய மாமுண்டிக் கொத்தனுர் இனி தப்ப முடியாதென எண்ணிக் கூச்சலிட்டு, "முத்துக்குமார சுவாமிகட்கு அபயம்" என்றவுடனே, அடியேன் உருவம் முன்தோன்றிக் கரண்டுக் கம்பியை வாழைநார் என்று கையில் எடுத்து அக்கொத்தனுரை தப்புவித்த காக்ஷியை உடனிருந்த ஷெயூர் வெங்கிடாசலம் பிள்ளை என்ற சிவஞானம் விரைந்து வந்து அதிசயத்தைக் கூறினுர். துணையிருந்த உபாசனை என்றேன.

பின், பூண்டிக்குப் போனேன். முத்தையாபிள்ளை என்கிற மிராசுதாரின் மகன் ஒருவர் ஜீவகாருண்யத்தைப் பற்றிப் பிரசங்கம் செய்தார். பின்பு, ஷெயூர் விஞயகர் கோயிலுக்கு வந்திருந்தேன். அடுத்தாற்போலச் சைவர் வீட்டில் கோழியின் கதறலும் பேரிரைச்சலும் கேட்டு நிஷ்டை கலைந்து சென்று என்ன சப்தம் செய்கின்றீர் கள் என்று ஆச்சிமார்களைக் கேட்க, 'பலியிடுவதற்குச்

சேரிக்காரனிடம் சிவப்புச் சேவலைக் கொண்டுவாவெனச் சொல்லியிருந்தும் அவன் வெள்ளைச் சேவலைக் கொண்டு வந்தான். அது கூடாதென மறுக்க அவன் வேறு மாற்றிக் கொண்டுவரச் சென்றான். என அவர்கள் விடையளித்தனர். அதுபோது அடியேன் உளம் வருந்தி நீங்கள் சைவப் பெருமக்கள் ஆயிற்றே! காருண்யமின்றி ஜீவஹிம்சை செய்யலாமா? என்று வினவ, அங்குள்ள மிராசு முத்தையாபிள்ளை முதலிய எல்லாச் சைவப் பெருமக்களும் பயந்து நடுக்குற்று சுவாமிகள் சொற்படி நடக்கின்றோம், என்றனர். எலுமிச்சம் பழத்தை யறுத்து அதிற் குங்குமத்தினைத் தடவிப் பலியிடுங்கள்; அதுவே ஏற்ற பலி ஆகும் எனக் கூறி விநாயகர் கோயிலுக்குத் திரும்பினேன்.

மறுநாள் காலையில் சேரியிலிருந்து வந்தவர்களில் ஒருவன் என்னிடம் சொன்னதாவது:—

நான் கொண்டுவந்த கோழி சிவப்பு நிறம்தான். ஆனால் அவிடம் இருந்தவர்களுக்கு வெள்ளைச் சேவலாகத் தோன்றியது. அனைவரும் சேர்ந்து வெள்ளைச் சேவலைக் கொண்டுவந்து விட்டுச் சிவப்புச் சேவல் என்று வாதாடுவதாக என்னை அடிக்க வரவே, நான் சேரிக்கு ஓடி வெள்ளை, சிவப்பு இரண்டு நிரச் சேவல்களையும் கைக்கு ஒன்றாக எடுத்துக்கொண்டு ஓடிவரும் போது வழியில் வரப்பில் வழுக்கிவிழுந்து கைசுளுக்கி விட்டது; என்றும் சொன்னான். அடியேனுக்கு இளநீர் கொண்டுவந்து சமர்ப்பித்து வணங்கி மந்திர விபூதிப் பிரசாதம் பெற்றுச் சென்றார்கள்.

---

## 42. நடேசய்யாவுக்கு மந்திரோபதேசமும் திருமந்திர போதனையும்

பவளமல்லிகை முதலிய புஷ்பங்களைக்கொண்டு 108 முறை அடியேனை வலம் வந்து அர்ச்சனை செய்து

ஒன்பத்துவேலி நடேசய்யா வணங்கினர். திருவாவடு துறையில் நந்தீசுரர் முன்பாக காதில் பஞ்சாக்ர உப தேசஞ் செய்து திருமந்திரம் மூவாயிரமும் படிக்கச் சொல்லி, அடியேன் உபாசனமூர்த்தி உள்ளத்தில் விளக்கியவாறு தாற்பர்யங் கூறிப் பாடம் முற்றிய பின், திருமூல லிங்கத்திற்கு அபிஷேக ஆராதனைகளை ஸ்ரீ மடம் காரியதரிசி சிதம்பரம்பிள்ளைமூலம் செய்து வைக்க ஏற்பாடு செய்து ஷை இருவர்க்கும் ஆசிகள் புகன்றேன்.

---

## 43. திருவாவடுதுறையில் பாதபூசையும் பிக்ஷையும்

உச்சிப்பொழுதில் பிக்ஷைக்குச் சென்றேன். அச் சமயம் துறசையாதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர்க்கு அடுத்த பட்டத்துக்குவந்த ஸ்ரீ வைத்யனுதை தேசிக பரமாசாரிய ஸ்வாமிகள் அடியார்களைக்கொண்டு மடத்து முகப்பில் பாதபூஜை செய்வித்தும் கைப்பிக்ஷை புரிமாறச் செய்தும் சந்தோஷித்தனர்.

---

## 44. திருவாவடுதுறை இராஜரெத்தினம் பிள்ளையும், கொடுமுடி K. B. சுந்தராம்மாளும் ஆசிபெற்றது

திருவாவடுதுறை ஆதீன நாதஸ்வர வித்வான், இராஜரத்தினம் பிள்ளையும் அவரது குடும்பத்தாரும் வீதிக்கு அழைத்துச்சென்று பக்தியுடன் பாதபூசை செய்து பாததீர்த்த ப்ரசாதம் உண்டு அடியேனது ஆசிகள் பெற்று, அகில உலக நாதஸ்வர சக்ரவர்த்தி யாக விளங்கியது உலகறிந்ததே.

அடியேன் கொடுமுடியில் இருந்தகாலை K. B. சுந்த ராம்மாள், வந்து வணங்கி, தாம் ஔவையார் படத்தில்

ஔவையாராக நடிக்க எண்ணி முயற்சிகள் செய்து வருவதாலும், தனக்கு நற்கீர்த்தியும் தனலாபமும் கிடைக்க அனுக்கிரஹிக்கும்படி அடியேனை வேண்ட, நல்லாரைக் காண்பதுவும் நன்றே! நலமிக்க நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே! என்றும், உங்கள் முயற்சி திருவருளால் மென்மேலும் நன்மையாவதாக; என்றும் ஆசிர்வதித்தேன். அதன்படியே நன்ருக புகழுடனும் பொருளுடனும் வாழ்ந்து வருகிருர்கள்.

---

## 45. சென்னையிலும் காளத்தியிலும் ஏககாலத்தில் இருத்தல்.

சென்னையை அடுத்த துலுக்கன்சத்திரம் என்ற நாரவாரிக்குப்பத்தில் இருக்கும்போது, கங்காதரன் என்ற பள்ளி மாணவன் பக்தியோடு, தாய் தந்தையரை பூஜித்திருந்தான். அடியேன் அத்த தெருவுக்குப் போகும் போது அக்குடும்பத்தார் மிக பக்தியுடன் பிக்ஷைசெய்வித் தார்கள். அடியேன் ஸ்ரீகாளத்தி போயிருக்கும் போது விருத்தாசலம் தாலூகா முகுந்த நல்லூர் சைவ நடராஜ உடையார் கனவில் அடியேன் தோன்றியருளியபடி காளத்தியில் தெய்வகதியால் கட்டிய யோக விஞயகர் குகைக்கோயில் கும்பாபிஷேக தினத்தன்று நாரவாரிக் குப்பத்திலிருந்து வந்த கங்காதரனின் தந்தை கந்தசாமி முதலியார் தெரிவித்த வரலாறு:—

மஹாசிவராத்திரியன்று ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் சென்னைக்கு வந்து கங்காதரன் பள்ளியில் படிப்பதற்காகத் தங்கியிருந்த வீட்டில் மஹா சிவராத்திரி பூஜைக்குச் சுவாமிகள் கங்காதரனுடன் இரு ந்து பூசை செய்து பால், பழம் உட்கொண்டு போகிறேன் யென்று சொல்லி அதிகாலையில் சென்றனர் என்பதாகும்.

அடியேன் மஹா சிவராத்திரியன்று பூசகரைக் கொண்டு, ஸ்ரீகாளத்தியில் பக்தர்கட்குத் தீக்ஷை நடப்பித்

தேன். கந்தசாமி முதலியார் சொன்ன செய்தி கேட்டுத் திருவருட்திறனை நினைந்து யாவரும் அதிசயமுற்றனர்.

சிவாய நமவென்று சிந்தித்திருப்போர்க்கு
அபாயமொரு நாளுமில்லை.

---

## 46. நச்சுப்பொருள்கள் உண்டும் தீங்கடையாமை

திருவாவடுதுறையிலிருந்து ஒன்பத்துவேலி வந்து பிக்ஷை பண்ணிக்கொண்டிருக்கும் நாளில் நடேச ஐயா அடியேனைச் சோதிக்க எண்ணி, கெந்தகம் முதலிய காரமான சரக்குகளைக் கொண்டுவந்து சுவாமி! தாங்கள் இவற்றை உட்கொள்ள வேண்டும் என்றார். கொடு என்று வாங்கித் தின்றுவிட்டேன். பின்னர் அவர் அடியேனைப் பார்த்து, 'இலிங்கம், பூரம், வீரம், பாஷாணம் முதலியவற்றினை உட்கொள்வேன்' என உரைத்தார். அதற்கு அடியேன், நீர் பெருஞ்சித்தர் என நினைத்திருக்கின்றீரோ? எதனையும் பழக்கப்படுத்தினல் செய்து முடிக்கக்கூடும்; இது பெரிய விஷயமல்ல; நாய், கழுகு, பூனை, முதலிய நாற்றமுடைய ஆகாரங்களைத் தின்று பழகியிருப்பது போலவே சில மனிதர்களும் மாமிசங்களைப் புசிக்கின்றார்கள். அதுபோல் நாமும் அசுத்தமான உணவுகளைப் புசித்துப் பழகாததால் அந்த ஜீவர்களுக்கு நாம் கீழ்ப்பட்டவர்கள் அல்லரே என்று விளக்கிக் காட்டவே, நடேச ஐயா, அடியேனை வணங்கினர்.

---

## 47. முத்தி பஞ்சாக்கரப் பொருள் அறிவுறுத்தல்

அதன் பின்னர், அடியேன் திருநல்லூர்ப் பெருமணமென்னும் ஆச்சாள்புரத்தினை அடைந்தேன். திருஞானசம்பந்த சுவாமிகள் திருக்கலியாண உற்சவம் நிகழ்ந்து கொண்டிருந்தது. கோயிலுக்குச்சென்று ஞானசம்பந்தர் தீர்த்தக்கரையில் நின்றுகொண்டு, முத்திப் பஞ்சாக்ஷரம் கேட்டிருக்கின்றீர்களா? என்று பந்துக்களைக் கேட்க, அங்குள்ள அன்பர்கள், சுவாமிகளுடைய திருவாக்கால் சொல்லியருள வேண்டுமென வேண்டினர். அதற்கு,

"காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னுமநமச்சி வாயவே" — சம்பந்தர்.

என்ற திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகம் கேட்டவுடனே கோயில் சந்நிதியில் ஜோதி தோன்ற, அங்குள்ள அனைவரையும் "சிவஜோதியிற் கலக்கலாம்" என்று அருள் புரிந்தார். அவர்கள் ஜோதியிற் கலக்கச் சென்றுகொண்டிருக்கும் போது, பக்தியில்லாதவர் விம்மிதமுற்று நின்றுகொண்டிருக்கவும், திருக்கோயிலின் மதில்மேலிருந்த நந்திவாகனங்களை மதிலினின்று கூர்மைபொருந்திய கொம்போடு கீழே இறங்குமாறு திருவிளையாடல் செய்து வராதவர்களையும் அழைத்து வரும்படி சொல்லி ஜோதியிற் சேருமாறு சம்பந்தர் செய்தருளினுர். தீவட்டி பிடித்துவந்த பெண்பால் 'வீட்டுக்கு விலக்காகி விட்டேன்" என்றுரைக்கச் சம்பந்தர், "பெரு நெருப்புக்கு ஈரமில்லை" யென, அப்பெண்ணையும் திருமணநல்லூர்த் தீர்த்தக் குளத்தில் நீராட்டியபின் அழைத்துக்கொண்டு திருமணப் பெண்ணும் தாமுமாகவே சிவ ஜோதியிற் கலந்தருளினர். இவ்வரலாற்றினை அன்று தெரிசனத்தின் பொருட்டு வந்திருந்தவர்களுக்கு விளக்கிச்சொன்னேன். எல்லோரும் மங்களகரமாய் சந்தோஷமடைந்தார்கள்.

திருஞானசம்பந்தர் திருநல்லூர்ப் பெருமணம். பண்.

(திருச்சிற்றம்பலம்)

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம் பானே.

நறும் பொழிற் காழியுள் ஞானசம்பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொருளாற் சொன்ன வொண்தமிழ்வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே.

## 48. அன்பர் பலரை நன்னெறிப்படுத்தல்

அடியேன் ஆச்சாள்புரத்தின்கண் பக்தர்களைக் கொண்டு பஜனை மடங்கள் ஏற்பாடு செய்து பக்த விஜயம் ஆறு பாகம் படித்து அதில் சொன்னபடி நடந்து நலமடையவும், எப்போதும் பஜனை புரியவும் ஆணைபுரிந்து புறப்பட்டு ரெட்டியூர் மார்க்கமாக வந்து கொள்ளிட நதியில் நீராடிக்கொண்டிருக்கையில் இராம சாமி ரெட்டியார் வந்து உடம்பினுடைய அழுக்கைத் தேய்த்தார் ரெட்டியாரைப்பார்த்து, நீர் போமின் எனக் கைச்சாடை காண்பிக்கவும் அவர் சென்றார் அடியேன் ஸ்நானம் முடித்து எயிலூர் செல்லுகையில் ரெட்டியார் தன் சத்திரத்தின் முன் பக்கத்தில் பெஞ்சியினைபோட அதிலமர்ந்தேன். இராமசாமி ரெட்டியாரும் அவருடைய மனைவியார் அம்புஜத்தம்மாளும் திருநீறு கொண்டுவந்து வணங்கி நிற்க, அடியேன் அவர்களை நோக்கி, நீவிர் சைவ சமய ஒழுக்கமுடையவர்களா? என்று வினவ, அவர்கள் 'சுவாமிகள் திருநீறு வழங்கின் நாங்கள் சைவ சமய நெறியினைக் கடைபிடிக்கின்றோம். என உறுதியாகச் சத்தியம் செய்துகொடுக்க, அடியேன் அநுக் கிரக விபூதி தந்தேன். அது முதற்கொண்டு அவர்கள் நன்னெறியின்கண் நின்றுவரலாயினர். பின்னர் எயிலூரி லிருந்து ரெட்டியூர் போனபோது மைனர் முத்துக்குமாரு நாட்டாருக்கு பக்த விஜயம் (ஆறு பாகம்) பாடம் போதித்த சமயம் அவரைப்பார்த்து, நீ உன் தமையன் விஸ்வநாத நாட்டாரைத் தினந்தோறும் வணங்கல் வேண்டுமென ஆணையிட்டபடி அவர் வணங்கிவரல் வழக்கமாயிற்று. தமையன் விஸ்வநாத நாட்டார், தன் உடன்பிறந்த மைனர் முத்துக்குமாரு நாட்டார் வயலுக்கு சட்டப்படி ஆற்று நீர் பாய்ச்சுவதைத் தடுத்துத் தன் வயலுக்குப் பாய்ச்சிக்கொண்டார். அதற்கு மைனர் முத்துக்குமாரு நாட்டார் தன்னுடைய தமையனுர் பெயரில் வழக்குத் தொடர்ந்தார். வழக்கு நடந்துகொண்டு வரும் போது பக்த விஜய பாடத்தில் "கும்பிடத் தகுந்தவரிடம்

குதர்க்கம் பேசாதே" என்ற வாக்கியம்வர, அடியேன் மைனர் முத்துக்குமாரு நாட்டாரை நோக்கி அவ்வாக்கியத்திற்கு என்ன கருத்து எனக்கேட்க, அதற்கு 'நான் நாளைய திநமே வழக்கினை வாபீசு வாங்கிக்கொண்டு தமையனை வணங்குகிறேன்' என்று கூறினார். பின், இருவரும் சமாதானமாகிச் சந்தோஷமடைந்தனர், மைனர் முத்துக்குமாரு நாட்டார் பக்த விஜயம் ஆறு பாகமும் பாடங்கேட்டுப் பூர்த்தி செய்து விஸ்வேஸ்வர விசாலாக்ஷி ஆலயத்தில் விசேஷ அபிஷேகம் அர்ச்சனை ஆராதனைகளும் அன்னதானம் முதலிய சிறப்புக்களும் நடத்தி அடியேனிடம் ஆசி பெற்றுக்கொண்டார். மைனர் விஸ்வநாத நாட்டாரும் அடியேனிடம் சில வேதாந்த சாஸ்திரங்களைப் பயின்று கொண்டார்.

---

## 49. தபோதனர் திருக்கூட்டத்தில் இன்புறல்.

ஒன்பத்துவேலி நடேச ஐயா சொற்படி ரெட்டியூர் மைனர் முத்துக்குமாரு நாட்டார், சாமான்களைச் சோத்திப் பீசுக்கணக்காக ஆடைகளைக் காவி நனைத்து எடுத்துக் கொண்டு நடேச ஐயாவையும் ஊரிலுள்ளவர்களையும் கூட்டமாக அழைத்துச் சாமான்களை வண்டிகளில் ஏற்றித் தாங்களும் ரெட்டியூரிலிருந்து விருத்தாசலம் வந்து சற்குரு சிவராமலிங்க பரமஹம்சரைக்கண்டு தெரிசித்து ஷ நடேச ஐயா தனக்குச் சந்நியாச ஆச்சிரமம் வேண்டுமென வணங்கி கேட்டுக்கொண்டார். அதற்குச் சற்குரு மூர்த்திகள் தம்முடைய சீடனாகிய அடியேனைக் கொண்டு நடேச ஐயாவுக்குக் காவி கொடுப்பதற்கேற்ற சமஸ்கார கிரியைகளை செய்யுமாறு ஆணையிட, அடியேன் கத்தி பிடித்து நடேசஐயாவின் தலைமுடியினையிறக்கி, நீராடுவித்து, மந்திரவிதிப்படி கிரியையை முடித்துச் சுவாமிகளிடம் அழைத்துக் கொண்டு வந்தேன். நடேச ஐயா சற்குரு சிவராமலிங்க பரமஹம்சரிடம் உடல், பொருள், ஆவியை தண்ணீர் வார்த்துக் கொடுக்க அவருக்கு காவியணிவித்துச் சங்கரானந்தம் எனத் தீக்ஷா நாமமும்

சூட்டி, மகா வாக்கிய உபதேசம் செய்தருளினர். மைனர் முத்துக்குமாரு நாட்டார், கூட்டத்துடன் இவ்வைபத்திற் கலந்துகொண்டு, எல்லோருடனும் விருத்தாசலம் பெரிய கோயிலுக்குப் புறப்பட்டுச் சென்று, திருக்கோயில் மூர்த்திகளுக்கு அபிஷேக, ஆராதனை பண்ணித் தீபாராதனை தெரிசித்துச் சிவாச்சாரியார் பால், விபூதி பிரசாதம் பெற்றுச்சுவாமிகளிடம்வந்து மகேசுவர பூஜை, அன்னதானம், அடியவர்களுக்கு ஆடை, சந்தனம், தாம்பூலம், தக்ஷிணை ஆகியவை கொடுத்துப் பூர்த்தியானதும், சிவராமலிங்க பரமஹம்சர் தம் சீடரும், தாத்தா சுவாமிகளாகிய ஜீவன் முத்தரும், தொண்டர் மடத்துச் சித்தராகிய இரத்தின வேல் (காவியுடுத்து உருத்திராக்ஷ மாலை பூண்ட நிலையுடன்) மௌனி ஆச்சாள் புரத்துச் சுவாமிகள், சங்கரானந்தர் (காவியுடையுடன்) ஆகியவர்களை வரிசையாக நிறுத்திப் புகைப்படம் எடுத்துக்கொண்டு சுவாமிகளை வணங்கி அவர்கள் பால் ஆசி பெற்று ரெட்டியூரிலிருந்து வந்தவர்கள் ஊருக்குத் திரும்பினார்கள்.

---

## 50. ப்ரமானுபூதி நிலையும் பஞ்சாட்சர உபதேசமும்

பிறந்ததுண்டானு லன்றே பிறகுசாவது
தானுண்டாம்
பிறந்ததே யில்லையென்னும் பிரமமாவதுவும்
நானே
பிறந்தது நானென்றுகிற் பிரமமன்றந்
நானே
பிறந்தது பிறந்ததற்ற பிரமமா
நானே நானே. — கைவல்யம்.

சந்தேகத்தெளிதிற் படலம். (164வது பாட்டு)

அடியேன் தத்துவானு சந்தான தருக்க நூலும் சிவ ரகசியத்திலுள்ள ரிபுகீதையும், சிரவணஞ் செய்ததில், தனக்கு அன்னியமாகக் குருவும், உலகமும் இருப்பதாக எண்ணினல், அஃது அஞ்ஞானமென்றும், தன்னைத் தவிர அன்னியம் இல்லையென்றும், உறுதி செய்து கொண்டேன். அது சமயம் அடியேனைக் காண வந்த

ரெட்டியூர் மடத்துப் பண்ணை விஸ்வநாத ரெட்டியாருக்கும், அவர் தம்பி முத்துக்குமாரு ரெட்டியாருக்கும், விருத்தாசலத்தில் குமாரதேவர் மடாலயத்தில் பஞ்சாக்ஷர உபதேசாநுக்கிரகம் அடியேன் முன்னிலையில் செய்யப் பெற்றது

---

## 51. பக்தனுக்கு உயிர்ப்பிக்ஷை வழங்கல்

அரிமள தேவியிலிருக்கும் அஞ்சூரான் என்னுமொரு பக்தன் அடியேனிடத்தில் விபூதி வாங்கிக் குருவென்னும் நம்பிக்கையுடன் விசுவாசமாக இருந்து வரும் நாளில் ஒரு நாள் உப்புப் பார வண்டியினை வாடகைக்கு ஆடுதுறை திருமங்கலக்குடி மெயின் ரோட்டில் ஓட்டிக் கொண்டு போகும்போது வண்டியிலிருந்து தவறி சக்கரத்தினடியில் விழுந்த சமயத்தில் குருவேஅபயம் எனலும் அடியேனது உருவமானது தோன்றி வண்டி மாட்டினை நிறுத்தி வண்டியிலிருந்து விழுந்தவனைச் சரீரம் நசுங்காமல் செய்ததை மறுநாள் அஞ்சூரான் என்னிடம் வந்து வணங்கி, சற்குருவாகிய தங்கள் கிருபா கடாக்ஷத்தினல் உயிர் பிழைக்கப் பெற்றேன் என்ருன். இரண்டு மாதங்களில் கடன் முதலியனவற்றைத் தீர்த்துக்கொண்டு பின் சந்நியாச ஆச்சிரமத்தில் சேருவதாகக் கூறிச்சென்ருன்.

---

## 52. கல்லார்க்குக் கற்ருர் சொற் கூற்றம்

பின்னர், கணபதிபாளையம் சென்று பட்டாமணியம் இராமசாமி பிள்ளையை பார்த்து நீர் முன்குடுமி யெடுத்து ஆசாரப்படி சைவ, சமய ஒழுங்கினைக்கடைப்பிடியும், என அடியேன் சொல்லிச் சுமார் ஐந்து நாழிகை நேரம் சாஸ்திரப்படி கூறியும், அவர் தர்க்கித்து மறுக்கலாயினர். ஏனையோரும் அங்ஙனமே செய்தனர். பின்னர், அடியேன் வேருர் ஊருக்குச் சென்று பிக்ஷை செய்து கொண்டிருக்கும்போது முன்னர், அடியேன் வாக்குக்கு இணங்காத இராமசாமி பிள்ளைக்கு அன்று முதல் வாயில் புண் வந்துள்ளது. ஆகாரம் இல்லை என்று அடியேன் கேள்வி

யுற்றுக் கருணையுடன் சென்று அவருக்கு இதமான வார்த்தைகள் கூறி, சில வீடுகளிலும் போய்க் கரபாத்திர பிக்ஷையேற்றுண்டு, நன்னெறி போதித்துச் சென்றேன். அவர் தம் செயல்கள் சம்ஹார கர்த்தாவுக்குத் தான் தெரியவரும்.

---

## 53. விருத்தகிரி மடம் புகுதல்

பின்பு, அடியேன் பெண்ணுகடம் வழியாக விருத்தகிரி மடம் சேர்ந்தேன். அதுபோது குமார தேவர் மடத்துச் சிவசிதம்பர பண்டார சந்நிதிகள் அடியேனைப் பார்த்துக் "குமார தேவரே திருவுருக்கொண்டு வந்தருளியுள்ளார்கள்" எனப் பாவித்துப் பலகாரத்தை எடுத்து வாயிலூட்டி உபசரித்தனர். உச்சிப்பொழுதில் தெருக்களில் கைப் பிக்ஷ யேற்றுண்டு மடாலயத்தின், பின்புறத்தில், நிஷ்டை புரிந்தேன். பின் மணிமுத்தாற்றங்கரைப் பிள்ளையார் கோயிலில் இருந்து பக்கத்துக் கிராமங்களிலும், பழமலையிலும் உள்ள பக்தர்களுக்கு பக்த விஜயம் படிக்குமாறு ஆசீர்வதித்தேன். அடியேன் ஆழத்துப்பிள்ளையார் கோவிலில் நிஷ்டையிலிருக்கும் போது ஒரு விருத்தாப்பியர் வந்து ஆழத்துப்பிள்ளையாருக்கு 3 காலப்பூஜை நடக்காமல் இருக்கிறதுஎன்றுஅடியேனிடம் சொல்ல மறு நாள் தர்மகர்த்தா மாணிக்கம் பிள்ளை மகளுக்கு மந்திரவாதியால் ஏவப்பட்டுப் பட்டுப் புடவையில் தீப்பற்றலும், அசுத்தங்களைக் கொண்டு வந்து பாத்திரங்களில் இடுதலும், இன்னும் அநேக உபத்திரவங்கள் நடப்பதைப் பார்த்திருந்தவர்கள், நிர்வாண முத்துக் குமாரசுவாமிகளிடம் போய்சொன்னால்உபத்திரவம் தீருமென்னலும், ஷியார் மகளைஅழைத்துக்கொண்டு வந்து நமஸ்காரம் செய்ய அடியேன் ஆழத்துப் பிள்ளையாருக்கு அபிஷேக ஆராதனைகள் செய்து பக்தியுடன் சுற்றிவந்து கோமுக தீர்த்தம் உட்கொண்டால் இடர் தீரும் என்றும் தர்மகர்த்தாவாகயிருப்பதினால் காலந்தோறும் செய்து வந்தால் நலமாகும் என்றும் ஆசீர்வதித்தேன். அது முதல்

தினசரி காலந்தோறும் பூஜை சரியாக நடந்து வருதலும் இடர் நீங்கி இன்புற்றதும் குறிபிடப்பட்ட விஷயமாம்.

---

## 54. பக்த ராமன் நாயரின் தான தரும விசேஷம்

அத்தகைய பக்தருள் விருத்தாசலம் காமாக்ஷியம்மன் விலாச மோட்டார் சர்வீஸ் முதலாளி ராமன் நாயரும் விசேஷத்திலும் விசேஷமான ஒருவராவர். பக்தர்களுக்கு கொடுக்க அடியேன் ரயில் பார்சலில் தருவித்த ஆறு பாகங்கள்கொண்ட மகாபக்த விஜய பிரதிகளில் ஒன்றுக்குத்தச ரூபாய் கொடுத்துப் பெற்றுக்கொண்டு அதில் தன் பெயரையும் பக்த விஜயம் பெற்றுக்கொண்ட அன்பர்களில் தானும் ஒருவரென எழுதிக்கொண்டார். அவர் அடியேனிடம் பய பக்தி வாக்கு நம்பிக்கையுடன் நடந்து கொண்டு அதன் அறிகுறியாக அடியேன் தங்கி இருக்கும் மணிமுத்தா நதிக்கரையிலுள்ள துணைவந்த விநயகர் கோயிலில் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் முடித்துக் கொண்டு நித்திய நைமித்திய, பூஜைகளைக் காலந் தவருது நடத்த ஆதிசைவக் குருக்களை நியமித்து, ஆவணி மாத விநயகர் சதுர்த்தி உத்சவத்தை மிக விமரிசையாகப் பரத நாட்டிய விசேடங்களோடு கொண்டாடவும், யாத்திரை வாசிகளுக்கு அமுது செய்விக்கவும், கோயில் மெய்க் காவலிருக்கவும் இவை யாவையும் கவனித்து நடத்தத் தர்ம கர்த்தா முதலியோரை வைத்து நிரந்தரமான ஏற்பாடுகள் செய்ததுடன் அவ்வேற்பாடுகள் நடைமுறையில் நிகழ்தல் கண்டு இன்புற்றனர். மற்றும் விருத்தாசலம் பெரிய கோயிலில் பூஜைக் கட்டளைகள் நடத்தி வந்ததுடன், வேடப்பார் கோயிலில் 108 காவடி கொண்டுள்ள காவடி உற்சவமும் விமரிசையாகவும், கொளிஞ்சியப்பார் ஆலயத்திலும். உற்சவ விழாக்கள் பல சிறப்புடன் நடத்தி வந்தும், புண்ணிய சிந்தனு விவேகத்துடன், செல்வம் மேன்மேலும் பெருக வாழ்ந்து வந்தார். அன்றியும் அடியேன் தங்கியிருக்கும் தாத்தா சுவாமி ஆலயத்

திலுள்ள குகைக்குக் கதவு, ஜன்னல் வைத்துக் கொத்து வேலைகள் நடத்தினர். ஒரு நாள் சாதாரணமாக எங்கும் சென்று வழக்கமில்லாத தன் பாரியாளுடன் பின் புறமாக தோட்டத்து வழிவந்து அடியேனைப் பணிந்து இன்னும் பல திருப்பணிகள் இவ்வாலயத்திற்குச் செய்யவேண்டும் என்று மகிழ்வுடன் சொல்லிக் கொண்டார். அவர் முக் கனிகளை தேனுடன் கலந்து, பெரிய தாம்பாளத்தில் மண்ணெண்ணை மொத்த வியாபாரி பா. இராமசாமி ரெட்டியார் மூலம் அவ்வப்போது அடியேனுக்கு அனுப்பி வைப்பது வழக்கம். பல தடவைகளில் அடியேனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் பாலும், பழ வர்க்கங்களும் கொடுத்து அடியேன் உண்ட பின் தானும் தன் குடும்பத் தாரும் உண்டு மகிழ்வதும் உண்டு. எனக்கு ஆசனமாக உபயோகித்த பலகை ஒன்றைத் தன் வீட்டில் அடியேன் மேல் இருந்த பக்தியால் வைத்திருக்கிருராம். சேலம் ரோட்டில் ஷண்முகம் பிள்ளை கிணற்றுக் கருகில் அடி யேன் ஆணைப்படி சிவ பழனிச்சாமி நடத்திய தண் ணீர்ப் பந்தலுக்கு (பழமலை நாதர், குமார தேவருக்கு நால் வகைத் தண்ணீர் வைத்த ஐதீகப்படி) தவருது கட்டித்தயிர் ஒவ்வொரு டின் நாள் தோறும் ராமன் நாயர் வீட்டிலிருந்து அவர் மைத்துனர் மூலம் வந்து கொண் டிருந்தது. இன்னும் அவர்கள் செய்த பல தர்மங்களும் விரிக்கிற்பெருகும்.

---

## 55. ஆண்டான் அடிமைத் திறத்தின் மாட்சி

விருத்தாசலம் தொண்டர் மடாலயத்தில் இருக்கும் அடியேனிடம் பாராயண உபதேசம் பெற்ற இரத்தின வேல் சுவாமி பழனி ஆண்டவருக்குப் பல தரம் பசுஞ் சாணம், சாராயம் இவற்றினைச் சித்தர் நூல்களிற்கூறிய படி காவடி கட்டி யெடுத்துக் கால் நடையாகவே சென்று பழனியாண்டவர் சந்நிதிக்குப் போய் திறந்து பார்க்கை யில் பழனியாண்டவர் அருளால் சாணம் திருநீராகவும் சாராயம் வாசனை பொருந்திய பன்னீராகவும், பல முறை

மாறியிருக்கக் கண்டார்கள். அதனை ஆண்டவருக்கு அபிஷேகம் செய்து சித்தரென்ற பெயரை இரத்தினவேல் சுவாமி பெற்றனர். மேலும் அவ்விடம் தாமதித்திருந்த அடியேனிடம் அவர் அநுக்கிரகம் பெற்று நாள்தோறும் திருமுறைகள் ஓதிவருவாராயினர். மற்றும், அவர் ஜீவன் முக்த தாத்தா சுவாமிகளை தொண்டர் மடத்தில் வைத்து பணிவிடைகள் செய்து வரலாயினர் அவருக்கும் மடப் பள்ளி, உக்கிராண அலுவல் பார்க்கும் வையாபுரிக்கும், பெரிய புராணம், மகாராஜாத் துறவு, முதலிய நூல்களை பாடமாக அடியேன் கூறினேன். பாடம் பூர்த்திக்கு அவர்கள் கோயிலில் விசேஷ அர்ச்சனைகள் செய்தனர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரமும், தத்துவராயசுவாமி கள் திருவாய் மலர்ந்த பாடுதுறைப் பெரு நூலும், வேதாந்த அனுவதப் பரணியும், சிரவணஞ்செய்தேன். அடியேன் விருத்தகிரித் தொண்டர் மடத்திலிருக்கும் போது ஆண்டியப்ப பிள்ளையும் என்னும் சிவப்பிரகாசம் பிள்ளையும், இராமசாமி பிள்ளையும் வந்து கும்பிட்டுத் திருநீறு வாங்கிக்கொண்டு வடலூருக்கு சென்றனர். பூச நக்ஷத்திரத்தில் பழைய சபையில் முதல் நாள் விழாக் கொண்டாடப்பட்டு ஜோதிதெரிசனம் நிகழ்ந்துவிட்டது.

---

## 56. ஜோதி தெரிசனம் காட்டல்

இராமசாமி பிள்ளையும், சிவப்பிரகாசம் பிள்ளையும் ஜோதி தரிசனம் பார்க்க இயலவில்லையே எனவிரங்கி வருந்திச் சந்நிதி வழியாகப் பார்க்க இயலா விட்டாலும் ஜன்னல் வழியாகவாவது பார்த்துப் போகலாம் எனப் பார்க்கையில் அடியேன் திருவுருவே பழைய வடலூர் சபையின்கண் உடல் முழுதும் திருநீறு அணிந்துக் கொண்டு அங்குமிங்கும் உலாவி ஜோதியாய் மறையக் கண்டனர். இராமசாமி பிள்ளையும், சிவப்பிரகாசம் பிள்ளையும் திரும்பி விருத்தகிரியில் வந்து அடியேனிடம் வடலூரில் நிகழ்ந்த ஜோதி வைபவத்தினை எடுத்து ரைத்து வணங்கி விபூதி பெற்றுக்கொண்டனர்.

## 57. இரண்டு தெய்வீக நிகழ்ச்சிகள்

பழமலேவிட்டகன்று அடியேன் எயிலூர் வந்து ஒரு மாதம் அங்கிருந்த பின்னர் நிர்வாணமாக கும்பகோணத்தினே நோக்கி அணைக்கரை, திருப்பனந்தாள், வழியே சோழபுரம் மெயின் ரோட்டில் போகும்பொழுது, அங்கு மகமதியச் சிறுவர்கள் கூச்குரலிட்டு மண்ணை வாரியிரைத்தனர். "இல்லந்துறந்த சிங்கங்கட்கு உண்டுங்காண் பங்கம்" எனச் சிந்தித்துக் கொண்டு செல்லுகையில் மகமதியத் தெருவிலிருந்து வருபவர் ஒருவர் 'ஆண் பிள்ளைச் சிங்கம் அவர் தான்" என இரைந்து பாடிக்கொண்டு மெயின் ரோட்டுக்கு வந்து பிள்ளைகளைப் பார்த்து 'பிள்ளைகாள்! நீங்களும் இவரைப் போல் நிர்வாணமாக வந்தால் உங்கட்கு ரூபாய் ஆயிரந்தருவேன்' என இறைந்து கூறியவுடன் அவர் சரீர உருவம் மறைந்தது. அவரே உண்மை மஸ்தான்.

பின்னர் மகமதியர்களும் சிறுவர்களும் ஓடி வந்து தேவரீர் தான் அல்லா! அல்லா! எங்கள் ஆண்டவர்! என்று சலாம் செய்து கொண்டு சிறிது தூரம் வந்து வழிவிட்டுத் திரும்பி அடியேன் சாலையிற் செல்லுங்கால் ஜனநெருக்கத்தால் ஒரு வீட்டிற்போடப்பட்டிருந்த பெஞ்சியின் மேல் உட்கார்ந்தேன். அவ்வீட்டுப் பெண்களும் தீர்த்த மாடிக்கொண்டு வண்டியில் வந்திறங்கி அவர்கள் அடியேனைக் கண்டு வணங்கி, பால் வேண்டுமா? இளநீர் வேண்டுமா? என்று கேட்கவும் அடியேன் மௌனமாக இருந்தேன். அவ்விடமிருந்த பழக்கமுள்ளவர்கள் சுவாமிகளுக்கு இப்போது ஒன்றும் வேண்டாம். உச்சிப் பொழுதில் பிக்ஷையிடலாம் என்றனர். உச்சிப்போழ்து பிக்ஷ உட்கொண்டு போகும்போது சாலையில் ஒரு துஷ்டன் அடியேனைப் பார்த்து நிந்தனை வார்த்தைகள் பேசவும், அன்புடைய மற்றவர்கள் அவனை, அங்ஙனம் பேசக்கூடாது; பரமசிவமே நமக்குக் காட்சியருள வந்துள்ளது, என்று கும்பகோணம் மஹாமக தீர்த்தக்கரை வரைக்கும் வாக்குவாதம்

செய்துகொண்டு வந்து மஹாமகக் குளத்தின் படியில் அடியேன் உட்கார்ந்து தீர்த்தத்தில் பாதங்களை வைத்திருக்க அடியேனைச் சாதுவாக நினைத்தவர்களுக்கு ஆகாயத்தில் பறக்கிறதாகவும், துஷ்டனுக்கு நிலத்தில் நிற்கின்றதாகவும் தெரிய, அவர்களுக்குள் சண்டை ஏற்பட்டு ஏனையோர் துஷ்டனை அடித்து விரட்டினர். பின்னர் வந்த வழியாகத் திரும்பி வரும் போது சிறு தெருவில் ஒரு பக்கம் சென்றேன். அங்கு ஒருவன் தலைவிரி கோலமாக ஓடிவந்து, ஆடை அணிந்து கொள்ளுங்கள் என்று இரண்டு கைகளையும் விரித்துத் தடுத்தான். மார்புடன் மார்பு சேர, அவன் கைகளை விரித்துக் கொண்டபடியே ஒதுங்கி நின்முன். அம்மூர்க்கன் உணர்வின்றிப் பதுமை போல் நிற்கக் கண்டு இரக்கங் கொண்டு மௌன சுவாமிகள் மடம் சேர்ந்தேன். அங்கு மகாமகத் தீர்த்தமாட வந்தவர்களெல்லாம் வணங்கிச் சந்தோஷமாகக் கொண்டாடிப் போயினர்.

---

## 58. அடியார்களுடன் அளவளாவுதல்

அடியேன் நிர்வாணமாயிருப்பதை சங்கத்து நாராயணஐயா வந்து இப்படியிருப்பதுதானு ஞானம்? என்றும், உங்கள் சிவராமலிங்க பரமஹம்சரும் இப்படித்தானு நடக்கின்றனர்? என்றது மனேமயம். மறுநாட் காலையில் மகாமகத்துக்கு வந்த திருப்பூவணம் மடாதிபதி காசியானந்த சுவாமிகள் விளங்கிய பெருங்கூட்டத்தினர் அடியேனுக்கு அபிஷேகம் புரிந்து மாலை சூட்டி அன்னம் ஊட்டி வைத்தனர். அதன் பின்னர், சுந்தரப்பெருமாள் கோயிலுக்குப் போய் குரு சிவராமலிங்க பரமஹம்சர் நிஷ்டையிலிருப்பதாகக் கேள்வியுற்று அவ்விடம் நிட்டை சமயம் அடியேனுக்குச் சங்கரானந்த சுவாமிகள் கோவணம் லங்கோடு கொண்டு வந்து உடன்பாடின்றியே தரித்துவிட்டனர்.

---

## 59. குருமூர்த்திகளின் அருட்பெருக்கமைதி

பின்னர், குருமூர்த்திகள் எழுந்து வர அடியேன் வணக்கம் புரிந்தேன். அங்கிருந்த அடியார்களெல்லாம் அடியேனுக்கு வணக்கம் புரிந்தனர். சுந்தரப்பெருமாள் கோயில் வேளாளர் தெரு தங்கவேலுப் பிள்ளை, ஒன்பத்துவேலி பரசுராம பிள்ளை ஆகிய அன்பர்கள் சேர்ந்து குருமூர்த்தி முதலிய அடியவர்க்கெல்லாம் பந்தி வைத்து மகேசுவர பூஜை செய்து மகிழ்ந்தனர், பந்தி முடிந்தவுடன் குருமூர்த்திகள் பிக்ஷை பண்ணின இலையிலுள்ள அன்னமும் அடுத்த இரண்டு வீடுகளில் பிக்ஷை பண்ணிக்கொண்டு சற்குரு சுவாமிகள் இரயிலுக்குப் புறப்பட எல்லோரும் நமஸ்காரஞ் செய்து விபூதி பிரசாதம் பெறவும் அடியேனும் பெற்றுக்கொண்டேன். குருமூர்த்திகள் போகும் ரயில் ரோட்டில் கண்களில் நீர் ததும்பப் பாதத்தில் சாஷ்டாங்கமாக வணங்கினேன். கொஞ்ச நேரமிருந்து குருமூர்த்திகள், எழுந்திரு, எழுந்திரு என்றலும் அடியேன் எழுந்து நின்றேன், குருமூர்த்தி உன் சித்தம் நிர்த்தரங்கச் சமுத்திரம் போல் சுகமாய் இருந்தபடியே இருப்பாயக என்று குருமூர்த்தி கிருபாகடாக்ஷம் வைத்து ஆசீர்வசனஞ் செய்து இரயிலுக்கு எழுந்தருளினர். அடியேன் திண்ணையில் உட்காரும்போது இதுதான் சற்குரு சிவராமலிங்க பரமஹம்சருக்கும் அடியேனுக்கும் இறுதிப் பிரிவு என்று மன இளைப்போடுமிருந்தேன்.

---

## 60. நூனெறியும் ஆசார நெறியும் தெருட்டல்

பின்னர், வட ஆலத்தூர் பக்தர்கள் பாத பூஜை முதலியன செய்து பிக்ஷை கொடுத்தலும் அவ்விடத்துப் பக்தர்களுடைய பணச் சகாயங்களால் அநேக பக்தர்களுக்கு ஐம்பது பிரதிகளுக்கு அதிகமாக மகா பக்த விஜயம் வாங்கிக் கொடுக்கச் சொல்லியும், வாசுதேவ மனனம் முதலிய பல நூல்களிலுள்ள ஆசாரப்படி நடக்கும்படி

அடியார்களுக்குச் சொல்லியும் மகிழ்வோடு ஆசீர்வதித்துச் சிக்கல் பெரிய கும்பாபிஷேகத்திற்குச் சென்று அங்கிருந்த பெரியவர்களை தெரிசித்துப் பாதங்களை பரிசித்து பூரண கடாக்ஷம் பெற்றுத் திருக்களர் சென்றேன்.

---

## 61. திருஷ்டாந்தத்தால் திருப்திப்படுத்தல்

அவ்விடம் மெய்யப்ப சுவாமிகள், மலையாளம் நாராயண சுவாமிகள் இன்னும் பெரிய சாதுக்களையும் நமஸ்காரஞ்செய்து இருக்கும்போது ஆங்கிலம் படித்த ஒருவர் ஞானிகளுடடைய நித்திரைக்கும், உலக மக்களுடைய நித்திரைக்கும் என்ன வேற்றுமை ? என்று காசியானந்த சுவாமிகள் முதலானவர்களை இரண்டு தினம் சந்தேகம் தெளியக் கேட்டனர். மலையாள நாராயண சுவாமிகள் முதலான பலரும் அவருக்குப்பற்பல திருஷ்டாந்தங்களை எடுத்துச் சொல்லியும் தெளியாமல், செவிடன் காதில் சங்கு ஊதினாற்போல ஒப்பாமல், மறுநாள் அடியேனைப் பார்த்து, சுவாமிகள் மௌனமாக இருப்பதால் தாங்கள் தெளிவிப்பின் சம்மதமாகும் எனலும், அடியேன் கைகளால் சைகை காட்டி நானாவிதத் தழைகளைக் கொண்டுவரச்செய்து ஒவ்வொன்றின் மேல் கைவைத்து, இது என்ன நிறம் ? இது என்னவென்பதை பூமியில் எழுதிக் கேட்க, அவர்கள் பச்சை நிறம்; பச்சை நிறம்; என்றனர். இவையனைத்தும் ஒரே நிறப் பச்சையாக இருக்கின்றனவா ? எனக் கேட்டேன். அதற்கு வெவ்வேறு விதப் பச்சை நிறமாய் இருக்கின்றது என விடை பகர்ந்தனர். கண்முன்னுள்ள பொருள்களின் வேற்றுமையேதெரிந்து சொல்வற்கு இயலாவிட்டால் ஞானி, அஞ்ஞானிகள் நித்திரையின் பேதம் அறியக் கூடுமோ ? என்று தெரிவிக்க அவர் சந்தேகம் நீங்கிச் சரியென்று ஒத்துக்கொண்டு பெரியோர்களுக்கெல்லாம் நமஸ்காரம்செய்துமகிழ்ந்தார்.

---

## 62 சப்பாத்திக்கள்ளியைத் திருநீற்ருல் ஒழித்தல்.

அடியேன் தில்லை விளாக மார்க்கஞ் சென்று திரு வெண்காடு முக்குளத் தீர்த்தமாடி அங்கு கோடிக்கரைப் போய் தீர்த்தமாடி, அகஸ்தியம்பள்ளியிலுள்ள குழகர் கோயில் தெரிசனம் செய்து, திரும்பி வேதாரண்யம் வரும் வழியில் மணல் தரைகளில் கொஞ்ச தூரம் வந்த வுடன் சப்பாத்திக்கள்ளி நேர் வழியை மறைத்திருந்தது. கணபதி யருளால் ஔவையார் திருக்கோவிலூரில் எவ் வளவோ பைசந்தி என்னும் அருமையாகிய சித்து விளை யாடல்களை பெண்ணை நதியில் செய்திருக்கிருர்களென்று நினைந்து "கணபதி யருளால் சப்பாத்திக்கள்ளி முள் ஒழிந்து போகட்டும்" என்று சொல்லி அதற்குள்ள மந்திரம் ஜெபித்து விபூதியை சப்பாத்திக்கள்ளி மீது தூவினேன். அதன்படியே விபூதி நிறமான பூச்சியுண் டாகி இப்போது சப்பாத்திக்கள்ளி ஒழிந்து சுகமுண் டானது யாவரும் அறிந்ததே.

---

## 63. இரமண சாஸ்திரிக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தல்

முலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர்
சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர் — பலதாரை
வட்டிலே போலுமவர் மாயோக வாசகத்தைக்
கிட்டி னரகங் கிடீர். — ஒழிவிலொடுக்கம்.

இதனுல் கல்வி உடையோரெனும் பிரபஞ்சிகளினும் கேடென்பது ஆயிற்று கல்வி, பொருள் என்னும் இரண்டு செல்வங்களும் நல்லோர் பால்வரின் நன்மை யும், தீயோர் பால்வரின் தீமையும் மேன்மேல் வளர்தலின் இவர் தீயர் என்பது ஆயிற்று,

மற்றபடி ஊரில் சுமார் 1931-ல் வேதாரண்யம் இரமண சாஸ்திரி என்பவர் எல்லாப் பாஷைகளிலும் நிறைய நூல்களை வாங்கி அலமாரிகளிலும் ஷெல்ப்களி

லும், அடுக்கி வைத்திருந்தார். அவர் திருமூலர், திருமந்திரம் மூவாயிரத்திற்கும், கம்பளிச்சித்தர் உரையெழுதியும் வான சாஸ்திரத்தில், ஆங்கிலம், ஜெர்மன், முதலான இருபது மொழிகளில் ஜாதகக் குறிப்பு எழுதியும், பணத்தில் தில் நிறைந்தவராக இருப்பதைக்கேள்விப்பட்டு இரமண்ண சாஸ்திரி வாசித்துக்கொண்டிருக்கும் இடத்திற்கு அடியேன் போக அவர் சேவகர்களால் நாற்காலி கொடுத்த போது உட்கார்ந்து இரண்டு நாழிகை நேரம் ஆகியும் அவர் மெழுகு வத்தி தீபத்தில் வாசித்துக் கொண்டேயிருந்தார். என்ன வாசிக்கின்றீர் என்றதற்கு அலட்சியமாக உபநிடதம் என்று சொல்லி மேலும் வாசித்துக் கொண்டிருந்தார். தாமதத்தின் பேரில் என்ன உபநிடதம் என்று கேட்க "முண்டகோப நிடதம்" வாசிக்கின்றேன் என்று சொல்லி மேலும் படித்துக்கொண்டிருந்தார் எவ்வளவு காலமாக வாசிக்கின்றீர் என்றதற்கு இருபத்தைந்து ஆண்டுகளாக என்று நாகுளறி நின்று விட்டது. அதன் மேல் இருபத்தைந்து வருடங்களாக வாசித்ததில் சாந்தியாதி குணங்கள் யாது உண்டாயின. படிப்பில் நான்கு விதப்படிப்புகள் இருக்கின்றன. அவை என்ன படிப்புகள் என்று கேட்கின்ருயோ அவையாவன; (1) படிச்சுவர் படிப்பு, (2) படிச்சவர் படிப்பு, (3) படித்தவர் படிப்பு, (4) படித்தவப் படிப்பு என்பன.

1. படிச்சுவர் படிப்பு: திருக்குளத்தில் சுவர் கட்டியிருந்து அது இடிந்து விழுந்த குட்டிச்சுவர் படிப்பு படித்தீரா ?

2. படிச்சவர் படிப்பு: படியில் பாசம் படிந்திருந்து அதில் கால் வைத்தால் வழுக்கி விழும் மாதிரி உலகத்தை ஏமாற்றும் படிப்புப் படித்தீரா ?

3. படித்தவர் படிப்பு: சாந்திக, மாரண மோகனம், கண்கட்டு வித்தையான படிப்பு படித்தீரா? அதாவது இத்தகைய கீழ்மையான நரகத்தைச் சேர்க்கும் படிப்புப் படித்தீரா ?

4. படித்தவப் படிப்பு: பெரியோர்களுக்கு அங்கீகாரமாக மோக்ஷத்தைச் சேர்க்கும் படிப்புப் படித்தீரா ?

இந்தப் பிரகாரம் கேட்டதற்கு இரமண சாஸ்திரிக்கு நாக்குளறி பய பக்தியோடு நமஸ்கரித்து எழுந்து நின்று சுவாமிகள் சொல்வதை நம்பிக்கையுடன் கேட்டுக்கொள்கிறேன் என்று நான்கு மாதம் கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார் என்னும் நான்கு நூல்களையும் அவற்றின் உரைகளில் கண்டிருக்கும் 96 தத்துவத்திற்கு 96 புஸ்தகம் உதாரணமுள்ள நூல்களுடன் அவருக்கு பாடமாக உபதேசித்தும் வேதாரண்யம் ஆலய மூர்த்திகளுக்கு அபிஷேக ஆராதனைகள் பூஜைகள் செய்யச் சொல்லியும் அடியார்களுக்கு அன்ன தானம் முதலானவை வழங்கியும் அடியேனிடம் அனுக்கிரஹம் பெற்றுச் சந்தோஷமாகவிருந்தார்.

---

ஸ்ரீ ப்ரம்ம மோன நிர்வாண முத்துக்குமார சுவாமிகள் வடலூர் கும்பாபிஷேக உபன்னியாச மேடையில் அகர உயிரின் இலக்கணம் 45 வினுக்களுக்கு தாற்பரியம் விளக்கமாக கூறியது,




1 விந்து — பெரிய வெளிச்சம் சூரிய வெளிச்சம்
2 நாதம் — பெரிய நாதம்

3 பரவிந்து — அதில்பாதி வெளிச்சம் சந்திர வெளிச்சம்
4 பரநாதம் — நாதம்
5 அபரவிந்து — வெளிச்சம் நக்ஷத்திர ஒளி
6 அபரநாதம் — நாதம்
7 திக்கிராந்தம் — அருகிய வெளிச்சம் மின்னல் ஒளி
8 அதிக்ராந்தம் — சப்தம்
9 வாம சக்தி
10 ஜேஷ்ட சக்தி
11 ரௌத்திரி சக்தி
12 காளி சக்தி

---

## அகரவுயிர் என்பது யாது

### அகர உயிர்க்கு

1 வரி வரலாற்றின் இலக்கணம் என்னே
2 ஒலி வரலாற்றின் இலக்கணம் என்னே
3 தன்மை வரலாற்றின் இலக்கணம் என்னே
4 உணர்ச்சி வரலாற்றின் இலக்கணம் என்னே

அதன்

5 உண்மை யனுபவ இலக்கணம் என்னே

அகர வுயிர்க்கு

6 வரி உரு இலக்கணம் என்னே
7 ஒலி யுரு விலக்கணம் என்னே
8 தன்மை யுருவி னிலக்கணம் என்னே
9 உணர்ச்சி யுருவி னிலக்கணம் என்னே
10 உண்மையனுபவ வுருவி னிலக்கணம் என்னே

அகர வுயிரின்

11 வரிச் சொரூப விலக்கணம் என்னே
12 ஒலிச் சொரூப விலக்கணம் என்னே
13 தன்மைச் சொரூப விலக்கணம் என்னே
14 உணர்ச்சிச் சொரூப விலக்கணம் என்னே
15 உண்மை அனுபவச் சொரூப விலக்கணம் என்னே

அகர வுயிர்க்கு

16 வரிச் சுபாவ விலக்கணம் என்னே
17 ஒலிச் சுபாவ விலக்கணம் என்னே

---

18 தன்மைச் சுபாவ விலக்கணம் என்னே
19 உணர்ச்சிச் சுபாவ விலக்கணம் என்னே
20 உண்மை அனுபவச் சுபாவ விலக்கணம் என்னே

அகர வுயிரின்

21 வரிச் செயற்கை யிலக்கண மென்னே
22 ஒலிச் செயற்கை யிலக்கண மென்னே
23 தன்மை செயற்கை யிலக்கண மென்னே
24 உணர்ச்சி செயற்கை யிலக்கண மென்னே
25 உண்மைச் செயற்கை யிலக்கண மென்னே

அகர வுயிரின்

26 வரி அதிகார விலக்கணம் என்னே
27 ஒலி அதிகார விலக்கணம் என்னே
28 தன்மை யதிகார விலக்கணம் என்னே
29 உணர்ச்சி யதிகார விலக்கணம் என்னே
30 உண்மை யதிகார விலக்கணம் என்னே

அகர வுயிரின்

31 வரிப் பொது விலக்கணம் என்னே
32 ஒலிப் பொது விலக்கணம் என்னே
33 தன்மைப் பொது விலக்கணம் என்னே
34 உணர்ச்சிப் பொது விலக்கணம் என்னே
35 உண்மைப் பொது விலக்கணம் என்னே

அகர வுயிரின்

36 வரிச் சிறப் பிலக்கணம் என்னே
37 ஒலிச் சிறப் பிலக்கணம் என்னே
38 தன்மைச் சிறப் பிலக்கணம் என்னே
39 உணர்ச்சிச் சிறப் பிலக்கணம் என்னே
40 உண்மைச் சிறப் பிலக்கணம் என்னே

அகர வுயிரின்

41 வரிக்குண விலக்கண மென்னே
42 ஒலிக்குண விலக்கண மென்னே
43 தன்மைக்குண விலக்கண மென்னே
44 உணர்ச்சிக்குண விலக்கண மென்னே
45 உண்மைக்குண விலக்கண மென்னே

**கல்வியிற் செருக்கடைதல் எவ்வாற்றுனும் பொருந்தாது**

என்பது ஆன்ரோர்கள் வாக்கியம்

---

## அகரத்தின் லக்ஷணம் 9

மூலாங்கரப் பிரணவமாகிய அகர லக்ஷணம் ஒருவாறு



1 ஊன்றல்—வாமை
2 சுழித்தல்—ஜேஷ்டை
3 விசிரிம்பித்தல்—ரௌத்திரி
4 மடித்துமேலேறல்—காளி
5 அங்கிருந்து கீழ்வரல்-கலவிகரணி
6 மேல்புடைபெயர்த்தல்-பலவிகர [ணி
7 கீழ்த்தாழல்-பலப்பிரமததனி
8 கீழ்ஊன்றிநிற்றல்-சர்வபூததமணி
9 வரிவடிவாதல்-மனோன்மனி

இதில் விந்து நாதம் முதலிய நவ நிலைகளுமுள. விரிக்கில் பெருகும்.

---

உ
திருச்சிற்றம்பலம்

## காளமேக புலவர்

தூதஞ்சுநாழிகையிலாறு நாழிகைதனிற்சொற்சந்தமாலைசொல்லத்
துகளிலாவந்தாதியேழு நாழிகைதனிற்றொகைபட விரித்துரைக்கப்
பாதஞ்செய்மடல்கோவைபத்து நாழிகைதனிற்பரணியொரு நாண்முழுவ [தும்
பாரகாவியமெலாமோரிரு தினத்திலேபகரக்கொடிகட்டினேன்
சீதஞ்செயுந்திங்கண்மரபினனீடுபுகழ் செய்யதிருமலைராயன்முன்
சீறுமாறென்றுமிகுதாறுமாறுகள் செய்திருட்டுக்கவிப்புலவரைக்
காதங்கறுத்துச்சவுக்கிட்டடித்துக் கதுப்பிற்புடைத்துவெற்றிக்
கல்லணையினெடுகொடிய கடிவாளமிட்டேறுகவிகாளமேகநானே.

இம்மென்னு முன்னேயெழுநூறு மெண்ணூறும்
அம்மென்ற லாயிரம்பாட் டாகாதோ — சும்மா
இருந்தா லிருந்தே னெழுந்தேனே யாயின்
பெருங்காள மேகம் பிளாய்,

( அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர் )

எவ்வன மனோன்மணி பதப்பணிகொள் சேதுபதி
இரைவன்மணிவாசன்மணிவா
யிலகுமணி சைவமணி சோமசுந்தர குருவே
னையன்மகிழ் சிந்தாமணி
செவ்வசன மொழிதமிழ்ச் சரவணப் பெருமான்
சிரோன்மணியனுப்புமோலை
செய்யதிருமலைராயன்பட்டணித்தவரெலாஞ்
சிரசுமேற்கொண்டுகொண்க
இவ்வூரில்வந்துதிருமலைராயனைப்போற்றி
யிலகுகவிகாளமேக

மெமகண்டமொருதினுசுபாடிஞனுமுமிங்
கீரட்டுவகைப்பாடுவோம்
ஒவ்விதையரிந்துகனதனவரிசையுதவிஞ
லுமதுகுடிவாழிவாழி
யுதவாதிருப்பிரெனிலுமதுபட்டணமின்னு
மொருக்கமண்மாரியே

மகபதி நராபதிநீதிபதி சேதுபதி
வாசற்ப்ரசண்டவாக்கி
வடிதமிழ்ச்சோமசுந்தரகுருசுவாமியடி
மைக்குமடி மைக்குமடிமை
மயில்வாகனக்கடவுளருளிஞலுபயசா
மரவிருதுகொண்டதுல்யன்
மலேயாளராஜனருள்தந்தபல்லக்குவெகு
மதிபெற்றசார்வபூமான்
யுகமெலாமகிமைபெறு தஞ்சைமகராஜனே யொ
ரேழடியழைத்தநிபுணன்
உசிதனஜா தூபாபிருகையாற்றருவரிசை
யொருகையால்வாங்குகவிஞன்
உற்றசிவகங்கையிற்கௌரிவல்லவராஜ
னுதவுவளநாடுபெற்ருேன்
உயரிலங்கைப்பூமிராஜசமூகத்தினிலு
மொருகோடிவரிசைகொண்டோன்

ககனமுதண்டவேதண்டபிரமாண்டங்
கவிப்புகழ்படைத்தவுரவோன்
காசிமுதலாக ராமேச்சுரவரைக்குங்
கவித்துவச நாட்டுவிஜயன்
கற்றுச்சொலிக்கும்வருஸ்தானுபதிக்குமிரு
கனகதண்டிகைகொடுத்தோன்
கவிமதக்குஞ்சரஞ்சரவணப்பெருமாட்
கவிச்சக்ரவர்த்தியோலே
புகழ்மேவுசிங்கநகர்வளருங்குமாரவேள்
பூபனெதிர்கொண்டுகாண்க
பொரவராவேங்கைகைபாராததாதுசெம்
புக்குளமையாதசாமி
புவியிலிருளாவேமமேய்ந்துவளராதமாடு
பொங்கிவேகாதகாணம்
பூண்டொடிபடாவத்தமறுபடாவுடலேழு
பொதிதந்து நீவாழியே.

## 64. பெரியோர் நெறிபற்றிப் பேரின்ப வீடடைதல்

சுவாமி தர்சனம் செய்து கந்தசாமி சுவாமி மடத்தில் தங்கியிருக்கும் போது அ. சோமசுந்தரம் பிள்ளை பக்த விஜயம் வாங்கி அடியேனிடம் கொண்டு வந்து வைத்து நமஸ்காரம் செய்து படிக்கும் போது பக்த விஜயத்தில் நாராயணனுடைய அருள் பெற்ற பக்தர்கள் கிருபையாலும் அடியேனுடைய வாக்கை நம்பி அடியேனின் போட்டோ படத்தை வைத்து உபாசனை செய்த காரணத்தாலும் திருவுருவப் படத்தில் கண்டவாறு சுவாமி பிரசன்னமாகி அனுக்கிரஹித்தபடி அஷ்டாவதானம் செய்தும், இலக்ஷிமி கடாக்ஷத்தால் செல்வம் நிரம்பப் பெற்றும் இருக்கும் நாளில் 1956-ல் அந்திய காலத்தில் அடியேனை நினைக்க அடியேனும் கணபதி அருளால் கோயம்புத்தூர் பக்கமிருந்து கடித மூலம்

எல்லோர்க்கும் காலன் துறவீவன் ஈயாமுன்
நல்லோர் துறப்ப ரென் றுந்தீபற
நன் றறி வார் களென் றுந்தீபற.

என்னும் கவி எழுதித் தெரிவிக்க உடனே துறவறம் கொள்வதாகக் கடிதம் எழுதினர். கடிதம் கிடைத்ததும் விருத்தாசலம் வரும்படி அடியேன் உத்திரவுப்படி கடிதம் எழுதியதும், அதைப் பார்த்ததும் வேதாரண்யத்தில் ஸ்நானுநுஷ்டானம் செய்து அம்பாள் தோத்திரத்தில் ஓரடி ஓதியதும் இறுதிக் காலம் நெருங்கியது தனக்குத் தெரிந்து மகேசுராநந்த சுவாமிகளை கற்பூரம் செய்யச் சொல்லி சாயுஜ்யமடைந்தார். மடத்து மகேசுராநந்த சுவாமி ஆபத் சந்யாசம் கொடுத்து கற்பூர ஆலாத்தி காட்டி ஊர்வலமாகக் கொண்டு போய்ச் சமாதி வைத்தாயும் பத்தாம் நாள் மோக்ஷ தீபத்திற்கு அடியேனுக்கு அ. சோமசுந்தரம் பிள்ளை சகோதரர் சர்தார் வேதரத்னம் பிள்ளை பத்திரிகை அனுப்பினர். அடியேன் கோயம்புத்தூரிலிருந்து பத்தாம் கிரியைக்கு வேதாராண்யம் வந்து சேர்ந்தேன். அடியேன் முன்னிலையில் விசேஷமாகக் கிரியைகள் நடந்தன.

## 65. குருசிவராமலிங்கர் மறைந்த செய்தி

அங்கிருந்து, பஞ்ச நதிக்குளம் போய் தேவார ஆசிரியரைச் சற்குரு சுவாமிகளுக்குக் கடிதம் எழுதும்படி சொன்னேன். அவர்கள் கடிதம் பார்த்து நான் அரூபமாகப்போய் விட்டேன். நீ என்னைப் பார்க்க நினைப்பது ஆகாயத்தினை, எட்டிப் பிடிப்பது போலிருக்கின்றது, எனப்பதில் கிடைத்தது. கடிதம் கண்டதும் இரண்டு சரீரத்தில் ஒரு சரீரம் மறையும் என எண்ணினேன். அதன்படியே 'குரு சரீரம் சென்னையில் ஆனந்தா சிரமத்தில் விதேக கைவல்யம் அடையும் நேரத்தில் அடியேன் வேதாரண்யத்தை அடுத்த பஞ்ச நதிக்குளத்தில் அருணாசல சுவாமி மடத்தில் நிஷ்டையில் இருந்தேன். சிவராமலிங்க பரமஹம்ஸருடைய திருவாக்கால் என்னைப் பார்க்க முடியாது என்று சொன்ன வாக்கு பலமாக அடியேன் காதில் விழ அதனைச் சீனுவாஸ ஸ்வாமிகளிடம் கூறினேன். பின் மறுதினம் குரு தேக வியோகமானார் எனக் கடிதம் வந்தது- மார்கழி மாதம் 5உ திருநெல்வேலிக்கு சென்னையிலிருந்து மெயில் வண்டியில் சற்குரு சிவராமலிங்க பரமஹம்சரின் திருமேனி பார்ஸல் செய்து போவதாக எழுதியிருந்தது.

விவரம்: ஸ்ரீ சிவராமலிங்க பரமஹம்சருடைய திருமேனி சென்னைத் திருவொற்றியூரான் அடிமையும் சிவராமலிங்க சுவாமிகள் சீடருமான, **T. P.** இராமசாமிப் பிள்ளையவர்களின் பெரும் பொருள் உதவியால் மங்களகரமாகப் பார்ஸல்செய்து வல்ல நாட்டிற்கு அனுப்பப்பட்டது. அவ்வமயம் பிள்ளையவர்கள் உடனிருந்தது யான் நேரில் கண்டது.

இப்படிக்கு
திருவொற்றியூர் அப்பர் கோவில்
பாலசுந்தரம் என்னும் பெரிய குமார தாஸன்
9—10—1958.

---

## 66. பக்தர் கூட்டத்தில் நிகழ்த்திய அதியசங்கள்

மேற்கண்ட கடிதத்தைக் கண்டு மனச்சோர்வடைந்திருக்க நேர்ந்தது. அவ்விடம் விட்டு கருப்பங்குளம் பண்டரி பஜனை ஆரம்பித்துக் கொண்டிருந்த இடத்தை அடியேன் அணுகியவுடன் பஜனையின் நடுவில் உட்கார வைத்துப் பூமாலைகள் போட்டுப் பஜனை ஆரம்பித்தனர். பின் சிறிது நேரத்திற் கெல்லாம் மக்கள் கூட்டம் நிறைந்தது. கைத்தாளம் போட்டுக் கொண்டிருந்த ஒருவர் தன்னை மறந்து அருள்வந்து ஆடினர். வீட்டினுள்ளிருந்த அம்மையாரும் கோயிந்தா! கோயிந்தா!! என்று சொல்லிக்கொண்டு வெளியிற் புறப்பட்டதைப் பார்த்துப் பக்கத்து வீட்டிலுள்ளவர்கள் கையைப் பிடித்திழுத்து வீட்டினுட் சேர்த்தனர். வந்தவர்களில் சுமார் 15 நிமிடங்களுக்குள் மூன்றிலொரு பங்கு ஜனங்கள் ஆடத்தொடங்கின சுவாமிகளுடைய அருள் பெருக்கமாயிருக்கின்றது; நிறுத்துங்கள்; நிறுத்துங்கள்; என்று சொல்லி அடியேன் விபூதி கொடுக்க, எல்லோரும் சாந்தத்திற்கு வந்தனர். பஜனை முடிந்து வாழி சொல்லிச் சந்தோஷமாய்ப் போயினர்.

ஒரு கிராமத்தில் இராமாயணம் படித்துப் பட்டாபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. அவ்விடம் போகும் போது அங்கிருந்தோர் அனைவரும் பெரியோர்களுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்து ஆசனத்தில் இருக்க வைத்து இராமாயணப் புஸ்தகத்தைப் பூஜை ஆரம்பித்துக் காப்புச் செய்யுளைப் படித்தனர். அதில்,

அஞ்சிலே யொன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றா றாகவாரியர்க்காக யேகி
அஞ்சிலே யொன்றுபெற்ற வணங் கைக்கண் டயலாரூரில்
அஞ்சிலே யொன்றை வைத்தான் அவன்நம்மை யளித்துக் காப்பான்,

என்ற அநுமான் துதியுடன் ஆரம்பித்தனர். துதியைப் படித்தவர் "இப்பாட்டில் 'அஞ்சு அஞ்சு' என்று வந்துளதே; அதன் பொருள் எனக்குப் புலப்படவில்லை,

சுவாமிகள் சொல்ல வேண்டும்" என்றனன். அடியேன் உபாசன மூர்த்தியைத் தியானித்து அவர் முகத்தில் திரு நோக்கம் செய்ய அவர் "அநுமார் துதியாதலால் அநு மார் வாயுவின் புதல்வர்; ஆகாய வழியே சென்று சமுத் திரத்தைக் கால்வாயாகத் தாண்டிப் பூமா தேவி பெற்ற சீதா தேவியினைக் கண்ணுற்றுப் பேசி, இலங்கையினை அக்கினியினால் கொளுத்திய அன்னவர் என்னைப் பாது காத்தருளுவார்." என்று சொல்லி முடித்தார். உடனே பொருள் கூறினவரைப் பார்த்து கோபித்து "ஒருவருட மாக உனக்குப் பொருள் தெரிந்திருந்தும் ஏன் சொல் லாது இருந்தீர்" என்று கேட்கையில் "என் உள்ளத் தில் சுவாமிகளே இருந்து சொல்லி வைத்தார்" என்றும் "மறுபடியும் சொல்ல முடிந்திலது" என்றுமறிவிக்க அங்குள்ளார் அனைவரும் வியந்து விழுந்து நமஸ்காரம் செய்து பூசனை முடித்தார்கள்.

மறுநாள் தில்லை விளாகம் போய் அங்கிருந்தவர்க் கெல்லாம் பக்த விஜயம் படிக்குமாறும் நன்மார்க்கத் தில் நின்று ஒழுகுமாறும் போதித்துப் பின் திருப்பெருந் துறைக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்குள்ளவர்கள் "தாங்கள் வேதாரண்யத்திற்குப் பக்கத்திலிருந்தவர்கள் எங்ஙனம் கால் நடையாக இவ்வளவு தூரம் வந்தீர்கள்" என்று என்னை கேட்க "அது திருவருள் செயல்" என் றுரைத்தேன்.

---

## 67. சான்றோர் தெரிசனமும், ஞான நூல்களின் மாட்சியும்

பின்னர், திருப்பெருந்துறையில் மாணிக்கவாசக சுவாமிகள், திருவாய் மலர்ந்தருளிய, திருக்கோவையார் நூலானது, ஆனந்த நடராஜப் பெருமான் தமது திருக் கையால் எழுதிய நூலாகும், அதனைப் படிக்கவேண்டு மென்று சிரவணஞ் செய்துகொண்டு ஒரு மாத காலம் வசிக்க நேர்ந்தது. அங்கே நிகழ்ந்தது சொல்லுதற்கரிய

அற்புதச் செயல்கள் "ஸ்ரீ சரஸ்வதி தேவிக்குத்தெரியும்" காரைக்குடிக் கோயிலூர் மடாலயம் சென்று அங்கிருந்து திரு முருகப் பெருமான், திருத்தலமாகிய குன்றுக்குடி போய்ச்சுவாமி தெரிசனம் செய்துகொண்டு கீழப்பூங்குடி கிராமத்திற்குப் போதலும், பூங்குடி ப்ரம்மம், அடியேனுக்குத் திருவடி சூட்டியருளினார்கள். பின். அக்கிரஹாரத்தில் கூட்டமாக வந்து அடியவர்களுக்குச் செய்ய வேண்டிய முறைப்படி பாத பூஜை புரிந்து கைப்பிக்ஷை பண்ணி வைத்தனர். அவ்வூரை நினைந்து செட்டிநாடு வழியாக வேம்பத்தூர் போய் அக்கிரஹாரத்துக் குடார பண்டிதர்களைப் பக்த விஜயத்தில் பிர்மோபதேச அத்தியாயம், ஞானோபதேச அத்தியாயம், படிக்குமாறு கூறிய போது அவர்கள் "பக்த விஜயத்தில் எல்லா வேதாகமங்களிலுள்ள உண்மைகள் அடங்கியிருக்கின்றன" என்றும் "பெரியோர்களையடுத்தால் எல்லாப் பொருள்களும் விளங்கும்" என்றும் கூறி மகிழ்ச்சியுற்றனர், அடியேன் துவாதசச நாமசங் கீர்த்தனம் சொல்லச்சந்தோஷமாக எழுதிக்கொண்டார்கள்.

பிறகு திருப்பூவணம் போய்க் காசியானந்த சுவாமிகளைப் பார்த்து "அடியேன், ஒழி விலொடுக்க அவத்தைத் தன்மையின் பொருளை" யறிய வேண்ட அவருடைய சீடர் வாசிக்க "அதி தீவிர பக்குவம்" உடையவருக்கு அது நன்மையைக் கொடுக்கும் சாதன சம்பத்து இல்லாதவர்களுக்கு விபரீத குணமுண்டாக்கும் என்று கூறினர்.

குருவையடைந்து நியமமுடன் பகவத் கீதை சிரவணஞ்செய்தால் ஆத்மானுபவம் உண்டாகும் என்று முத்தானந்த சுவாமிகள் கூறினர்.

தன்பதியல்லாப் பேரை தனையல்லனல்லனென்றுன்
அன்பனைக் கேட்டநேரம் அவள்வெட்கி மௌனமானாள்
என்பதுபோல இதுஅன்று அன்று எனச்சேடித்த
பின்பரப் பர்ம்மந்தன்னை பேசாமல் காட்டும் வேதம்
என்பதற்கிணங்க என்னையேக நிலையடைந்தேன்,

---

## 68. உலர்ந்த மச்ச நாற்றத்தால் தீங்கு.

ஒழிவில் ஒடுக்க நூல், பாடம், படித்துக்கொண்டு, இருந்ததினுலும், அக்ரஹாரத்தில், பதினைந்து நாழிகைக்கு மேற்பட்டதினுல் அசைவர் வீட்டிற்குப் பிக்ஷைக்குபோக நேர்ந்தது. அவர்கள் வீட்டில் கத்தரிக்காய் குழம்புடன் உலர்ந்த மச்சம், சேர்ந்ததினுல், அடியேன், அன்னத்தை வாயில் வைத்த மாத்திரத்தில், வாந்தி வந்தது. 25 நாழிகைக்குப்பின், புளிபோட்டு மென்று தின்றபின் வாந்தி நின்றது. தயிர் அன்னம் பிக்ஷை செய்ததால் பல்லின் எகிர் முழுதும் வீங்கியது. இதன் காரணமாகப் பற்கள் ஆட்டங்கண்டு விழுந்தன. வாயிற்புண் ஓராண்டுவரையிருந்து, பின், நீங்கியது.

---

## 69. யோகப்பயிற்சியும் சுவாநுபூதிப் பிரசங்கமும்.

அங்கிருந்து, மதுரை யோகானந்த சுவாமிகள் புட்டுத்தோப்பு மடாலயம் போய் சுவாமிகளை வணங்கி, யோகப்பயிற்சி தெரிந்துகொள்ள வேண்டுமென்று கூற, அவர்களும் கருணையோடு ஆசனப் பயிற்சியும், சாம்பவி முத்திரையும், கேசரி முத்திரையும், பிராணுயாமமும், அனுக்கிரஹித்தபடி கற்றுக்கொண்டு, அவரது ஆசிபெற்றுத் திண்டுக்கல் பழனி வந்து, படிப்பில்லாதவர்கட்கு அவரவர் பக்குவத்திற்கேற்பப் படிப்புச்சொல்லிக்கொடுத்துக் கொண்டிருந்தநாளில், காஞ்சீபுரம் த்ரிவேணி சுவாமிகள் சாது சுவாமிகளை அக்ராசனுதிபதியாக ஏற்படுத்தி அடியேனைச் சுவானுபூதிப் பிரசங்கம் செய்யும்படி பத்திரிகையில் விளம்பரஞ் செய்தனர். அடியேன் மௌனமாயிருப்பதால், "வாய் திறந்தால் உங்களுக்கு விபரீதம்" என்று, எழுதித்தெரிவித்தேன். சுவாமிகள் அனுபவப்படி "பிரசங்கித்தால் மகிழ்வோம்" எனவே, அடியேன், அவரவர்கள் வர்ணுசிரம தர்மப்படியே, வேதம் ஓதல், மநுநீதி தவருமல் நடத்தல், தந்தை தாய்ப்பூஜை செய்தல், சிறுவர்கள் ஒற்றுமையாகச் சந்தோஷம் வரும்படி நடந்து கொள்ளு

தல், சன்னியாசி, ஐம்பது காததூரம் துறவுபோய்க் குரு பாதம் சேர்ந்து அனுக்ரஹம் பெற்று இருத்தலேயாம், என்று விரிவாகப் பிரசங்கம் செய்தேன். ஆங்கவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள்.

---

## 70. ஊருணி வற்றிய காரணம்.

முன்னொரு காலத்தில், அடியேன் சிறு பிராயத்தில்' உடுமலைப்பேட்டை வந்தபோது, அங்கு, நல்ல தீர்த்த ஊரணியில் முகம் சுத்தி செய்யும்போது, காவற்காரன், அடியேனை "இங்கே வாருங்கள்" என்று அழைத்துப் போய், அதிகாரியிடம் சேர்ப்பித்தான். அவ்வதிகாரி, காசு கேட்டார். அடியேன் வாய் பேசாதிருந்த காரணத்தினுல், விநயகர் படத்தின் முன் தோப்புக்கரணம், போடும்படிச் சொன்னுர்கள். அதன்படியே சென்று, மகிழ்ச்சியுடன் அதனைச்செய்தேன். இச்செயலையும் பிறதோற்றங்களையும் கண்டு பயந்து, நடுக்கமுற்று, அச்சமுறுவார்த்தையோடு "சுவாமிகள் எல்லாவற்றினையும் அழித்து விடுவீர்கள் போலத் தோன்றுகின்றதே" என்று திருவடி பணிந்து "போய் வாருங்கள்" என்று பணிவாய்ச்சொல்லி அனுப் பினுர்கள். பின்னர் பல ஆண்டுகள் கழித்து, அந்த ரோட்டில் வரும்பொழுது, ஊருணிக்குளம் தூர்வை யடைந்து, நீரில்லாமல் இருப்பதைப் பார்த்து அவ்விடத் தில் மளிகைக்கடை வைத்திருந்த தண்டபாணி சுவாமி கள் பரம்பரையைச் சேர்ந்தவரைப் பார்த்து, அடியேன், அக்குளம் சீர்கேடான நிலையினைப் பற்றிக்கேட்டதில், அவர் "முன்னர் யாரோ ஒரு சுவாமியார் வந்து, குளத்தி லிறங்கிக் கைகால்களை கழுவியதற்காக அதிகாரி ஒருவர் அச்சுவாமிகளது பெருமையினை அறியாது, சுவாமிகளைத் தோப்புக்கரணம் போட வைத்தனர். அதன்பின்னர், இவ் வூருணி இக்கதியினை எய்திற்று" எனவும், "அதனுல் நீரற்றுத் தூர்வையடைந்து விட்டது" என்பதையும், கேட்டறிந்தபின் "கணபதியருளால் நன்ருக இருக்க வேண்டும்" என்று ஆசீர்வசனம் கூறிச்சென்றேன்.

## 71. யோகி தெரிசனமும் தேவார நுட்பமும்.

பின்னர், அங்கிருந்து மலையாளம் ஜில்லா போய்ப் பால் சுவாமிகளைத் தெரிசித்து நமஸ்கரித்தபோது, அவர்கள் வேண்டிய உபசாரங்கள் அன்புடன் புரிந்து, மிக்கக் களிப்புக் கொண்டனர் "தாங்கள் சந்நியாச ஆசிரமம் அனுஷ்டிப்பது தான் சரி" என்று கூறி மகிழ்ந்தார். மேற்படியார் மகிழுமாறு யானும் "கடந்த பெரியோர்கள் சோதனைக்காக இப்படித்தான் சொல்லு வார்கள்" என்று வந்தனை வழிபாடுகள் செய்து அங்கி ருந்து கோயமுத்தூர் வந்து சேர்ந்து தேவாரப் பாட சாலையினைச் சென்றடைந்தேன். அங்கு சிவக் கவிமணி உயர்திரு. C. K. சுப்பிரமணிய முதலியார்அவர்கள் திருத் தொண்டர் புராணமெனும் பெயர் பெற்ற பெரிய புரா ணத்தினை படித்து பொருள் சொல்லிக் கொண்டிருந் தனர். அதுகாலை திருஞானசம்பந்தர் புராணம் சொல் லிக்கொண்டு வந்தார்கள். அப்போது தான் C. K. S. ஐயா அவர்களைப் பார்த்து "ஐயா, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனருக்கு மோக்ஷம் அடைய வைக்க வந்த மூர்த்தி யென்று நாமம் இருக்க சமணரைக் கழு மரத்தில் ஏறச் செய்தார் (ஏற்றினர்) என்ற நாமமும் உளதே. இதற்குத் தாத்பரியம் என்ன என்று வினவினேன். "எங்கள் சுவாமிகள் அப்படிச் செய்யவில்லை, அவர்களே கழு மரத்தில் ஏறினர்கள்" என்று சொன்னர்கள். அதற்குத் தாத்பரியம் "திருஞானசம்பந்த மூர்த்திகள் மும்மூர்த்திகள் உருவமாதலால் முத்தொழிலும் புரிபவர்" என்று அடியேன் இயம்பினேன். "இந்தப் பொருள் இப்போது தான் தெரிந்து கொண்டோம்" என்று வணங்கிப் போயினர்.

---

## 72. கொண்டயம்பாளையத்து அன்பரின் வழிபாடு

பின்னர், கொண்டயம்பாளையம் வந்து சேர்ந்தேன். அவ்வூர் அன்பர்கள் அடியேனுடைய சற்குரு சிவராம லிங்க பரமஹம்சர் திருவுருவப் படத்தினைப் பிரதிட்டை

செய்து வாரந்தோறும் நைய்வேத்தியம் ஆராதனை முதலியவைகளை ஒலி பெருக்கி மூலம் பிரசங்கம் செய்தும் வந்தார்கள். அவ்விடம் சென்ற சமயம் தீபாவளிப் பண்டிகை யானபடியால், ஓர் வீட்டில் அடியேனுக்கு ஆராதனை புரிந்தார்கள். அதன் பிரகாரமாகவே காலை முதல் இரண்டு மணி வரை வீடுகள் தோறும் பலகார பட்சணங்கள் கொடுத்துத் தீபாராதனைகள் செய்து மகிழ்ச்சி அடைந்தார்கள்.

---

## 73. வையம்பாளையத்தில் மழை பெய்வித்தல்

பின்னர், வையம்பாளையம் பெருமாள் கோயில் சேர்ந்து சாயங்காலம் சுமார் 27 நாழிகையளவில் வெங்கிடாசல நாயுடு என்பவர் கற்கண்டு, பழ வர்க்கங்களைப் பெரிய தாம்பாளம் ஒன்றில் கொண்டுவந்து சமர்ப்பித்து வணங்கி "சுவாமி! மழை இல்லை, மழை இல்லை" என்று கூறினர். அதற்கு அடியேன் அப்படிச் சொல்லாதீர்கள், மழை எப்போது வரும் என்று கேண்மின்கள்" என்றனன். பின்னர், அவர்கள் "எப்போது மழை வரும் சுவாமி!" என்று கேட்டார்கள். "நீவிர் எல்லோரும் உட்காருமின்கள்" என்று கூறவும், உட்கார்ந்தனர். அனைவரும் கண்களை மூடிக்கொண்டு "சீதாராம்! சீதாராம்!" என்று கூவுங்கள்! என்றேன். அந்த ப்ரகாரமாக பக்தியுடன் ஏகாக்ர மனதாகயிருந்தார்கள். ஒரு மணி நேரங்கழிந்து, "கோயிந்த நாம சங்கீர்த்தனம் கோயிந்தா" என்று சொன்னேன். அவர்களும் ஏகாக்ர மனத்தோடு இருந்ததினால் தாமதித்துக் கோயிந்தா என்றார்கள். பின்னர், பழ வர்க்காதிகளை விநியோகஞ் செய்து, புறப்படும் பொழுது, "மேகம் கறுப்பாய்த் தோன்றுகிறது சுவாமி! மழைவரச் செய்ய வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு கோயிலிலிருந்து பள்ளிக்கூடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அவ்விடம் சிலர் மஹா பக்த விஜயம் கொண்டு வந்து அடியேன் முன்னி

லேயில் படித்துக் கொண்டிருக்கும் பொழுதே மழைவந்து நிரம்ப பெய்தது. மழை நின்றதும் யாவரும் வீட்டிற்குப் போயினர். காலேயில் ஏரி, குளங்கள் எல்லாம் நீர் நிரம்பி வழிந்து கொண்டிருந்ததைப் பார்க்க சந்தோஷ மாகயிருந்தது.

---

## 74. பள்ளிக்கூடத்திற்கு பஜனைத் திருவிளையாட்டு

அன்றிரவு, சுமார் பதினைந்து நாழிகை யளவில் பக்கத்து வீட்டுத் திண்ணையில் படுத்துக்கொண்டிருந்த ஒருவர்க்குப் பள்ளியில் பஜனை கோஷ்டியின் சத்தம் ஆனந்தமாய்க் காதில் விழ, அவர் எழுந்துவந்து ஜன்னல் வழியாகப் பார்க்க, அடியேன் நிஷ்டையில் இருந்ததாகவும், இன்னும் இரண்டு பேர்களையும் கூப்பிட்டுக் கேட்குமாறு கூற, அவர்களும் அங்ஙனமாகச் செவிமடுத்துக்கேட்டு இன்புற்றதை எல்லோரிடமும் மொழிந்தனர். இப்பள்ளிக்கூட நிகழ்ச்சிகள் விட்டல் ராமதாசும், ஜான விநாயகமும் எழுதி வைத்திருந்த குறிப்பு ஆகும்.

---

## 75. முரட்டு வாலிபனைச் சொற்சித்தியாற் பணிவித்தல்

மேலே கூறிய பக்தி நெறிகளை அனுஷ்டிக்குமாறு கூறிவிட்டு அத்திப்பாளையம் அடைந்தேன். அவிடத்தில் சுமார் பதினெழு வயதுள்ள வாலிபன் ஒருவன் வந்து அடியேனைப் பரிகசித்தான். அவனைப் பார்த்து "நீ கண்ணை முடிக்கொண்டு சினிமா பார்" என்றேன். அவன் அங்ஙனமே பார்த்துச்சந்தோஷித்து நமஸ்காரம் செய்து சுவாமிகளே! தாங்கள் என் உள்ளத்திலிருந்து சினிமாப் படம் காட்டினீர்கள்." என்றுரைத்து இவ்விஷயத்தை ஊரில் உள்ளவர்களிடமும் கூறினுன். மறுநாள் சுவாமிகள் பிரசங்கம் செய்ய வேண்டுமென்று

கேட்கப் பக்தி நெறி நிரம்பப் பிரசங்கம் செய்து பின்னர் நிஷ்டைக்குப் போய்விட்டேன். நிற்க, பக்கத்தில் கோவிந்தநாயக்கன் பாளையத்தில் ஒரு வாலிபன் தன் தாயார் சோறு கொண்டு வரும்போது தாயார் முன் ஓடி வந்து தண்டோபாயம் செய்ய முற்பட்டகாலை தாயார் அடியேனை வணங்கி முறையிடவே, பக்கத்தில் உள்ள வர்கள் வாலிபனை சுவாமி காலில் பணிவித்து மன் னிப்பு கேட்கும்படி செய்யவே வாலிபனும் அங்ஙனம் செய்ய அவன் நல்ல நிலையிலிருக்க, ஷை பையனை அடிக் கும்படி தூண்டியவன் புத்தி சுவாதீனமில்லாமல் அலை கின்ருன். இந்த நிகழ்ச்சி இரண்டு ஆண்டுகளுக்கு முன் நடந்தது.

---

## 76. பல அன்பருள் நிகழ்ச்சிகள்

மறு தினம் அவ்வூரினர் ஒருவர் தர்க்கம், வாதம் பேசினுர். அதற்கு "சூதும் வாதும் வேதனை செய்யும்" என்று கூறிச் சென்றேன். வெள்ளமடை, காரமடை, பெரியநாயக்கன்பாளையம், முதலிய கிராமங்களில் பக்திப் பிரசாரங்களைச் செய்தும், மேட்டுப்பாளையத்திலிருக்கும் ஒரு மெய்யன்பர் "சிவராமலிங்கக் குருநாதர் திருவுருவப் படத்தினை வைத்துப் பூஜிக்கின்றேன். அவ்விடம் தெரி சனம் தரல் வேண்டும்" என்று வேண்ட அவர் விருப் பப்படியே போய் ஆசீர்வதித்துப் பின், சின்ன ரயிலேறி உதக மண்டலம் ரயில் நிலையம் போய் இறங்கினேம். அப்போது போலீஸ்காரர்கள் மூன்று சாதுக்களை வேலைக்கு அழைத்துக் கொண்டு போவதைக் கண்டோம். அடியேனும் வங்கனூர் சிஷ்யன் சிவ விஸ்வநாத சுவாமி யும் போவதைக்கண்டு கூப்பிட்டு வராவிட்டால் பிடித்து இழுத்துக்கொண்டு வரும்படி போலீஸ்காரர்களை ஓர் அதிகாரி ஏவினுன். அதற்கு அடியேன் விரைந்து மேல் அதிகாரியிடம் போக, அவர் அடியேனை நமஸ்கரித்து சேவகனைப்பார்த்து "குறிப்புத்தெரியாதவனுய் இருக்கின் ருய்' என்று கடிந்து சொல்லி "சுவாமிகளை நமஸ்கரித்து

விபூதி வாங்கிக் கொள்" என்று உத்திரவிட்டு எங்களை வழியனுப்பினர். ஸ்ரீராமகிருஷ்ண மடத்திலுள்ள சாதுக் களுடன் சம்பாஷித்துப் பின் மோட்டாரில் ஏறி, உதக மண்டலமிருந்து சாம்பக்குளம் வந்து சேர்ந்தோம். பல நாளிருந்து வங்கனூர் சிஷ்யன் சிவவிஸ்வநாதன் மாயமாய் மறைந்தான்.

---

## 77. சிவராமலிங்கர் குருபூஜைக் குதூகுலம்

சாம்பக்குளத்தில் மஹா பக்த விஜயம் படித்தவர் பிரசங்கம் செய்யவிரும்பியபடி ஜீவகாருண்யம் போதித்து பர்ணசாலையில் நிஷ்டைசெய்யும்போது அரசமரத்துஉயர முடைய பெரிய நந்தியொன்று காலைத் தூக்கித் தாழ்த்தி பின்னர் அடியேன் காலைத் தாடையால் வளைத்தது. முன் வல்ல நாட்டிலிருந்து வந்த சங்கர சுப்பா சாஸ்திரியும், சிவ குமாரானந்தமும், சிவராமலிங்கப் பரமஹம்ச குரு பூஜைக்கு வல்ல நாடு வரவேண்டுமென்று அழைக்க அதற்கு சுமார் 20 காதவழி இருக்கிறதே என்றேன். அவர்கள் "குருமூர்த்தி அருளால் வருவீர்கள்" என்று அருட் பாடல் எழுதிக் கொடுத்துப் போயினர். நந்தி வந்த ஐதீகம் பார்த்து, அடியேன் "அவர் அருளே" என்று கருதிக் குருபூஜைக்கு கொண்டயம்பாளையம், வையம்பாளையத்திலுள்ள பக்தர்கள் அழைத்துச் செல்ல ரயிலேறி வல்ல நாட்டிற்குக் கூட்டமாகப் போய்ச் சேர்ந் தோம்.

அடுத்த தினம், குரு பூஜை ஆரம்பமாகி மூன்று தினம் பிரசங்கங்கள் அமோகமாய் நடந்து வந்தன. பின், முடிவுரையும் அடியேன் கூறினேன். நந்தி மண் டபம் கட்டுவதற்குக் கருங்கல் வந்தது. சிற்பி வந்து நந்தி மண்டபத்திற்கு அளவெடுத்தார். நந்தி இரண்டு கெஜ தூரத்திற்கு அப்பால் வைக்கும்படி அளவு வந்தது நந்தியை எடுத்து வைப்பதற்கு முன்னர் சாம்பக்குள அக்கிரஹாரத்தில் யோகத்தில் தோன்றிய வண்ணம்

குருவருள் நிரம்ப இருப்பதை உணர்ந்தேன். நந்தியை எடுத்து வைத்து அபிஷேக, ஆராதனை செய்து தெரிசித்துப்பின், மகேஸ்வர பூஜையும் செய்யப்பட்டது. வல்ல நாட்டுச் சிவ மடத்தில், நானுஜீவ வாதக்கட்டளை, ஜீவன் முக்திப் பிரகரணம், ஒழிவில் ஒடுக்கம், மஹாபக்தவிஜயம் பொதுப் பாடமாகப் படிக்கச் சொல்லிவிட்டு, திருச்செந்தூர் சென்று, சுவாமி தெரிசனம் செய்து அடியார்கள் தெரிசனமும் செய்து, குலசேகரப்பட்டணம் போய்ப் பிக்ஷை செய்து, அன்பர்களுக்குப் பக்தி வைராக்கியம் போதித்துச் சந்தோஷிக்கும்படி செய்து பின்னர், குமர குருபர சுவாமிகள் அவதாரம் செய்த ஸ்ரீ வைகுண்டத்தி லிருந்தவர்களுக்கு பக்த விஜயம் படிக்கும்படி சொல்லி வல்லநாடு மடம்சேர்ந்தேன். அவ்விடமிருந்த பக்தர்கள் "தாங்கள் இவ்விடம் இருந்தால், சிவராமலிங்க பரமஹம்ஸராகவே பூஜிப்போம்", என்றார்கள். "ப்ராப்தம் போல் முடியும் என்றுசொல்லி திருநெல்வேலி கண்ணப்ப நாயனுர் மடம், சேர்ந்தபோது, அங்குள்ள, ஒரு சாதுவுக்கு, அடியேனுக்குக் கொடுக்கப்பட்ட, முறுக்கும் பலகாரமும், தண்ணீரும் அவருக்குக்கொடுத்து முறுக்கை உட்கொண்டு தண்ணீரைக் குடிக்கும்போது, அடியேன் "சிவராமலிங்கம்" "சிவராமலிங்கம்" என்றேன். அவரும் "சிவராமலிங்கம்" என்று சொல்லி, தேகவியோகமானுர். எல்லோருங்கூடி ஞானிகள் சரீரத்திற்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து சமாதி செய்து முடித்தனர். சிவ சிவ.

---

## 78. பல தல யாத்திரை.

அடியேன் சீகாளத்திக்குப் போகிறேன் என்றேன். வேம்பத்தூர் சங்கரசுப்பா சாஸ்திரியும், திருநெல்வேலி நல்லகண்ணுப்பிள்ளையும் அடியேன் கையை பற்றி புகைவண்டியிலேறிக்கொண்டு அடுத்த நிலையத்தில் பிரிவாற்ருமையோடு இறங்கிச் சென்ருர்கள். ஹரி ஹரி.

பெண்ணுகடம் ஸ்டேஷனில் இறங்கியபொழுது ஆண்டியப்ப பிள்ளை வடலூரில் அடியேனை ஜோதி சொரூபமாய் தெரிசித்ததாகவும் சொன்னார். சென்னை சென்று ஆனந்தாஸ்ரம மடத்தில் தங்கி வியாசர்பாடி அடைந்து, கரபாத்ர பிக்ஷை பண்ணி சிவப்பிரகாசசுவாமி கள் மடத்தில் சாதுக்களுடன் ஞானவாசிட்டம், பொதுப் பாடம் படித்துக்கொண்டிருந்தார். உரை படிக்கும்போது அவதாரிகையையும் படித்தார். மறுநாள் படிக்கும்போது அடியேன் நிறுத்துங்கள் என்றேன். அவர்கள் இன்னும் உரை உள்ளது என்று கூற பின்பாட்டின் அவதாரிகை என்று சொன்னது கேட்டவர்கள் இப்பொழுது தெளிந் தோம் என்று சந்தோஷமடைந்தார்கள். பின் ஒற்றியூர் அப்பர் சுவாமி மடத்திற்குப்போய், அப்பர் சுவாமி திரு வாக்கு திருமுறை மூன்றும் ஓதிக்கொண்டிருக்கும்போது, அங்குப் பல பக்தர்கள் வந்தவர்களைக்கொண்டு ஒற்றியூர் கடற்கரையில் பட்டினத்தடிகள் கோயிலை அடுத்த, கட்டி டத்தில் நிஷ்டையில் இருந்த சாதுவுக்கு யாரும் அன்னம் கொடாமல் இருந்ததால் அடியேன் அவருக்குக் குறிப் பறிந்து கொடுக்கும்படி சொல்ல உபசரித்தார்கள். அவர் களைப்பக்த விஜயம் படிக்கும்படி ஊக்குவித்து அடியேன் துலுக்கன்சத்திரம் கந்தசாமி முதலியார் மகன் கங்காதர னைச் சந்தித்தபோது அவ்வூரார் பிக்ஷை பண்ணி வைத் தார்கள். சண்முக முதலியார் ஒழிவில் ஒடுக்கம் வாங்கித் தந்து தெலுங்கு அக்ஷரத்தில் சீகாளத்தியின் விலாசம் எழுதிக்கொடுத்ததை வாங்கிக்கொண்டு, புறப்பட்டு ஆண்டாள்குப்பம் பாலசுப்ரமண்ய சுவாமிகள் சந்நிதி யில் வள்ளிமலைச் சுவாமிகளால் தொகுக்கப்பெற்ற திருப் புகழ் நூலை முற்றுஞ் சிரவணஞ் செய்து அக்கோயில் சித்திரான்னப் பிரசாதம் உட்கொண்டு திருத்தணியில் உள்ள ஸ்ரீ தணிகாசலப் பெருமானை தெரிசனம் செய்து, சாதுக்கள் தெரிசனஞ்செய்து, நாராயணவனம் தீர்த்தங் களாடி, திருப்பதி மலை மேல் கரபாத்ர பிக்ஷை பண்ணி, வடவேங்கடவனை வழிபாடுசெய்து, தாசர் சேவைசெய்து, ரேணுகுண்டா வழியாக ஏற்பேடு மலையாள சுவாமி ஆசிர

மத்திற்குப்போக அவர்கள் ரத்தின கம்பளத்தில் உட்கார வைத்து பெரியோர்கட்குச் செய்ய வேண்டிய முறைப்படி வந்தன வழிபாடு செய்து ஆசீர்வசனம் பெற்றுக்கொண்டார்கள்.

பின்னர், சீகாளாத்திப்பதியையடைந்து காசிவிச்வேசுவரர் கோயிலில் தங்கியிருக்கும் நாளில் ஒரு நாள் நிஷ்டையிலிருந்து எழுந்து பூஞ்செடிகட்குத் தண்ணீர் ஊற்றிக்கொண்டிருந்தவரைப்பார்த்து மழை வரும், தண்ணீர் ஊற்றுவதை நிறுத்துங்கள் என்றேன். அதற்கு அவர் மழை வரப் பத்து நாட்கள் ஆகும் என்றார். அக்கணமே இடி இடித்து மழை வரக் கண்டு யாவரும் அதிசயித்தனர்.

ஒரு நாள் அகத்தியாச்ரமத்தில் காலை நிஷ்டை அமர்ந்தேன். மழையின் சாரலால் நிஷ்டை கலைந்து எழுந்தபொழுது மாலையாக இருக்கக்கண்டேன். மறுநாள் சுகர் ஆச்ரமத்தில் மூன்று நாள் நிஷ்டைகூடிய பின் காசிவிஸ்வநாதர் ஆலயத்தில் வந்து தங்கின பொழுது சிதம்பரத்திலிருக்கும் மலையாள இராமானந்த ஸ்வாமிகள் வந்து வணங்கி, ஞான வைராக்கிய ஸித்யார்த்தம் விபூதியைப் பெற்று எலுமிச்சம் பழ ரசம் அருந்திக்கொண்டு மௌனமாய் ஒரு மண்டலம் இருந்தார். பின்பு, கோயம்புத்தூர் ஜில்லாவைச்சேர்ந்த கொண்டயம் பாளையம் விட்டல் ராமதாஸ், அய்யாசாமிப் பிள்ளை, அத்திப்பாளையம் ஜானவிநாயகம் மூவரும் வந்து வணக்கம் புரிந்தனர், பாத பூஜை செய்து கற்பூர தீபம் காட்டி தண்ணீர் வார்த்து உடல், பொருள், ஆவிகளைத் தத்தம் செய்து கொடுத்ததின் பேரில் விட்டல் ராமதாஸ், ஜான விநாயகம் இருவருக்கும் திருவடி சூட்டித் தீக்ஷை செய்ய அவர்களிருவரும் சரீர ஸ்மரணையின்றி இருந்தனர். அடியேன் அவர்கள் மேல் விபூதிபோட ஸ்மரணைவந்தது மறுநாள் மகேசுரபூஜைகள் செய்து ஆசீர்வசனம் பெற்று ஊருக்குச்சென்று சாதுக்களை உபசரித்தும் அடியேனது திருவுருவப்படம் வைத்து பூஜித்தும் தன தான்ய, புத்திர பேரன்பேத்திசம்பத்துக்களுடன்சுகமாய்வாழ்கின்றார்கள்.

## 79. யோக விநாகர் குகைக் கோயில் மடத்தின் பட்டாப்பூமி விபரம்

சீகாளத்திக்கோபுரம் சந்துத்தெரு சேஷய்யாகுமாரர் முனிசாமி இடமிருந்து பனகல் போஸ்டில் 1937 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 11-ந் தேதி சுமார் இரண்டு ஏக்கர் நிலம் கோயம்புத்தூர் அப்புலு நாயுடு பெயரால் வாங்கப்பட்டது. விருத்தாசலம் முகுந்த நல்லூர் நடேச உடையார் பொருளுதவியால் அடியேனுக்காக மேற்படி இடத்தில் "யோக விநயகர் குகைக்கோயில்" என்ற கட்டிடம் கட்டப்பட்டது. அடியேன் சீடன் மு. சிவராமலிங்க சுவாமிகளுக்கு அதனை எழுதிக் கொடுக்க அவர் அதை மு. சிவபழனி சுவாமிகளுக்கு எழுதி வைக்க, அவரால் சிவசங்கரகிரி என்னும் நாராயணகிரி சுவாமிகள் பெயருக்கு அது எழுதிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேற்படி கட்டிடத்தில் அடியேன் சீடருடன் இருக்கும் சமயம் மடுகுலு சுவாமியை அழைத்து வந்து உபசரித்திருக்கும் நாளில் காளத்தி இராமச்சந்திரராவ் குடும்பத்தார் வண்டியில் அழைத்துக் கொண்டு போய் பூஜித்து வந்தார்கள்.

---

## 80. இருவர் பெரும் பிணி நீக்கிய திருவிளையாடல்

திருக்காளத்திக்கோபுரத்துக்கருகில்பொன்முகலி நதியில் அடியேன் வடிவமாகக் காளத்தீஸ்வரர் புலியாசனம் போட்டு உட்கார்ந்திருப்பதை இராதாகிருஷ்ணன் என்ற ஓர் யாத்திரைவாசி கண்டு நமஸ்கரித்தார். அவருக்கு ஒன்பது முதல் முப்பத்தாறு வயது வரையில் காக்கை வலிப்பு வியாதி இருந்தது, அதற்கு அவர் அநேக இடங்களில் எந்திரங்கள் கட்டியும் நீங்காமலிருந்தது. சுவாமி வடிவம் அடியேன் கேட்டதாகச் சொல்லிக் கடையில் பூஜை சாமான்களும் ரூ. 0—4—3பை தக்ஷிணையும் வாங்கிக் கொண்டு வரும்படி சொல்லி, அவ்வாறே கொண்டு வந்ததும் தன்னிடமிருந்த மருந்து வேரில் மஞ்சள் நூலைச்சுற்றிப் பூஜை செய்து கங்கண ரூபமாகக்

கையிற்கட்டி ரூ. 0—4—3பை தக்ஷிணையாக வாங்கி ஆசனத்திற்கடியில் போட்டு வைத்தார். பின் நீ போய் மூன்று நாட்கள் கழிந்து, கோயில் மண்டபத்திற்கு வா என்று சொல்லி மறைந்து விட்டார். அவரும் அங்ஙனமே மூன்று நாட்கள் கழிந்த பின் கோயில் மண்டபத்திற்குச் சென்றதும், அடியேன் உருவம் தான் நாடா வாங்கி வரச்செய்து முன் கையில் கட்டிய கங்கணத்தை அவிழ்த்து கழுத்தில் கட்டினுர். கட்டின அன்றைக்கே வலிப்பு வந்தது, காரணம் நாடாவிலிருந்த எந்திரம் காணவில்லை. உடனே அவர் அடியேனிடம் ஓடி வந்து நடந்ததைக் கூறினுர். நான் விபூதியைக் கொடுத்தனுப்பிவிட்டேன். பல மாதங்களுக்குப் பிறகு காளத்தீஸ்வரர் மீண்டும், அடியேன் வடிவமாகத் தோன்றிப் பாதரசம் வாங்கி வரும்படிச் சொல்லி ஆற்றங்கரையிலிருந்த பசுந்தழையைப் பிடுங்கி ரசத்தில் பிழிந்தூற்ற ரசம் உத்ராக்ஷமணி போல ஆகிவிட்டது. அதை இரும்புக் கம்பி ஒன்றில் கோர்த்துக் கழுத்தில் தாரணம் செய்ய அவருக்கேற்பட்டிருந்த காக்கை வலிப்பு வியாதி நின்று மடத்துக்கு வந்து அடியேனிடம் உத்திரவு பெற்று ராமேஸ்வரம் முதலிய பல தல யாத்திரை செய்து வந்து சுகமுடனிருந்தார், பின்னும், ஸ்ரீ காளத்திக்கு அடுத்த தொண்டமா நாட்டிலிருக்கும் பட்டாமணியம், நாராயண ரெட்டியார்மனைவி கெங்கையம்மாளுக்குவயிற்றில்ஏற்பட்ட குன்ம வலிக்கு, அவ்வம்மைக்கு அடியேன் வடிவம்போல் பூட்டியிருந்த வீட்டிற்குள் 35 நாழிகையளவில் தோன்றி வெங்காயப் பானைக்குள் இருந்த மூன்று பல் உள்ள வெள்ளைப் பூண்டை எடுத்துத் தன் கையில் வைத்து. இதோபார் மூன்றுபல் உள்ள பூண்டு! என்று சொல்லி உப்புத் தண்ணீரில் துணி ஒன்றை நனைத்துப்பூண்டின் மேல் சுற்றி தீயில் போட்டு எடுத்துக் கொடுக்க அதை அம்மை தின்றதும் வலி மாயமாகப்போய்விட்டது. பிறகு அடியேன் போய் வருகிறேம் என்று மறைந்து விட்டதாகவும், கதவுகள் பூட்டிய வண்ணம் இருந்ததாகவும், கண்ட நிகழ்ச்சியை மறு நாள் யோக விநயகர் கோயில்

ஆசிரமத்திற்கு வந்து கெங்கையம்மாள் அடியேனை நமஸ் காரஞ் செய்து சொன்னார்கள்.

---

### 81. வெங்கடகிரியில் திருவிளையாடல்கள்

*23—10—1958*-ல் வெங்கடகிரியில் இருந்த போது 22 வயதுள்ள செஞ்சு கிருஷ்ண அய்யா பக்தியோடு நமஸ்கரித்து நிஷ்டை வெகு நேரம் கூடியிருந்தது. *28–10–1958*ல் பங்காரு பேட்டையில் அடியேன் இருந்த போது சஜ்ஜா மோஹன் ராவ், கள்ள சுப்பிரமணியம், என்பவர்களின் பள்ளிப் பிள்ளைகள் இருவரும் பக்தி யோடு அடியேனை நமஸ்கரிக்க, 10 மணிக்கு ஸ்மரணையற் றிருந்து பின் 2½-மணிக்குத்தான் எழுந்தனர். அடியேன் பங்காரு பேட்டையில் இருந்தபோது பட்ரபேடியின் குமாரன் சின்னசுப்பையா அடியேனைப் பக்தியோடு நமஸ் காரம் செய்ய ¾மணிநேரம் ஸ்மரணையற்றிருந்து உணர்வு பெற்றார்.

*1956*ல் டிசம்பர் மாதம் கும்பகோணத்தில் பொற்று மரை வடகரையில் மங்களாம்பிகா பிரஸ் **S.** சிவகுருநாத செட்டியார், **S.** அருணாசலஞ் செட்டியார் அவர்களது உற வினர்கள் அடியேனை நமஸ்காரஞ்செய்து, காசி யாத்திரை சென்று, மீண்டபோது சிவகுருநாத செட்டியாரின் மனைவி காமாக்ஷியம்மை காசியில் கேதார தீர்த்த கட்டத் தில் அடியேன் நீராடியதைப் பார்த்துத் தெரிசித்து ஆசீர் வசனம் பெற்றதாகக் கும்பகோணம் வந்த பிறகு அடியே னிடம் கூறினார். விஸ்வேசா.

சிதம்பரம் மேல ரத வீதி 72-ம் நெம்பர் வீட்டிலுள்ள இராஜம்மாள் அடியேனை வந்து நடராஜ சபையில் தெரி சித்த போது, *1957*-ல் மார்கழித் திங்களில் காசியில் நீராடும்பொழுது அடியேனை அங்கு கண்டு தெரிசித்த தாகக்கூறினார். ஆனால் அந்தநாளில் அடியேன் சிதம்பரத் திலேயே தான் இருந்தேன். இவையெல்லாம் கணபதி யின் அருளால் நிகழ்ந்த திருவிளையாடல்களாம்.

---

## 82. இராஜ குடும்பத்தாருக்கு ஆசி கூறல்.

சீகாளத்தியின் பக்கம் பனக்கல் ராஜ குடும்பத்தாரும், வெங்கடகிரி ராஜ குடும்பத்தாரும் அடியேனைத்தரிசித்துப் போவது வழக்கம். சீகாளத்தி இராஜ குடும்பத்தில் பட்டத்து ராணியும் பணிப்பெண்களும், வெளியில் வருவது வழக்கமில்லையாதலின் பன்முறை அடியேனை அரண்மனைக்கு வரும்படி அழைத்தும் சந்திக்காதிருந்தேன். ஆனால் பால், பழம் அனுப்புவார்கள்.

சீகாளத்தி உற்சவத்தில் கிரிப்பிரதக்ஷிணம் வரும் வழியில் வழக்கமாகப் பிக்ஷை பண்ணும் வீட்டில் புஷ்பம் சூட்டி ஆராதனை செய்து பால் பழம் முதலியன நிவேதித்தார்கள். இராஜவீதியில் செல்லுகையில் அரண்மனைச் சேடிப்பெண் அடியேனைக்கண்டு சுவாமிகள் நேற்றிரவு மகாராணியின் கனவில் அரண்மனைக்கு வருவதாக அறிவித்தீர்களாம். அழைத்து வரும்படி மகாராணியார் உத்தரவு என்றாள். அடியேன் இணங்கி அரண்மனைக்குச் செல்லவும் தலைவாசலில் இளவரசர் கையால் அடியேனை வரவேற்று அந்தப்புரத்திற்கு அழைத்துச் சென்றார். ஆங்கு மகாராணியுடன் ராஜ ஸ்திரீகள் கூட்டமாகக்கூடி அடியேனுக்கு நெற்றியில் விபூதி பூசி நமஸ்கரித்துப் பழவர்க்கங்களைக்கொடுத்து உபசரித்து வலம்வந்து வணங்கினார்கள். அடியேன் அவர்கட்கு ஆசிகூறி இளவரசர் வழியனுப்ப அரண்மனையைக் கடந்து கிரிப்பிரதக்ஷிணம் செய்து சுவாமி தரிசனத்திற்குச் சென்றேன்.

அடியேனுக்குச் சீடர்களாயிருக்கும் கோயம்புத்தூர் வையம்பாளையம் ஞானவிநாயகம், சீனிவாசலு முதலிய அன்பர்கள் மணியார்டர் மூலம் அனுப்பும் பணத்தை பனக்கல் கண்ணப்ப முதலியார் வாங்கி, யோக விநாயகர் குகைக்கோயில் என்ற பெயரினையுடைய ஆசிரமத்திற்குக் கும்பாபிஷேகம் முதலானவைக்குச் செலவு செய்தார்.

அடியேன் சொற்படி பக்த விஜயம் வாங்கிப் பூஜை செய்தும் அதில் வரும் துளசிதாஸர் கதையில் அநுமார்

அநுபூதியைத் தினந்தோறும் சிரவணஞ் செய்ததாலும், தாஸர்கள் அனுக்ரஹத்தாலும், குரு நம்பிக்கையாலும் பனக்கல் கண்ணப்ப முதலியார் புத்திரப்பேறு, தன தான்ய சம்பத்துடன் சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கின்றார். இதுபோல அநேக அருள் விளையாட்டுக்கள் நிகழ்ந்துள்ளன. விரிக்கிற் பெருகும்.

சுபம்.

---

## கைவல்ய நவநீதம்

சந்தேகம் தெளிதற் படலம்,

**விஞவிற்குத்தரங் கூறல்.**

கிளர்மக னேகேள் தத்துவ மறியார் கேட்டல் செயக்கடனே
தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களுளார்
தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்
வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர் வேண்டுவ தொன்றுண்டோ.

இந்தச் சீவனல் வருமறு பகையெலாம் இவன்செய லென்னுமல்
அந்தத்தேவனல் வருமென்ற மூடர்க ளதோகெதி யடைவார்கள்
இந்தச் சீவனல் வருமறு பகையெலா மிவன்செய லல்லாமல்
அந்தத் தேவனல் அன்றெனும் விவேகிகள் அமலவீ டடைவாரே.

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்கனல் புனல்மூன்றும்
தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமும் தவிர்த்தாளும்
அனைய வீசனும் அடைந்தவர்க் கருள்செய்வான் அகன்றவர்க்
[ கருள்செய்யான்
இனைய குற்றங்க ளெவர்குற்ற மாகுமென் றெண்ணிநீ யறிவாயே.

---

" முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் றிருநீறே "

—திருஞானசம்பந்தர்.

"சியெழுத் தொன்றே சிந்தையிற் கருதிடல்
சிவமாக்கும் "

—ஸ்ரீ சிற்றம்பல நாடிகள்.

---

SIROMANI
A. S. Ranganathachari,
JOURNALIST
SANSKRIT & HINDI PANDIT,
GIRLS CHRISTIAN HIGH SCHOOL
&
RELIGIOUS LECTURER
(H. R. & C. E.)



No. 1068, KAVI LANE
WEST MAIN STREET
TANJORE
19—2—60

OM

The Vedas declare that the Almighty Lord is "Puranaha". "Puranaha" means 'Most Ancient'. The Lord is both Ancient & Modern. When I happend to have Darsan of him I realised the meaning of "Puranaha" in Sri Muthukumara swamigal. He is ever shining with the same lustre and brightness as I first saw him long ago; he even shines brighter with ever growing fresh Thejas. The "Thuravi" is "Love Personified". He is the source of Bhakthi. Like the Lord with neither begining nor end, he is a Chiranjeevi with the same vigour. This yogi loves all alike like God. He is moving symbol of 'Brahmachari'. It is a real pleasure in one's life even to remember this great yogi and to write about him is highly beneficial to one's self.

May this "Thuriya Yogi" be a Chiranjeevi enjoying long life like the Great "Bhishma Pitha Mahar" in order that all men may obtain his grace for ever.

**A. S. Ranganathachari,**

(திருவைகாவூர், திருமண்டங்குடி திருப்பணித்தொண்டன்)

---

வேதங்கள், இறைவனைப் "புராணன்" என்று முழங்குகிறது. "புராணன்" என்ற சொல்லிற்கு, "பழமைக்குப் பழமையாயும், புதுமைக்குப் புதுமையாயும் விளங்குபவன்" என்று விளக்கங் கூறுவர். பழமையாக இருக்கும் ஒன்று, புதுமையாகவும் இருப்பது யாங்கனம்! என்று ஐயமுறலாம். ஆனல் ஸ்ரீமத் முத்துக்குமாரஸ்வாமிகளைத் தரிசித்த பின் இந்த ஐயப்பாடு ஏற்படாது. ஏனெனில், அவர்கள் பல்லாண்டுகட்கு முன்பு எவ்வாறு தோற்றமளித்தார்களோ, அவ்வாறே தற்சமயமும் காட்சியளிக்கிருர்கள். ஒளி மட்டிலும் அதிகரித்தும் வருகிறது.

இத்துறவி அன்பின் வடிவாய்த்திகழ்பவர். பக்தியின் நாற்றங்காலாகவுமிருக்கிருர். அனைவரையும் ஒருங்கே நேசிப்பவர். ஆதியுமந்தமுமில்லா இறைவனைப் போல் இவர்களும் இக்காலத்தவர்களால் தொன்று தொட்டுக் காணப்பட்டு வருகிருர்கள். பிரம்மசர்யத்தின் நிலைக்களனுய்த் திகழும் இப்பெரியாரை அறிவதும், நினைப்பதும் பேரின்ப மூட்டுவதாகும். உலக மக்களின் நன்மைக்காக இந்தத் துறவியார், பீஷ்ம பிதாமகனைப்போல் என்றும் சிரஞ்சீவியாகத் திகழ்வாராக.

தொண்டன்

ஏ. எஸ். ரங்கநாதாச்சாரி,

(திருவைகாவூர், திருமண்டங்குடி திருப்பணித் தொண்டன்)

19—2—60.

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

ஆதிகாலத்திலே தில்லையிற்றிருமூல ரழகர்மலை ராம தேவர் — அனந்தசயனத்திலே கும்பமுனி அருணையில் இடக்காடராம் — வாத வைத்தீசுவரன் கோயிற்றன்வந் திரி வால்மீக ரெட்டுக்குடி பாதசெங்கழுநீராரூரிற் கமல முனி — பழனியிற் போகநாதர் — திருப்பரங்குன்றத்தில் மச்சமுனி விளையாடல் — சேது ராமேச்சுரந்தனிற் பதஞ் சலி திகழ்காசி நந்திதேவர் — திருப்பதியிற் கொங்கண வராம் — சொரூபானந்தத்திலே (ஸ்ரீரங்கம்) சட்டமுனி விளையாடல் — கரூருறையுங் கருவூரார் — மற்றுளோர் மதுரையில் சுந்தரானந்தர் இவ்வாறு பூமிக்குள் சமாதா யிலங்கினர் பதினெண்மர் காண்.

ரோமரிஷி — விருத்தாசலம்

அஷ்டவக்ரலிங்கபுரம் — கூனஞ்சேரி என்று வழங் குகிறது. சுவாமிமலைக்கு மேற்கே 3 மைலில் உள்ளது பாபநாசம் தாலுக்கா.

விஸ்வாமித்திரர், வாம தேவர், சடபரதர் இவர் களின் ஆயுள் அளவிட முடியாது என வழங்குகிறது.

திருமழிசை ஆழ்வார் நாலாயிரம் வருஷம் இருந்த தாகப் பிரபந்தத்தில் காணப்படுகிறது. சிவ வாக்கியர் என்பது பாட்டின் இசைகொண்டு திருமழிசை ஆழ்வார் என்று தெரியலாம்.

---

தூயயோக மாயனுய்த் துழாயலங்கல் மாலையாய்
ஆமையாகி ஆழ்கட ற்றுயின்ற தேவதேவநின்
நாமதேயம் இன்ன தென்ன அல்லவல்லவாயினும்
சாமவேத கீதனுய சக்ரபாணி அல்லையே.

ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதியை
நாடி நாடி நாடி நாடி நாட்களுங் கழிந்துபோய்
வாடி வாடி வாடி வாடி மாண்டுபோன மானிடர்
கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே.

பதினெண்மர் பெயர்களில் விடுபட்டிருக்கும் பெயர்கள் தெரிய வந்ததும் பிற்பதிப்புக்களில் சேர்க்கப்படும்.

---

உ
திருச்சிற்றம்பலம்

ஆரூர்தில்லையம் பலம்வல் லம்நல்லம் வடகச் சியுமச்சிறு
பாக்கம்நல்ல, கூரூர்குடவாயில் குடந்தை வெண்ணிகடல் சூழ்கழிப்
பாலைதென்கோடிபீடார், நீரூர்வயல் நின்றியூர் குன்றியூருங்குருகா
வையூர், நாரையூர் நீடுகானப்பேரூர் நன்னீள்வயல் நெய்த்தானமும்
பிதற்றுய பிறைசூடிதன் பேரிடமே. (1)

அண்ணுமலை யீங்கோயுமத்தி முத்தாறகலாமுதுகுன்றங்
கொடுங்குன்றமுங்கண்ணுர் கழுக்குன்றங் கயிலை கோணம்பயில்கற்
குடிகாளத்திவாட்போக்கியும், பண்ணுர்மொழி மங்கையோர்பங்
குடையான் பரங்குன்றம் பருப்பதம் பேணிநின்றே, எண்ணுயிர
வும்பகலுமிடும்பைக்கடல் நீந்தலாங்காரணமே (2)

அட்டானமென்றேதிய நாலிரண்டு மழகன்னுறைகாவனைத்
துந்துறைகள் எட்டாந்திருமூர்த்தியின்கா டொன்பதுங்குளமூன்
றுங்களமஞ்சும் பாடிநான்கும் மட்டார்குழ லாள்மலைமங்கைபங்கன்
மதிக்குமிடமாகியபாழிமூன்றும் சிட்டானவன்பாசூரென்றே
விரும்பாயரும்பாவங்களாயின தேய்ந்தறுமே. (3)

அட்டானம் நாலிரண்டும் அட்டவீரட்டம் இவ்வடிகளில் துறை 8. காடு 9, குளம் 3. களம் 5. பாடி 4, பாழி 3. ஆகிய கூரப்பட்டுள்ளன, பாடல் பெற்றுள்ள தலங்களாக இப்போது உள்ளவை, துறை 13 (அன்பிலாந்துறை, ஆவடுதுறை, கடம்பந்துறை, பராய்த்துறை, பாலைத்துறை, பாற்றுறை, பேணும்பெருந்துறை, மயிலாடுதுறை, மாந்துறை, வெண்டுறை) காடு 10 (ஆலங்காடு, கச்சிநெறிக்கர்ரைகாடு, கொள்ளிக்காடு, சாய்க்காடு. தலைச்சங்காடு. தலை ஆலங்காடு, பனங்காடு, மறைக்காடு, வெண்காடு, வேற்காடு) குளம் 1 (கடிக்குளம்) களம் 3 (அஞ்சைக்களம், நெடுங்களம், வேட்களம்) பாடி 3 (ஆப்பாடி, எதிர்கொள்பாடி, மழபாடி) பாழி 1 (அரதை பெரும்பாழி)

அறப்பள்ளி அகத்தியான் பள்ளிவெள்ளைப் பொடிப்பூசியாறணி
வானமர்காட்டுப்பள்ளி சிறப்பள்ளி சிராப்பள்ளி செம்பொன்பள்ளி
திருநனிபள்ளிசீர்ம கேந்திரத்துப் பிறப்பில் லவன்பள்ளி வெள்ளச்
சடையான்விரும்பு மிடைப்பள்ளிவண்சக்கரமால் உறைப்பாலடி
போற்றக்கொடுத்தபள்ளி உணராய்மடநெஞ்சமே உன்னிநின்றே, (4)

ஆறைவடமாகறல்அம்பர்ஐயாறணியார்பெரு வேளூர்விளமர்தெங்கூரு
சேறைதுலைபுகலூரகலாதிவைகாதலித்தானவன் சேர்பதியே ...... (5)

மனவஞ்சர்மற்றோடமுன்மாதராருமதிகூர்திருக்கூடலில் ஆல
வாயும், இனவஞ்சொலிலாஇடைமாமருதும் இரும்பைபதிமா
காளம்வெற்றியூரும், கனமஞ்சினமால்விடையான்விரும்புங்கருகா
வூர்நல்லூர்பெரும்புலியூர், தனமென்சொலிற்றஞ்சமென்றேநினை
மின்தவமாம்மலமாயினதானறுமே, (6)

மாட்டூர்மடப்பாச்சிலாச்சிராமம்முண்டீச்சரம் வாதவூர்வார
ணுசி காட்டூர் கடம்பூர்படம் பக்கம் கொட்டுங்கடலொற்றியூர்மற்
றுறையூரவையும் கோட்டூர்திருவாமாத்துர் கோழம்பமும் கொடுங்
கோவலூர்திருக்குணவாயில், (7)

குலாவுதிங்கட்சடையான் குளிரும்பரிதிநியமம் போற்றா
ரடியார்வழிபாடொழியாத்தென்புறம்பயம்பூவணம்பூழியூரும் காற்
றூர்வரையன்றெடுத்தான்முடிதோளணரித்தானுறைகோயிலென்
றென்று நீகருதே. (8)

நெற்குன்றம் ஓத்தூர் நிறைநீர்மருகல்நெடுவாயில்குறும்பலா
நீடுதிரு நற்குன்றம்வலம்புரம் நாகேச்சுரம்நளிர்சோலையுஞ்சேனை
மாகாளம்வாய்மூர்கற்குன்றமொன்றேந்திமழைதடுத்தகடல்வண்
ணனும்மாமலரோனுங்காணச்சொற்கென்றுந்தொலைவிலாதானுறையுங்
குடமூக்கென்றுசொல்லிக்குலாவுமினே. (9)

குத்தங்குடிவேதிகுடிபுனல்சூழ்குருந்தங்குடிதேவன்குடி
மருவும் அத்தங்குடி தண்டிருவண்குடியும் அலம்புஞ்சலந்தன்சடை
வைத்துகந்த நித்தன்நிமலனுமையோடுங்கூடநெடுங்காலமுறை
விடமென்றுசொல்லாப்புத்தர்புறங்கூறியபுன்சமணர்நெடும்
பொய்களை விட்டுநினைந்துய்ம்மினே. (10)

அம்மானையருந்தவமாகிநின்றஅமரர்பெருமான்பதியானவுன்னிக்
கொய்ம்மாமலர்ச்சோலைகுலாவுகொச்சைக்கிறைவன்சிவ
ஞானசம்பந்தன்சொன்ன இம்மாலையீரைந்தும்இருநிலத்திலிர
வும்பகலுந்நினைந்தேத்திநின்று விம்மாவெருவாவிரும்பும்மடியார்
விதியார்பிரியார்சிவன்சேவடிக்கே. (11)

திருச்சிற்றம்பலம்

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# விருத்தாசலம் பெரிய நாயகியம்மை பதிகம்

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

விரிவுறு முருவ நாமம தகற்றின் விடயங்கள் விளங்குறு விதனுன்
மருவுறு பொறிபோம் பொறியறக்கரண மாய்ந்துறுங் கரணமாய் தலிறுற்
புருடன் முன்னேழுஞ் சுத்தமோ ரைந்தும் போமிதாற் சச்சிதா நந்தங்
கிரியையற் றிலங்கு மென்றனள் விருத்த கிரியமர் பெரியநா யகியே. (1)

உள்ப்படு முருவ நாமம தகற்றினுள்ள்சற் சிற்சுகந் தோன்றும்
வளப்படு மிதனு லுலகுகண் ணுடி வருநிழலாநிழன் மறிந்தால்
விளக்குறு ஞானவெளியதாமிதனின்விளையுமின்பெனவெனக்கிசைத்தாள்
கிளக்குறு தவத்தோர் தரித்துரை விருத்த கிரியமர் பெரியநா யகியே. (2)

பழுதையென் றுணரிற் றன்முன்ர்த் தோன்றும் பாம்புமப் பழுதையா
[மதுபோன்
முழுதுண ரறிவாந் தன்னையே காணின் முரணுறு சராசர மெவையும்
மெழுதரு மறிவா விளங்குமென் றிசைத்தா ளெழுபவந் துடைத்தெனை
[யளித்த
கெழுமணி முத்த நதிசெறி விருத்த கிரியமர் பெரியநா யகியே. (3)

சொருபமே தானென் றுணர்தரிற் பரனுந்துகளுறு சீவனு ஞ்சகமு
மருவுதன் னினைவி லெழுந்தமித் தைகளாம் வந்திடு பந்தம் வீடிலவா
மொருவுயிர் தானென் றுணரிலம் மூன்று முளபந்தம் வீடுமுண் டென்ருள்
கிரிதவப் பயனுய் வருமொரு விருத்த கிரியமர் பெரியநா யகியே. (4)

அறிபொரு ள்றிவோ ன்றிவினைக் கொடுப்போ னுனமுப் பொருளு மோர்
[விடயம்
பொறியுறப் பிடித்தா லுள்விதை விடுத்தோர் பொருளை நாடுதன்முன
[ரிடையே
பிறிவறத் தோன்றுஞ் சொருபமிந் நிலையிற் பேசுமுப் பொருள்களு
[மிலவாங்
கிறியற் வறிதி யென்றனள் விருத்த கிரியமர் பெரியநா யகியே. (5)

அரவிலை பழுதை யுணர்ந்தவர்க் கதுபோ லகிலமெய்ப் பொருளினை
[யுணர்ந்தோர்க்
கொருவுரு திருத்த லெனையெனிற் கான் லுறுசல மிலையென வுணர்ந்தும்
மருவலி ஞனு விகாரமே தென்னின் மலிகன வினிலுறு மென்ருள்
கிரு துசெய் மறையோர் பரவிய விருத்த கிரியமர் பெரியநா யகியே (6)

தடத்தின் மற்றதனிற்றங்கு பல்கடத்திற்சாயையுஞ் சாயையில்லதுமாய்த்
திடத்தோடு விளங்கும் விசும்புபோ லீசன் சிவனிங் கிருவர் சாட்சிகளா
மிடத்துறும் பினையிற் றேன்றுறுஞ் சிவமிங் கிருவர் சாட்சிகளுமொன்
[றென்ருள்
கிடைத்தநன் னிதியா யெனக்குறும் விருத்த கிரியமர் பெரியநா யகியே(7)

ஆருயிர் தானுமவன் மனந்தைச தகங்கரத் துதித்தது வாகும்
பேருயிர் சாட்சி யானவன் மனமோ பின்னையா மாதலா லவற்குக்
கூருறுமுலக மயக்கமா மிவற்குக் குறித்ததன், லீலையா மென்ருள்
கிரனை யளித்தோற் குவந்ததாய் விருத்த கிரியமர் பெரியநா யகியே. (8)

ஓதுறுநாம மகற்றிடிற் றேன்றுமுள் ளசற் சிற்சுக மிதுவே
தீதறுசிவ சாட்சியிங் கிதனைத் தெரிந்திடுஞ் சிவனு மிதுவா
யேதமொன் றில்லாப் பிரமமா மென்றெ னிருளற வருள்புரிந் தளித்தாள்
கேதமி றவத்தோர் சூழ்தரும் விருத்த கிரியமர் பெரியநா யகியே. (9)

எஞ்சுறு முளத்தோ டென்னையா ரென்றே யிரங்கியே திரிந்துழல்வேனை
மஞ்சுறழ் காத்துக்கன் னனைக்குந்தி மகனென வுணர்த் துதல் கடுப்ப
வஞ்சலென் றழைத்து நீயது வாகுமைய மின்றென்னவே யளித்தாள்
கிஞ்சுக வாயாலுஞ்சிட விருத்த கிரியமர் பெரியநா யகியே. (10)

பெரிய நாயகியம்மை பதிகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

---

உ

சிவமயம்

## ஆறுவது ஸ்வரூபானந்த சுவாமிகள்
## துவாதச நாம சங்கீர்த்தனம்

எண் சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

*பேசவாதி மறைநாலு மோர்விரகு, பேசிலாமை னனிபேசு பாதநம*
*கூசவானவர்கள் கூறயானுனடி, கூறுமாறு னருள்கூரு கோலநம*
*தூசவாபரண மாரமாலைதரு, சோபை மாதருடறாய்தில் பாதவரை*
*கேசவாதி யெனவேச வாய்மையருள், கேசவாய நம கேசவாய நம.*

வேறு

*ஆராய வேதமுடி வானத பாதநம, வாசாபி சாசமற வேயாளு பாதநம,*
*சீராய வானவர்க டேவாதி தேவநம, தேனுருபாத மலர் சீராக*
*வோதுதொறு*
*நீராய வானவரை நேர்காணு பாதநம, நீதானதாகுமென நேரோது*
*மாசில்பொரு*
*ளூராய ளுயபத மாநாட வோதிநம, நாராயணாய நம நாராயணாயநம.*

வேறு

வாத வாதரறியாதபாதநம மாகர்நாடரியவேக பாதநம
வோது வாறிய வேதநாலுமன, மோர்வுருததென வோது பாதநம
சீதவாத வழல்சேருமாதவர்கள் சேருமாறுனடி தேரு மாறருளி
மாதவாவிலழி வேனேயாளுநம, மாதவாயநம மாதவாயநம.

வேறு

தாரம் போதுபொரு டானென்றேதிநம, தாரம் பாலர் பலர் சார் பென்
றேதிநம
வீரம் போது தலைமீதந்தாளுநம வேகம்போதி லெரி மாகங்காலவனி
சாரம் போதகனு மாவிங் கோதிநம அஞ்ஞானம்போயழிய நாசஞ்சேரியம
கோரம் போகவெனேயாளும் கோலாநம, கோவிந்தாயநம கோவிந்தாயநம

வேறு

கட்டமாம் வினைகைத்த தாணம, கத்தும் வாதியர் கைப்படாய்நம
விட்டமானவர் பத்தியாய்நம வெற்றியாள வல்வித்தகாநம
வெட்டுமாவுரு வத்தனேநம, வெட்டொணு வருவத்தனேநம
வெட்ட மாவர கிட்டுவாய்நம விட்டுவேநம விட்டுவேநம.

வேறு

பிறை சூடுவோனுமரி பிரமாவு மாதிநம, பெரு வானமாதி நிலவரை நாச
காரிநம
துறை கூறுவா தருள மிருளானபாதநம சுரூபா வெனுவுருகுமவர்காணு
சோதிநம
வறை கூவி நாயனேய மெனேயாளுபாதநம, வமரேச ராலுமறி வரிதாய
பாத்நம
மறை சூடி காபரண வணியான பாதநம, மதுசூதனுயநம மதுசூதனுயநம.

வேறு

புரையற்றி யாவை யினுநிலையுற்ற பாதநம, புகழுற்ற தோறுமுடல்
புளகித்து ணேய மொரு
கரையற்ற மாதவர்கடமை கைத்தலாமலக, கனியொக்கநாடிமிகு
க்ளியுற்ற பாதநம
வுரையற்ற தாயுமறை யுணர்விற்படாததென வொழிவற்ற சோதிவர்
வழியிட்ட வீரநம
திரையற்ற வார்கலியதென வைத்த பாதநம, திரிவிக்ரமாயநம
திரிவிக்ரமாயநம.

வேறு

சோமனுதி சுடர் பூமுனுயபொரு டோமி லாதவுயிர் தோறு மேவிநம
நாமநாடுரு வம்யாவுமாகியொரு, நாமரூபமறு நாதபாதநம
தாய்முனுகி வருசார்பியாவுநின, தாளலாதறிவிலாத தாபதர்கள்
வாய் மனுலயம் விடாத சோதிநம, வாமனுயநம வாமனுயநம.

வேறு

வேதராகியுடன் வீடுசேரும்வகை, மேவுமாதரவி ஞர்களாயகில
பூத்ராலும் வழிபாடுமேவுமிரு, போதெனுவுமு ரையாடுமாயநம
மாத ராதலம வான நாடர் தொழு, மாகரா சர்பதமாய் விலாமையில
சீத ராத ரவில் வீத்ராகர றி, சீதராயநம சீத்ராயநம.

வேறு

கழல்சூடு வாரிதய கமலாலயாயநம, கலிகாலன் வாயின்மணே யிடு கால
காலநம
வழல்சேர்மு னேயழியு மெழுகாக வேயுருகு, மடியார் கடாமறிய வுள
தான பாத நம
குழல் சேருமாறின் மொழிமட வார்கள் காதன்மிகு கொடியேனேயாள
வொருகுருவான கோலநம
வெழில் சேருமா முனிவர் தொழுமாதி நாதநம, வ்ருஷிகேசவாயநம
வ்ருஷிகேசவாயநம.

வேறு

சித்தரா ஞர்களறி சிற்பிரகாசாயநம, செற்றமார் வாதின் மயல் செற்ற
தாடாள நம
மத்தரா யோதுபத கத்தில்வாதேயொழிய, மற்றிலாதாரமருள் வைத்த
மாமாய நம
நித்தவா வேவல் செய்து நிற்க நேராதுனடி, நித்தமா மேவல் செய்து
நிற்க மாலாகுமதி
பத்தரா ஞர்கள்பெறு பத்மபாதாய நம, பத்மபாதாயநம பத்மபாதாயநம.

வேறு

ஆமுதை தியவனி யாகாச மாகி நம, வாஞலு நீமுழுதுமாகாத சோதி நம
சீமுதவாக னன்முவாஞு ளோர்பரவு, தேவேச ராலுமறி வாகாததேசநம
மாமுது நான்மறைக்ள் வாசர்ம கோசர மென், வாடாத பாதமலர் வாயார
வோது தொறுந்
தாமுது காரமெனலா நேசர்சார்புநம, தாமோதராயநம தாமோதராயநம.

## கட்டளைக் கலித்துறை

கேசவ நாராயணன்கிளர் மாதவன் கேடொன்றிலாத்
தேசமர் கோவிந்தன் விட்டமெதுத் திரிவிக்கிரமன்
வாசமுன் வாமனன் சீதரன் மன்னுமி ருடிபத்ம
ஞசமிரு மோதரனுருவாய் நின்ற நாமங்களே.

துவாதச நாம சங்கீர்த்தன முற்றுப்பெற்றது.

அகரம் ஆயிரம் அந்தணார்க் கீயிலென்
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென்
பகரும் ஞானி பகலூண் பலத்திற்கு
நிகரிலை யென்பது நிச்சயந் தானே. — திருமூலர்.

---

உ

திருச்சிற்றம்பலம்

## திருநல்லூர்ப் பெருமணம்

---

பண்—அந்தராணிக்குறிஞ்சி

கல்லூர்ப் பெருமணம் வேண்டாகழு மலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டு மெய்யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம்பானே.

நறும்பொழிற் காழியுள் ஞானசம்பந்தன்
பெறும் பதநல்லூர்ப்பெருமணத்தானை
உறும் பொருளாற் சொன்னவொண் தமிழ்வல்லார்க்
கறும் பழிபாவம் அவலம் இலரே.

ஆகத் திருப்பதிகங்கள் 383.

மூன்றுந் திருமுறை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

---

ஸ்ரீ முருகன் அச்சகம், கும்பகோணம்.

ப்ரம்மமோன நிர்வாண முத்துக்குமாரசுவாமிகளின் நற் சரிதம் 106 பக்கங்கள் ஒரு பாகமாகவும், சுவாமிகளின் பாராட்டுரைகளும், சீடர்கள் சரிதமும் சேர்ந்து 82 பக்கங்கள் ஒரு பாகமாகவும், அச்சிடுவதற்காக சுவாமிகளின் சொற்படி பக்தர்களால் 1958-ஷு ஜூன்-மீ 2உ முதல் நேரிலும், மணியார்டர் மூலமாகவும் காசுக்கடை, திரு. அ. சு. ச. மகாலிங்கம் செட்டியாரிடம் வந்த துகைகளில் 3-9-59ல் சுவாமிகளும், மகாலிங்கம் செட்டியாரும் பேப்பர் வாங்குவதற்காக ஸ்ரீ முருகன் அச்சக உரிமையாளர் திரு. ப. சாமிநாத பிள்ளை மாமனார் திரு. பரசுராம பிள்ளையிடம் ரூ. 1001-00 கொடுத்து, பின்பு மகாலிங்கம் செட்டியார் தனிமையாக கொடுத்து சுவாமிகளிடம் தெரிவித்ததும் உள்பட ரூ. 2103—00-க்கு பாராட்டுரைகள் 2500 அச்சடித்ததில், 500 புத்தகங்கள் 1960-ஷு முற்பகுதியில் அனுப்பியும் கொடுத்தும், பிற்பகுதியில் நற்சரிதம் மட்டும் 2000 அச்சடித்து முன் தங்கியிருக்கும் பாராட்டுரைகளுடன் சேர்த்து வெளியிட அச்சகத்திற்கு முன் செல்லானது போக சேரவேண்டிய துகை ரூ. 426/- இதற்கு மகாலிங்கம் செட்டியாரிடம் உள்ள கையிருப்பு துகை ரூ. 225-91-ம், அச்சகத்தார் ரூ. 200-09 ஒத்துக்கொள்ளும் வகையிலும் பாக்கித் துகை பூராவும் நேராகிவிடுகிறது. இந்நிலையில் சுவாமிகள் சொற்படி ரூ. 50/- வந்திருப்பதால் நற்சரிதம் 280 காலிகோ பைண்டு புத்தகமும், 1720 சாதா பைண்டு புத்தகமுமாக கொடுத்து, சந்தோஷப்படுத்தி சுவாமிகள் அச்சகத்திற்கு ரூ. 11- அளித்து இக்கைங்கர்யம் பூர்த்தி பெறுகிறது. ஸ்ரீசுவாமிகள் சரித்திர நூலை தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம், சமஸ்கிருதம் போன்ற பிற மொழிகளில் ஸ்ரீ சுவாமிகள் உத்திரவு பெற்று பிரசுரிக்கலாம். ஸ்ரீ சுவாமிகள் இள வயது போட்டோவும், மதிய வயது போட்டோவும், ஸ்ரீ சிவராமலிங்க சுவாமிகள் போட்டோவும் வேண்டுவோர் சுவாமிகளிடம் வாங்கிக்கொள்ளலாம்.

குறிப்பு:— மேற்கண்ட விபரப்படி இந் நற்சரிதம் வெளியிட சிலவானது மொத்தம் ரூ. 3145—33.

இறை வாழி நாதனருள் வாழி தாளினிசை வாழி யாவும் இயல்வாழியே !
மறை வாழி மோன மொழி வாழி ஆறுவழி வாழி ஞானவிழி வாழியவே !!

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ஞான அம்மானே | | அவன் | அவள் |
| XIX | 27 | வரலாறு | நற்சரிதம் |
| 7 | 24 | கணபதித்தோத்திர | கணபதிதோத்திர |
| 9 | 10 | அவிடம் | அவ்விடம் |
| ... | 12 | துறவர | துறவற |
| ... | 21 | இடத்துபிள்ளை | இடத்துப்பிள்ளை |
| 12 | 13 | அரைக்காடரவாதி | அரைக்காடரவா ஆதி |
| 13 | 7 | என்னுலி | என்னுவி |
| ... | 22—24 | துரை | துறை |
| 16 | 15 | சபைபில் | சபையில் |
| 17 | 7 | சிக்கல்ப்பொ | சிக்கல்பொ |
| 19 | 17 | பிரபோதச்சந்தி | பிரபோதசந்தி |
| 20 | 13 | சிவலப்பெரி | சிவலப்பேரி |
| 31 | 8 | செய்யுளுக்கூச் | செய்யுளுக்குச் |
| 33 | 1 | குறவன் | குரவன் |
| 34 | 15-21வரை | விஞயகர் | விநாயகர் |
| 36 | 8 | திருவாவடுதுரை | திருவாவடுதுறை |
| 37 | 32 | இவிடம் | இவ்விடம் |
| 38 | 11 | அந்தபிறவி | அந்தப்பிறவி |
| 40 | 7 | அடியேன | அடியேன் |
| ... | 17 | சிவாசாரிய | சிவாச்சாரிய |
| 41 | 13 | வணங்கி | வணங்கித் |
| ... | 14 | தேர்தெரிசன | தேர்த்தெரிசன |
| ... | 19 | யாளொடும்முட | யாளொடுமுட |
| ... | 22 | வண்ணம்மறுமே | வண்ணமறுமே |
| 42 | 28 | விஞயக | விநாயக |
| 48 | 2 | பஞ்சாக்ர | பஞ்சாக்கர |
| 49 | 19 | விஞயக | விநாயக |
| 51 | 12 | எங்கனே | எங்களை |
| 57 | 18 | விஞயக | விநாயக |
| 58 | 31 | திருநீராக | திருநீருக |
| 59 | 10 | மகாராஜாத்துறவு | மகாராஜாதுறவு |
| ... | ... | நூல்களை | நூல்களைப் |
| ... | 27 | அணிந்துக்கொண் | அணிந்துகொண் |
| 66 | 14 | உபன்னியாச | உபந்நியாச |
| 71 | 31 | வேதாராண் | வேதாரண் |

வல்லினம் மெல்லினம் இடையினம் பிழைகளை பெரியோர்கள் பொறுத்தருள்க.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

## இப் புத்தகம் வெளியிடுவதற்கு உதவிய அன்பர்கள் வசூல், செலவு விபரம்.

| | ரூ. | ந.பை |
|---|---|---|
| ஸ்ரீ தருமபுரம் ஆதீனம் அவர்கள் | 116 | 00 |
| R. கந்தசாமி மூப்பனர், கும்பகோணம் | 151 | 00 |
| M. C. S. ரெத்தினசபாபதி செட்டியார், கும்பகோணம் | 101 | 00 |
| S. மகாலிங்கம் செட்டியார் & பிரதர் கும்பகோணம் | 101 | 00 |
| முத்துசாமி கவுண்டர், துடியலூர் | 111 | 00 |
| M. நஞ்சப்ப கவுண்டர், கோயம்புத்தூர் | 101 | 00 |
| ஜானவிநாயகம், வைய்யம்பாளையம் | 121 | 00 |
| K. குழந்தைவேலு மூப்பனர், பருத்திக்குடி | 101 | 00 |
| G. கருப்பையா மூப்பனர், சுந்திரப்பெருமாள்கோவில் | 100 | 00 |
| T. வெங்கடேசம் பிள்ளை, ஆச்சாள்புரம் | 51 | 00 |
| G. முத்துக்கிருஷ்ணன், சென்னை (மதருஸ்) | 51 | 00 |
| ச. நடேசப்பிள்ளை, காரப்பாக்கம் | 56 | 00 |
| V. கிருஷ்ணசாமி நாயுடு, சிரவணம்பட்டி | 35 | 00 |
| கிருஷ்ண மெட்டல் ஒர்க்ஸ், காளஹஸ்தி | 40 | 00 |
| G. சுப்ரமண்ய மூப்பனர், கபிஸ்தலம் | 25 | 00 |
| A. ரெத்தினசாமி, மேலகபிஸ்தலம் | 25 | 00 |
| ஓர் அன்பர், கும்பகோணம் | 25 | 00 |
| V. S. குஞ்சிதபாதம் செட்டியார் கும்பகோணம் | 15 | 00 |
| R. நஞ்சப்ப செட்டியார், கரியாக்கவுண்டனூர் | 22 | 00 |
| K. R. திருவேங்கிட மூப்பனர், கபிஸ்தலம் | 20 | 00 |
| A வெங்கிடுசாமி நாயுடு, வைய்யம்பாளையம் | 15 | 00 |
| பாலகிருஷ்ண நாயுடு, மணியம், வெள்ளமடைதோட்டம் | 15 | 00 |
| அனந்த பிள்ளை, மேலக்கடம்பூர் | 15 | 00 |
| து. மனோன்மணி அம்மாள், புளியம்பட்டு | 15 | 00 |
| நாராயணசாமி மெட்டல் பாக்டரி, பானகல் (காளஹஸ்தி) | 21 | 00 |
| வெங்கடாஜலபதி மெட்டல் ஒர்க்ஸ், பானகல்(காளஹஸ்தி) | 20 | 00 |
| வே. நீ. கண்ணப்ப முதலியார், பானகல் (காளஹஸ்தி) | 15 | 00 |
| S. நாராயணசாமி நாயுடு, பானகல் (காளஹஸ்தி) | 11 | 00 |

(வையம்பாளையம் R. சீனுவாசலு நாயுடு கையெழுத்திட்ட துகை வராததால் வசூலாகவேண்டிய தொகை ரூ. 101—00)

| | ரூ | ந.பை |
|---|---|---|
| ஸ்ரீ ஸ்ரீ முருகன், கொடுமுடி | 11 | 00 |
| த. வீரபாகு பிள்ளை, விருத்தாஜலம் | 11 | 00 |
| R. D. வெங்கிடகிருஷ்ணன், ரெட்டியூர் | 11 | 00 |
| A. ரெங்கநாத ரெட்டியார், ரெட்டியூர் | 11 | 00 |
| தொ. அ. வெங்கிடபெருமாள், தொழுப்பேடு | 11 | 00 |
| V. R. R. & Co., தொழுப்பேடு | 11 | 00 |
| ஓர் அன்பர், தொழுப்பேடு | 11 | 00 |
| T. நாராயண ரெட்டியார், கடமலைபுத்தூர் | 11 | 00 |
| சிவராம. அ. நடராஜ முதலியார், அம்பாசமுத்திரம் | 11 | 00 |
| மா. ஆ. சி. சுப்பையா முதலியார் & பிரதர்ஸ் ,, | 11 | 00 |
| வே. ராம. சங்கரசுப்பையா முதலியார் ,, | 11 | 00 |
| A. VR. M. வேலாயுத முதலியார் சன்ஸ் ,, | 11 | 00 |
| ஜமால் மொய்தீன் பாப்பா, ஆடுதுறை | 11 | 00 |
| A S. K. சன்ஸ், கும்பகோணம் | 11 | 00 |
| S. முத்துசாமி மூப்பனர் | 10 | 00 |
| R. ராமகிருஷ்ண நாயுடு, பெரியநாயக்கன்பாளையம் | 10 | 00 |
| ஸ்ரீ முருகன் நிலயம், வட கோயம்புத்தூர் | 10 | 00 |
| ஞானம்பிகா மில்ஸ், V. C. சுப்பையா கவுண்டர், ,, | 10 | 00 |
| செ. சிதம்பர மூப்பனர், பாலைப்பாடி | 10 | 25 |
| ஞானபிரகாசம், பெண்ணுகடம் | 10 | 00 |
| வெ. நடராஜ உடையார், முகுந்தநல்லூர் (பெண்ணுகடம்) | 10 | 00 |
| அ. ரெ. மாணிக்கம் பிள்ளை, ஜெயங்கொண்டம் | 10 | 00 |
| R. குஞ்சிதபாதம் பிள்ளை. ஜெயங்கொண்டம் | 10 | 00 |
| K. நாராயணசாமி, ஜெயங்கொண்டம் | 10 | 00 |
| A. S. சகஜானந்தம், நந்தனார் மடம், சிதம்பரம் | 10 | 00 |
| வெ. மு. சிதம்பர நாதன், சிதம்பரம் | 10 | 00 |
| D. கண்ணையா பிள்ளை, சிதம்பரம் | 10 | 00 |
| சு. குஞ்சிதபாதம், ஓரத்தூர் | 10 | 00 |
| பழனியாண்டவர் ஜின்னிங் பாக்டரி S. K. கிருஷ்ண நாயுடு, அத்திப்பாளையம் | 10 | 00 |
| A. R. ராமசாமி ஆச்சாரியார், அத்திப்பாளையம் | 10 | 00 |
| நா. ராமகிருஷ்ண நாயுடு, வெள்ளமடைதோட்டம் | 10 | 00 |
| B. வெங்கட்டராமன், வெள்ளமடைதோட்டம் | 10 | 00 |
| அ. சு. வீரபத்ர பிள்ளை, வேதாரண்யம் | 10 | 00 |
| A. K. R. முத்துக்குமாரசாமி பிள்ளை, வேதாரண்யம் | 10 | 00 |
| A. வேதரெத்தினம் பிள்ளை, வேதாரண்யம் | 10 | 00 |
| ஜெயராம் மெட்டல் பாக்டரி, காளஹஸ்தி | 10 | 00 |

| | ரூ. | ந.ஃ |
|---|---|---|
| ஸ்ரீ P. V. ராமச்சந்திர ராவ், காளஹஸ்தி | 10 | 00 |
| விஸ்வநாதன், ரெட்டியூர் | 10 | 00 |
| K. ராமதாஸ், ரெட்டியூர் | 10 | 00 |
| R. முத்துக்குமரசாமி, ரெட்டியூர் | 10 | 00 |
| K. எத்திராஜுலு ரெட்டியார், ரெட்டியூர் | 10 | 00 |
| G. அழக பிள்ளை, வடக்கு ஆலத்தூர் | 10 | 00 |
| K. சந்திரகாச பிள்ளை, மேல கடம்பூர் | 10 | 00 |
| ராமானுஜம் பிள்ளை, மேலகடம்பூர் | 10 | 00 |
| G. ராமய்யா பிள்ளை, மேலகடம்பூர் | 10 | 00 |
| ராஜம்மாள் ஆச்சி, மேலகடம்பூர் | 10 | 00 |
| A. கருப்பையா மூப்பனுர், கபிஸ்தலம் | 10 | 00 |
| A. கோவிந்தசாமி மூப்பனுர், கபிஸ்தலம் | 10 | 00 |
| சுந்தரப்பெருமாள் கோவில் மீனுக்ஷி அம்மாள் எஸ்டேட் | 10 | 00 |
| முத்த. வெ. சொக்கலிங்கம் செட்டியார், கும்பகோணம் | 10 | 00 |
| P. R. பொன்னுசாமி சேர்வை, கும்பகோணம் | 10 | 00 |
| தி. ராம. தி. தேவக்கோட்டை | 10 | 00 |
| க. ராமண கவுண்டர், தேவம்பாளையம் | 9 | 00 |
| வெ. கிருஷ்ண நாயுடு, தேவம்பாளையம் | 7 | 00 |
| முருகேசம் பிள்ளை, தர்மநல்லூர் | 7 | 00 |
| வெங்கிடுசாமி நாயுடு, வயல் தோட்டம், சுண்டக்காமுத்தூர் | 6 | 00 |
| P. கிருஷ்ணசாமி பிள்ளை, சுண்டக்காமுத்தூர் | 6 | 00 |
| ஆ. ரெத்தினசாமி முதலியார், சுண்டக்காமுத்தூர் | 6 | 00 |
| லீலாவதி (முனிசாமி நாயுடு மகள்) வைய்யம்பாளையம் | 5 | 00 |
| N. துரைசாமி நாயுடு, மணியம், வைய்யம்பாளையம் | 5 | 00 |
| மு. காளியப்ப கவுண்டர், வைய்யம்பாளையம் | 5 | 00 |
| மா. உத்தண்டி செட்டியார், குன்னத்துபுதூர் | 5 | 00 |
| P. A. கோவிந்தசாமி, குன்னத்துபுதூர் | 5 | 00 |
| சங்கைய்யா செட்டியார், குன்னத்துபுதூர் | 5 | 00 |
| S M. பழனி கவுண்டர், சிரவணம்பட்டி | 5 | 00 |
| P. சுப்பைய்யாச்சாரி, கரியாகவுண்டனூர் | 5 | 00 |
| A குப்புசாஸ்த்திரி பிள்ளை, கொண்டயம்பாளையம் | 5 | 00 |
| V. ரெங்கனுதன், கொண்டயம்பாளையம் | 5 | 00 |
| K. வெங்கடேசலு, கொண்டயம்பாளையம் | 5 | 00 |
| ம. க. நடேச கவுண்டர், கணபதி, கோயம்புத்தூர் | 5 | 00 |
| M. கிருஷ்ணசாமி கவுண்டர், கணபதி, கோயம்புத்தூர் | 5 | 00 |
| N. கோவிந்தசாமி நாயுடு, காந்திபுரம், கோயம்புத்தூர் | 5 | 00 |

| | | ரூ. | ந.பை |
|---|---|---|---|
| ஸ்ரீ | நாகம்மாள், காந்திபுரம், கோயம்புத்தூர் | 5 | 00 |
| | பொள்ளாச்சி, ராஜு செட்டியார், காந்திபுரம், கோயம்புத்தூர் | 5 | 00 |
| | N. நாராயணசாமி நாயுடு, வீரவாண்டிபுதூர் | 5 | 00 |
| | மீனாக்ஷி அம்மாள், தேவனூர்புதூர், உடுமலைப்பேட்டை | 5 | 00 |
| | A. R. M. சுப்பையா முதலியார், அம்பாசமுத்திரம் | 5 | 00 |
| | ஆ பொ. குத்தாலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி | 5 | 00 |
| | அருணாஜலம் பிள்ளை, திருநெல்வேலி | 5 | 00 |
| | தி. சீனிவாச தாஸ் & தி. வெங்கடசுப்பய்யா, வெங்கடகிரி | 5 | 00 |
| | அரிகல சுப்பையா, சுப்பையா வெங்கடகிரி | 5 | 00 |
| | ஜெ. வி. எஸ். தர்மா ராவ், வெங்கடகிரி | 5 | 00 |
| | K. ரெங்கசாமி ரெட்டியார், தொழுப்பேடு | 5 | 00 |
| | S. ராமலிங்கா ரெட்டியார். தொழுப்பேடு | 5 | 00 |
| | தொ. ச. சுந்திரவரதா ரெட்டியார் தொழுப்பேடு | 5 | 00 |
| | பரமசிவ மூப்பனார், அனிமங்கலம் | 5 | 00 |
| | ராமசாமி மூப்பனார், அனியமங்கலம் | 5 | 00 |
| | வை. கோவிந்தசாமி மூப்பனார், பாலையப்பாடி | 5 | 00 |
| | R. சுந்திரேசம் பிள்ளை, தேவன்குடி | 5 | 00 |
| | R. ராமசாமி பிள்ளை, தேவன்குடி | 5 | 00 |
| | ந. வ. முத்து செட்டியார், பெண்ணாகடம் | 5 | 00 |
| | சு. பாலகிருஷ்ண பிள்ளை, விருத்தாஜலம் | 5 | 00 |
| | கி. ராஜாங்கவேல் படையாச்சி, கோட்டகம் | 5 | 00 |
| | ந. வே. ரெத்தினசபாபதி செட்டியார், வளையமாதேவி | 5 | 00 |
| | ஸ்ரீ வேலன் பிரஸ், சிதம்பரம் | 5 | 00 |
| | து. வீரப்ப முதலியார், ஜவுளி வியாபாரம், சிதம்பரம் | 5 | 00 |
| | A. C. சுப்ரமண்யம், டாக்டர், சிதம்பரம் | 5 | 00 |
| | V. PM. ST. N. அம்பலவாண பிள்ளை, சிதம்பரம் | 5 | 00 |
| | ப. பாலகிருஷ்ண உடையார், ஏரி | 5 | 00 |
| | பெ. சாமினாத மூப்பனார், ஏரி | 5 | 00 |
| | சபாபதி முதலியார், ஆச்சாள்புரம் | 5 | 00 |
| | கோ. துளசி அய்யா நாயக்கர், மணக்குண்டு | 5 | 00 |
| | R. பரசுராமன், ஸ்ரீ முருகன் அச்சகம், கும்பகோணம் | 5 | 00 |
| | S. தீனதயாளு நாயுடு, கும்பகோணம் | 5 | 00 |
| | S. R. பிச்சையா பிள்ளை, மேல கடம்பூர் | 5 | 00 |
| | V. S. முத்துக்குமரசாமி ரெட்டியார், மேல கடம்பூர் | 5 | 00 |
| | ரா. பாலசுப்ரமண்யன், மேல கடம்பூர் | 5 | 00 |
| | R. ரெத்தினசபாபதி பிள்ளை, அட்வகேட் | 5 | 00 |

| | ரூ. | ந.பை |
|---|---|---|
| ஸ்ரீ சோமசுந்திர மூப்பனர், V.H.M. சுந்தரபெருமாள்கோவில் | 5 | 00 |
| கஸ்தூரி அம்மாள் எஸ்டேட் | 5 | 00 |
| சரோஜா அம்மாள் எஸ்டேட் | 5 | 00 |
| வலங்கிமான் கிருஷ்ணப்பிள்ளே | 5 | 00 |
| மு. ராமலிங்கம் | 5 | 00 |
| R. சவுந்திரராஜன் | 5 | 00 |
| P. V. A. கோவிந்தசாமி அய்யர் | 5 | 00 |
| ரூ. 1 முதல் ரூ. 4 வரை பல ஊர்களில் அன்பர்கள் அளித்தது | | |
| வைய்யம்பாளையம். அருக்கன்பாளையம் முதலிய ஊர் | 175 | 00 |
| சிதம்பரம், விருத்தாஜலம், காட்டுமன்னர்கோவில் முதலியஊர் | 101 | 00 |
| கும்பகோணம், கபிஸ்தலம், சுந்தரப்பெருமாள் கோவில் முதலிய ஊர் | 166 | 00 |
| திருநெல்வேலி, வல்லநாடு, சேர்மாதேவி முதலிய ஊர் | 39 | 00 |
| சித்தூர் ஜில்லா | 51 | 00 |
| ரூ. 1-க்கு குறைந்த வசூல் தொகை | 7 | 99 |
| ஆக கூடுதல் | 2895 | 24 |

## செலவு விபரம்.

| | | | |
|---|---|---|---|
| முகவுரை 500, முகவுரையுடன் கூடிய சுவாமிகள் சற்சரிதம் 2000 புத்தகங்கள் பிரிண்டிங் செய்ய ஸ்ரீ முருகன் அச்சகத்திற்கு கொடுத்தது | ரூ. | 2103 | 00 |
| பிளாக் தயார் செய்யவும், போட்டோ கண்ணாடி போடவும் ... ... | ரூ. | 59 | 56 |
| தபால் சிலவு ... ... | ரூ. | 23 | 75 |
| சரித்திரம் தொகுத்து எழுதிய திருவாவடுதுறை அய்யருக்கு சிலவு செய்தது ... ... | ரூ. | 17 | 25 |
| வஸ்திரம் கிரயம் ... ... | ரூ. | 10 | 39 |
| பால், பழம், பலஹாரம் கூடுதல் ... ... | ரூ. | 35 | 00 |
| சிஷ்யருடன் பல ஊர்கள் போய்வந்த சிலவு ... | ரூ. | 420 | 38 |
| ஷை புஸ்தகங்களுக்கு கூடுதலாகும் கிரயம் கொடுக்க வேண்டியதுள்பட ரூ. 3095—33, இதில் மகாலிங்கம் செட்டியாரிடம் வரவு வந்த ரூபாய் 2531—41-க்கு ஷையார் மூலம் செலவானது ரூ. 2305—50 போக மீதியிருந்த தொகையை பிரஸ்ஸுக்கு கொடுக்கச்சொன்ன வகையில் ... | ரூ. | 225—91 | |
| ஆக செலவு கூடுதல் ... | ரூ. | 2895 | 24 |

குறிப்பு:— காலிகோ பைண்டு புஸ்தகம் 1800 பைண்டு செய்ய மேலும் துகை வேண்டியதாயிருக்கிறது.

